உ
குருபாதம்

உமாபதி தேவநாயனார்

அருளிய

# திருவருட் பயன்

(விளக்கவுரை)



தருமை ஆதீனம்

2020

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

உமாபதி தேவநாயனார்

அருளிய

# திருவருட் பயன்

விளக்கவுரை

இந்நூல்
திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்
27-வது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்
திருவுளப்பாங்கின் வண்ணம்
தருமைஆதீன ஆவணிமூல விழா மலராக
(சார்வரி – ஆவணி 12)
ஞானசம்பந்தம் பதிப்பகத்தில்
வெளியிடப்பெற்றது

தருமையாதீனம்
28.08.2020

வெளியீடு எண் : 651

முதற் பதிப்பு : 10.1.1974

இரண்டாம் பதிப்பு : 25.8.2004

மூன்றாம் பதிப்பு : 28.8.2020

அடக்க விலை : ரூ. 56.00

விளக்கவுரை ஆசிரியர் :

தருமையாதீனப் புலவர், சித்தாந்தக் கலைமணி,
மகாவித்துவான்,
முனைவர் திரு. சி. அருணைவடிவேல் முதலியார்

புத்தகம் வேண்டுவோர் அழைக்க
தொண்டை மண்டல சிவனடியார் திருக்கூட்டம்
சென்னை
செல்: 9840819439

பாரதி டிஜிட்டல் பிரிண்டர்ஸ், மயிலாடுதுறை. போன்: 220640

திருக்கயிலாய பரம்பரை தருமையாதீனம்
27 ஆவது குருமகாசந்நிதானம்



ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக
ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

# முன்னுரை

*"தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத்தருஞ்சத்தி*
*பின்னமிலான் எங்கள் பிரான்"*

- திருவருட்பயன்

இந்நூல், திருக்கயிலாயப் பரம்பரையில் புறச்சந்தான ஆச்சாரியார்களுள் நான்காமவராகிய உமாபதிசிவம் என்னும் ஞானாசிரியரால் அருளிச் செய்யபெற்றது. குறள் வெண்பா யாப்பில் அமைந்தமையினால் வீடுபேற்றினை உணர்த்தும் "மெய்ந்நெறித் திருக்குறளாக" உள்ளது. அறநெறித் திருக்குறளாகிய வள்ளுவரின் திருக்குறளில் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பொருள்கள் குறித்த விளக்கங்கள் உள்ளன. வீடுபேறு என்பது, "சிந்தையும் மொழியும் செல்லா நிலமைத்தது ஆதலின் அதனை வள்ளுவப்பேராசிரியன் துறவறம் என்னும் காரணவகையால் கூறினார் அன்றி வீடுபேற்றின் நிலை என்னும் காரியவகையால் கூறவில்லை" என்று பரிமேலழகர் விளக்கம் தந்துள்ளார்.

எனவே, திருக்குறளையும் இந்நூலாகிய திருவருட் பயனையும் இணைத்து ஓர் கட்டமைப்பில் படித்தால் "அறம், பொருள், இன்பம், வீடு" என்னும் நான்கு

உறுதிப்பொருள்களின் விளக்கங்களை உணரலாம்.

இந்நூலுக்குப் பலரும் உரையெழுதி இருந்தாலும், நம்முடைய தருமையாதீனப்புலவர், சித்தாந்தக் கலைமணி மகாவித்துவான் முனைவர் திரு.சி.அருணைவடிவேலு முதலியார் அவர்கள் எழுதியுள்ள உரை விளக்கம் போற்றத்தக்கது. இந்நூலின் 7ஆம் அதிகாரமாகிய "உயிர் விளக்கம்" என்னும் தலைப்பில் உள்ள ஓர் குறட்பாவிற்கு ஐயா அவர்கள் எழுதியுள்ள விளக்கம் மிக மிகச் சிறந்தது ஆகும்.

"தனக்கு நிழல் இன்றா ஒளிகவரும் தம்பம்
எனக்கவர நில்லா திருள்"

ஓர் உயிரானது கலைஞானமுற்று மெய்ஞ்ஞானம் பெற்றுச் சிந்தித்துத் தெளிந்த காலத்தில், தன்னிடத்தில் பிற பொருள்களின் உணர்வுகள் எவையும் இல்லையாகும் படி உயர்ந்து, இறைவனது திருவருள் உணர்வு ஒன்றையே பற்றி நிற்கும். இக்கருத்திற்கு உவமானம் சொல்லவந்த இந்நூலாசிரியர், ஒரு பளிங்குத் தூண் நிற்கும் போது தன்னிடத்துப் பிற பொருள்களின் நிழல்கள் எவையும் இல்லையாகும் படிச் சூரிய ஒளியையே பிரகாசிக்கின்ற ஒளிப்பிழம்பாகத் தோன்றுவதைக் காட்டியுள்ளார். இதுவே மேற்கண்ட குறளுக்குப்பொருள், தனக்கு நிழல் இல்லாமலும் ஒளிப்பிழம்பாகவும் பளிங்குத் தூண் விளங்குவது போன்றது என்கிறார் ஆசிரியர்.

இக்கருத்தினை விளக்கும் பொழுது,

மகாவித்துவான் அவர்கள், அபிராமி அந்தாதியின் பாடல் வரிகளை மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

"உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகம்

உணர்வுடையோர் மதிக்கின்ற மாணிக்கம்"

என்னும் வரிகளில் அபிராமித் தாயின் அன்பர் எப்படியிருப்பார் என்று விளக்கம் உள்ளது. உதிக்கின்ற சூரியனானவன் கிழக்கே இருக்கும் பொழுது மேற்கே நிழலும், மேற்கே இருக்கும் பொழுது கிழக்கே நிழலும் விழும். நிழலே விழாத நிலையில் ஒரு தூண் இருக்க வேண்டுமானால் உதிக்கின்ற சூரியன் உச்சிப்போதுக்கு வரும்பொழுது தான் அந்நிலையில், அத்தூணின் அடியில் கூட நிழல் இல்லாது இருக்கும். இது போன்று அபிராமித் தாயின் அன்பர்கள் தாங்கள் அருள் பெற்றது உண்மையானால் அஞ்ஞான இருள் அறவே நீங்கியவராக மெய்ஞ்ஞான வடிவமே உடையவராக இருத்தல் வேண்டும் என்கிறார் அபிராமிப்பட்டர்.

மகாவித்துவான் ஐயா அவர்கள், இக்கருத்தில் பட்டர் பாடியுள்ளார் என்பதை விளக்கி, இதனை இந்தத் திருவருட்பயன் குறளுக்கும் மேற்கோள் காட்டிப் பொருத்தியுள்ளார். "உதிக்கின்ற செங்கதிர் உச்சித்து இலகும் உணர்வுடையோர்" என்று அமைத்துப் பொருள் காணவேண்டுமே தவிர, உதிக்கின்ற செங்கதிர் "உச்சித்திலகம்" என்று ஓதுதல் கூடாது என்னும் நுட்பமான விளக்கத்தையும் ஐயா அவர்கள் வழங்கியுள்ளார்.

இத்தகைய மிகச்சிறந்த உரைவிளக்கம் தாங்கிய நூல் இது போது மூன்றாம் பதிப்பாக,

**திருக்கயிலாயப் பரம்பரைத் தருமபுரம் ஆதீனம் 27-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின்** திருவுளப்பாங்கின் வண்ணம் ஆவணி மூலவிழா மலராக வெளிவருகின்றது. வழிபாட்டிற்குரிய ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் பெருங்கருணையோடு வெளிவரும் இந்த நூலினை அன்பர்கள் பெற்றுக்கற்று இன்புறுவார்களாக.

ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் உத்தரவுப்படி,
**மு. சிவச்சந்திரன்**
இயக்குநர்,
அனைத்துலக சைவசித்தாந்த
ஆராய்ச்சி நிறுவனம்,
தருமபுரம், மயிலாடுதுறை.

தருமபுரம்,
21.08.2020.



# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

" நற்குஞ் சாக்கன்று நண்ணிற் கலைஞானம்
கற்குஞ் சாக்கன்று காண்."

சித்தாந்த சாத்திரங்களின் பொருள்கள் அனைத்தையும் சுருங்கக்கூறி விளங்க வைக்கும் நூல் திருவருட்பயன்.

நூறு குறள் வெண்பாக்களால் ஆகிய இந்நூல் பத்து அதிகாரங்களை உடையது. அதிகாரம் ஒவ்வொன்றும் பத்துப்பத்து குறட்பாக்களைக் கொண்டது. பதிமுதுநிலை , உயிரவைநிலை, இருள்மலநிலை , அருளதுநிலை, அருளுருநிலை, அறியும்நெறி, உயிர் விளக்கம் , இன்புறுநிலை , ஐந்தெழுத்தருள்நிலை , அணைந்தோர் தன்மை என்பன அவ்வதிகாரங்களின் தலைப்புக்களாகும்.

இந்நூலை அருளிச்செய்தவர் சந்தான ஆசாரியருள் நான்காமவராக விளங்கும் உமாபதி தேவ நாயனுர் ஆவர். அவர் அருளிய சாத்திர நூல்கள் சிவப்பிரகாசம் முதல் சங்கற்ப நிராகரணம் ஈ.றாக எட்டு நூல்களாகும். அவற்றைச் சித்தாந்த அட்டகம் எனக்கூறுவர்.

உமாபதி தேவநாயனார் திருவருட்பயன் என்ற இந்நூலின் அதிகாரங்களைக் கொண்டே மூவர் அருளிய தேவாரத் திருமுறைப்பதிகங்களை தேவார அருள்முறைத் திரட்டு என்ற நூலாகவும் தொகுத்து அளித்துள்ளார்.

இறைவனே குருவுருக் கொண்டு வாராத இடத்து மக்கள் சிவஞானத்தை அடைதல் இயலாது என்ற பொருளில்

"ஆறறிவார் எல்லாம் அகன்ற நெறியருளும்
பேரறிவான் வாராத பின் "

என்ற குறட்பாடலை இந்நூலில் அருளுரு நிலை என்ற அதிகாரத்தில் கூறி அருளியுள்ளார் அவ்வாசாரியர் மரபில் வந்தருளிய

நம் தருமையாதீன ஆதிபரமாசாரியராகிய ஸ்ரீ குருஞானசம்பந்தர் சிவபோகசாரத்தில்

ஆரறிவார் நீதிவழி ஆரறிவார் சித்திமுத்தி
ஆரறிவார் நற்றவங்கள் அன்பனைத்தும் - பாரெவர்க்கும்
கத்தன் கமலையில்வாழ் ஞானப்பிர காசனெனும்
அத்தன் என்போல் வந்திலன் ஆனால்

என அருளிச் செய்துள்ளார்.

நமது தருமை ஆதீனம் 26 – வது குருமூர்த்திகளாகிய **ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** அவ்வபோது சமய நெறிகளையும் சித்தாந்த சாத்திர மெய் நூற் பொருள்களையும் அன்பர்கட்கு உணர்த்தி வருவதோடு தருமை ஆதீன அனைத்துலக சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் பல மையங்களில் சித்தாந்த சாத்திர வகுப்புகளை நடத்துவித்து அன்பர்கள் பலரும் சைவ சித்தாந்த நுண் பொருள்களை அறியுமாறு செய்தருளி வருகின்றார்கள். மேலும் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் பெருங்கருணையோடு சித்தாந்த சாத்திர நூல்களைத் தெளிவான உரைவிளக்கங்களோடு மக்கள் படித்துப் பயன்பெறும் வகையில் நூல்களாக ஞானசம்பந்தம் பதிப்பக வாயிலாக வெளியிட்டருளி வருவதைச் சைவ உலகம் நன்கறியும் .

இதுபோது தருமையாதீன பூஜா மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்க நாதப்பெருமானுக்கு நிகழும் ஆவணி மூலச் சிறப்பு விழா மலராக திருவருட்பயன் என்னும் இச்சாத்திர நூலை வெளியிடுகின்றார்கள்.

இந்நூலுக்கு தருமையாதீனப்புலவர் , சித்தாந்த கலைமணி மகாவித்துவான் முனைவர் திரு . சி . அருணை வடிவேலு முதலியார் சிறந்த தெளிவுரையை எழுதியுள்ளார். இந்நூல் 1974ல் முதற் பதிப்பாக வெளிவந்தது. இது போது இரண்டாம் பதிப்பாக வெளியிடப் பெறுகிறது.

அன்பர்கள் பெற்றுக் கற்றுப்பயனுறுவார்களாக .

தருமை ஆதீனம்,
25–8–2004

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின்
அருளாணையின் வண்ணம்,
**மௌன மகாலிங்கத் தம்பிரான்.**

உ

குருபாதம்

# முதற்பதிப்பின் முன்னுரை

'**தத்துவ சாத்திரம்**' எனப்படுகின்ற மெய்ந்நூல்களில் சைவ சித்தாந்த சாத்திரங்கள் சிறந்து விளங்குவன. இவை '**மெய்கண்ட நூல்கள்**' எனப்படுகின்றன. "**உந்தி களிறோ டுயர்போதம் சித்தியார்**" என்னும் வெண்பா, மெய்கண்ட நூல்கள் பதினான்கு என்பதைத் தெரிவிக்கின்றது.

மெய்கண்ட நூல்கள் பதினான்கும் உபதேச பரம்பரையில் நின்ற ஆசிரியர்களால் அருளிச்செய்யப் பெற்றவை. முதலில் உள்ள '**திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார்**' இரண்டும் தனிப் பரம்பரையில் தோன்றியவை. ஏனைய பன்னிரண்டும் மெய்கண்ட தேவரது பரம்பரையில் எழுந்தவை. எனவே, பெரும்பான்மை பற்றிப் பதினான்கு சாத்திரங்களும் '**மெய்கண்ட நூல்கள்**' என வழங்கப் பெறுகின்றன.

சந்தானசாரியார் நால்வருள் முதல்வராகிய மெய்கண்ட தேவர் '**சிவ ஞான போதம்**' என்னும் ஒரு நூலையும், இரண்டாமவராகிய அருள் நந்தி தேவர் '**சிவஞான சித்தி, இருபா இருபஃது**' என்னும் இரண்டு நூல்களையும் அருளிச் செய்ய, அவர்கட்குப்பின் மறைஞான சம்பந்தர் மாணுக்கராய்ச் சந்தானசாரியருள் நான்காமவராய் விளங்கிய **கொற்றங்குடி உமாபதி தேவரே** எட்டு நூல்களை அருளிச் செய்தார். அவை எட்டும் '**சித்தாந்த அட்டகம்**' என்று சிறப்பித்துப் போற்றப்படுகின்றன. சித்தாந்த அட்டகத்துள் இரண்டாவதாக எண்ணப்படுவது திருவருட் பயன்.

இது '**மெய்ந்நெறித் திருக்குறள்**' அல்லது '**சிவநெறித் திருக்குறள்**' என்று சொல்லத் தக்க முறையில் குறள் வெண்பாக்களால் அதிகாரம் பகுத்து, அதிகாரத்திற்குப் பத்துக்

குறளாகச் செய்யப்பட்டது. எனவே, திருவள்ளுவரது திருக்குறள் அறநெறியை விளக்கும் பொது நூலாய் விளங்க, இது அருள் நெறியாகிய இறை நெறியை விளக்கும் சிறப்பு நூலாய் விளங்குதல் புலனுகும். மேலும், திருவள்ளுவரது திருக்குறளில் வீடு அறத்துப் பாலினுள் அடங்கி நிற்கின்றது. இதனுள் அது தனிப்பொருளாக விளங்கித் தோன்றுகின்றது. எனவே, இது **வீட்டியற் குறள்** ஆகின்றது. ஆசிரியர் உமாபதி தேவநாயனுர் சைவ சித்தாந்தப் பொருள்கள் அனைத்தையும் மிகத் திட்பமும், நுட்பமும் பட இந்நூலுள் **பத்து அதிகாரங்களில், நூறு குறட்பாக்களில்** தொகுத்து உணர்த்தியுள்ளார். அதனுல் சைவ சித்தாந்தம் கற்பவர்கட்கு இது முதலிற் கற்றற்குரியதாகின்றது . எனினும், 'தத்துவங்களைப் பற்றிய கருத்துக்களை முதற்கண் ஒருவாறு உணர்ந்து, பின்னர்ப் பிற பொருள்களை உணர்தல் வேண்டும்' என்னும் கருத்தால் உண்மை விளக்கத்தை முதற்கண் கற்று , இதனை இரண்டவதாகக் கற்றல் வழக்கமாய் உள்ளது.

சைவ சித்தாந்தம் 'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள் பற்றி விரித்துரைப்பது என்பது பலரும் அறிந்தது . அம்முறையிலே முதற்கண் காப்பாகக் கணபதி வணக்கத்தை ஒரு குறளிற் கூறியபின்பு நூலின் முதல் மூன்று அதிகாரங்கள் பதி முதலிய முப்பொருள்களின் இயல்பை முறையே தொகுத்துக் கூறுவனவாய் உள்ளன. அவ்வதிகாரங்கள், '**பதி முதுநிலை, உயிரவை நிலை, இருள்மல நிலை**' என்பனவாம்.

**பதி முதுநிலையில்** இறைவன் அறிவே வடிவாய் எப்பொருளிலும் நிறைந்து நிற்பவன்; நிகரற்ற தனிப் பொருளாயுள்ளவன் ; சத்தியோடு வேறற நிற்பவன்; உயிர்களின் பொருட்டு ஐந்தொழில் செய்து அவைகளைக் கடைத்தேற்றுபவன்; உயிர்களின் பொருட்டு அவன் அருவம், உருவம், அருவுருவம் என்னும் திருமேனிகளைக் கொண்டருள் பவன் என்பன முதலாகப் பல அரிய உண்மைகள் கூறப்படுகின்றன.

**உயிரவை நிலையில்** உயிர்கள் அளவில்லன. அவை இயல்பிலே

பாசத்துட்பட்டிருத்தலால் இன்று காறும் பாசத்தினின்றும் விடு பட்டனவும் பல; இனி விடுபட இருப்பனவும் பல. அவை அறிவுடையவாயினும் அவ்வறிவு பிறிதொரு பொருள் விளக்க விளங்குவதேயன்றித் தானே விளங்குவதன்று. மேலும் அவ்வறிவு திரிவின்றி ஒரு பெற்றியாய் நில்லாது அசத்தைச் சார்ந்தவழி அசத்தாயும், சத்தைச் சார்ந்த வழி சத்தாயும் நிற்கும் . அதுபற்றி உயிர் 'சத சத்து' எனப்படுகின்றது என்பன முதலிய கருத்துக்கள் மிகச் சுருக்கமாகக் கூறப்படுகின்றன.

இருள்மல நிலையில் ஒன்பது குறள்களில் ஆணவ மலத்தின் இயல்பே பேசப்படுகின்றது. ஒரு குறளிலே கன்மம் மாயை பற்றிய செய்திகள் சொல்லப்படுகின்றன. அதனின்றும் பாசத்துள் ஆணவமே முதல் என்பதும், எல்லாத் துன்பங்கட்கும் அடிப்படை ஆணவமே என்பதும் விளங்கும். உலகில் உயிர்களை யாதொன்றும் செய்ய ஒட்டாது தடுப்பது இருள் . அதுபோல ஆணவமே உயிர்களை ஒன்றை அறியவோ செய்யவோ ஒட்டாமல் தடுப்பது. ஆகவே ஆணவமே உயிர்கட்கு நேர் பகையாய பொருள் . ஆயினும், இந்த ஆணவமலம் தனது இருப்பையே தெரிவிப்பதில்லை. இருள்பிற பொருளைக் காட்டாது மறைப்பினும் தன்னைக் காட்டும். ஆனுல் , இந்த ஆணவம் பிற பொருளைக் காட்டத்தோடு கூடத் தன்னையும் காட்டுவதில்லை என்று இதன் கொடுமையை விளக்கும் பொழுது மிக நயம்பட விளக்குகின்ருர்.

" ஒருபொருளும் காட்டாது இருள் ; உருவம் காட்டும் ;
இருபொருளும் காட்டாது இது"

" பலரைப் புணர்ந்தும் இருட்பாவைக்கு உண்டு என்றும்
கணவர்க்கும் தோன்ருத கற்பு"

என்பன அக்குறள்கள். இவைபோல்வன சித்தாந்த உண்மைகளை எளிதில் உணர்தற்கு வாயிலாவன.

முப்பொருள் பற்றிக் கூறும் மூன்று அதிகாரங்கட்குப் பின்

நான்காவதாக அவைகள் அனைத்தையும் தொடர்பு படுத்தி நிற்கின்ற அருளது தன்மை கூறுவது 'அருளது நிலை' என்னும் அதிகாரம், அருளாவது சத்தியே. இதன் கண் உலகில் பகலவனும், நிலமும் உயிர்கட்கு ஒளியைத் தந்தும் , தாங்கி நின்றும் உதவுதல்போல இறைவனது அருள் உயிர்களுக்கு

எஞ்ஞான்றும் துணையாய் நிற்கின்றது எனவும் , ஆயினும் அந்த அருளை உயிர்கள் அறிவதில்லை எனவும் , அங்ஙனம் அறியாமையால் உயிர்கள் நிறைந்த இன்பக் கடலிலே இருந்து துன்பக் கடலிலே வீழ்ந்து அலைவன வாகின்றன எனவும் ஆசிரியர் அருளிச் செய்கின்றார்.

ஐந்தாம் அதிகாரம் அருளுரு நிலை. 'அருளுரு' என்றது ஆசான் மூர்த்தியை. இறை வனை உயிர்கட்கு என்றும் அறிவித்து நிற்பது அருளே; அதாவது சத்தியே. ஆயினும் அந்த அருளைக் கொண்டே இறைவனை அறியமாட்டாத உயிர்கட்கு அருளின் உருவமாய் நின்று இறைவனை இனிது அறிவிப்பவன் ஆசான் மூர்த்தி. ஆகவே அருளது நிலை கூறியபின் அருளுரு நிலையைக் கூறியுள்ளார். இதில் உயிர்கட்கு இறைவன் குருவாய் வந்து அருளிய வழியே ஞானம் உளதாகும்; அவை தாமாக ஞானத்தை அடைதல் இயலாது என்பது இனிது விளக்கப்படுகிறது . இன்னும் ஞானகுரு சிவனேயன்றி வேறு ஒருவனல்லன் என்பதும் பல வகையால் நிறுவப்படுகின்றது. இறைவன் குருவாகி வந்து அருள் செய்வது மானைக் காட்டி மானைப் பிடித்தல் போல்வது என்பதையும் இவ்வதிகாரத்தில் காணலாம்.

ஆறும் அதிகாரம் அறியும் நெறி. இதில் சைவ சித்தாந்தத்திற்கே உரிய சிறப்புப் பொருள்களும், அவற்றைச் சிந்தித்தும், தெளிந்தும், தலைப்பட்டு அறிய வேண்டிய முறைகளும் கூறப்படுகின்றன.

ஏழாம் அதிகாரமாகிய **உயிர் விளக்கம்** உயிர்கள் பாசத்தினின்றும் நீங்கும் முறையையும், எட்டாம் அதிகாரமாகிய **இன்புறு நிலை** பாசத்தின் நீங்கிய உயிர்கள் இறை இன்பமாகிய சிவானந்தத்தில் திளைத்திருக்கும் முறையையும் கூறுகின்றன. இவற்றுள், இன்புறு

நிலையிலே சுத்தாத்துவித சித்தாந்த முத்தி நிலை இத்தகையது என்பது விளக்கப்படுகிறது.

ஒன்பதாம் அதிகாரம் ஐந்தெழுத் தருள் நிலை. இதில் பஞ்சாக்கர மந்திரத்தின் உண்மைகள் பல உபதேச முறையில் உணரத்தக்க வகையில் மறைமுகமாகக் கூறப்படுகின்றன. தூல பஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், முத்தி பஞ்சாக்கரம் முதலிய வகைகள் பலவும் இவ்வதிகாரத்தில் உணரத்தக்கனவாகும்.

பத்தவதாகிய இறுதி யதிகாரம் அணைந்தோர் தன்மை. அணைந்தோர் – சிவனை இவ்வுடல் உள்ளபொழுதே அடைந்து அவனுகி நிற்பவர். 'சீவன் முத்தர்' எனப்படுவோர் இவரேயாவர். எனவே , முன்னை அதிகாரங்களில் சொல்லப்பட்ட அனைத்தையும் உணர்ந்து அந்நிலையில் நின்று பயன் பெற்றவர்களது நிலையைக் கூறுவது இவ்வதிகாரமாகும். இங்ஙனம் இந்நூலை முறையாகக் கற்றுக் கேட்டுச் சிந்தித்து உணர்பவர்கள் சித்தாந்தப் பொருளை ஒருவாறு முற்றும் உணர்பவராவர்.

இந்நூலுக்கு முன்னைய உரைகள் சில உள்ளன. அவை, 'சிந்தனை உரை, நிரம்ப அழகிய தேசிகர் உரை' என்பன. அவற்றுள் நிரம்ப அழகிய தேசிகர் உரையே முறைப்படி அமைந்து நூற்பொருளைத் தக்க வகையில் விளக்குவது. அவ்வுரையை அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறை, வித்துவான். திரு .க . வெள்ளைவாரணனுர் அவர்கள் தமது விரிந்த விளக்கங்களுடன் சில ஆண்டகட்கு முன்னர் வெளியிட்டிருக்கின்ருர். அவ்விளக்கம் சாத்திரங்கட்கு மூலம் தோத்திரங்களாகிய திருமுறைகளும், பொதுமறையாகிய திருக்குறளும் என்பதை விளக்குவதையே சிறப்புக் குறிக்கோளாகக் கொண்டது.

பின்னர் சைவ சித்தாந்தக் கலைச் செல்வர் திரு . க . வச்சிரவேல் முதலியார், பி .ஏ., எல்.டி. அவர்கள் எழுதித்தந்த பொழிப்புரையை 1967 – ஆம் ஆண்டில் இலங்கைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

இவற்றின் பின் தருமையாதீனம் 25 – ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியின் அருளாணையின் வண்ணம் அடியேனல் எழுதப்பெற்று 'ஞானசம்பந்தம்' இதழில் தொடர்ந்து வெளிவந்த இவ்வுரை இவ்வாதீனம் 26 – வது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவுளப்பாங்கின் வண்ணம் புத்தக வடிவில் நிகழ் பிரமாதீச ஆண்டு, ஸ்ரீ ஆனந்தபரவச தேசிக பரமாசாரிய சுவாமிகளது குருபூஜை விழா மலராக இதுபொழுது வெளிவருகின்றது.

அடியேனைப் பொருட்படுத்தி இவ்வரும் பணியில் ஈடுபடுத்தியருளிய 25 – ஆவது குருமகா சந்நிதானத்தை என் உளமாரச் சிந்தித்து, இதனைப் புத்தகமாக வெளிவரத் திருவருள் பாலித்து விளங்குகின்ற 26 – ஆவது குருமகா சந்நிதானம் அவர்களது திருவடிகட்கு எனது மனமொழி மெய்களால் ஆகிய பெருவணக்கத்தைச் செலுத்திக் கொள்கிறேன்.

சித்தாந்த நூல்களில் திருக்குறள் இயல்பில் அமைந்து விளங்கும் திருவருட்பயனுக்கு விளக்க உரையாக உள்ள இந்நூலை ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தின் அருள் உள்ளத்திற்கு நன்றி செலுத்தும் கடப்பாட்டுடன் அன்பர்கள் பெற்றுக் கற்று உணர்ந்து பயன் அடைவார்களாக.

இங்ஙனம்,

அடியேன்,

**சி . அருணைவடிவேல்,**

தருமையாதீனப் புலவர்.

தருமபுரம்,

**10 – 1 – 1974**

# பொருளடக்கம்

சந்தானாசாரியருள் நான்காவது குருமூர்த்திகளாகிய



ஸ்ரீ உமாபதிதேவ நாயனார்

சிவமயம்

## சந்தான பரம்பரை

*தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட*
*திருநந்தி, அவர்கணத்தோர் செல்வர், பாரில்*
*பாவியசத் தியஞான தரிசனிகள், அடிசேர்*
*பரஞ்சோதி மாமுனிகள், பதியா வெண்ணெய்*
*மேவியசீர் மெய்கண்ட திறலார், மாறா*
*விரவுபுகழ் அருள்நந்தி விறலார், செல்வத்*
*தாவில்அருள் மறைஞான சம்பந்தர் இவர்இச்*
*சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே.*

## குரு வணக்கம்

*பார்திகழ வளர்சாம வேதம் மல்கப்*
*பராசரமா முனிமரபு பயில ஞானச்*
*சார்புதர வந்தருளி எம்மை யாண்ட*
*சைவசிகா மணிமருதைத் தலைவன் அந்தண்*
*கார்மருவு பொழில்புடைசூழ் மதில்மீதே மதியங்*
*கடவாமை நெடுங்கொடியின் கரந்தசையுங்கடந்தைச்*
*சீர்நிலவு மறைஞான சம்பந்தன் எந்தை*
*திருவளரும் மலரடிகள் சென்னி வைப்பாம்.*

—ஸ்ரீ உமாபதி தேவநாயனார்

உ

சிவமயம்

# உமாபதி தேவநாயனார் தோத்திரம்

*அடியார்க் கெளியன் எனத்தில்லை*
*யண்ணல் அருளுந் திருமுகத்தின்*
*படியே பெற்றான் சாம்பாற்குப்*
*பரம முத்தி அப்பொழுதே*
*உடலுங் கரைவுற் றடைந்திடுவான்*
*உயர்தீக் கையினை அருள்நோக்காற்*
*கடிதிற் புரிகொற் றங்குடியார்*
*கமல மலரின் கழல்போற்றி*

சிவமயம்

# உமாபதி சிவாசாரியார் வரலாறு

(டாக்டர். திரு. சொ. சிங்காரவேலன், எம்.ஏ., பிஎச்.டி.)

**தோற்றம் :**

சந்தான ஆசிரியப் பெருந்தகையாருள் நான்காமவராக உள்ளவர் உமாபதி சிவாசாரியார் ஆவர். இவர் "தில்லை வாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று நம்பி ஆரூரரால் சிறப்பித்துக் கூறப்பெற்ற அருட்புகழ் வாய்ந்த தில்லை மூவாயிரவருள் ஒருவர் ஆவர். 'உமாபதி'யார் என்பது இவருடைய இயற்பெயர் என்று கொள்வது மரபு - வரலாற்றாசிரியரும்,

*"சொன்னசிவாகமம் விளங்கத் திருவுடையந்*
*தணர்மரபில் ஒருவர் தோன்றிப்*
*பன்னரிய அபிதானம் உமாபதியார்*
*எனஎவரும் பரவப் பெற்றார்"*

என்றுரைத்துள்ளனர். தில்லைநகரில் வாழ்ந்த இச்சிறப்புடைய அந்தணர் குலத்தில் இவர் தோன்றினார். இவருடைய பெற்றோர் பெயர்கள் இன்னவென விளங்கவில்லை.

**"பட்ட கட்டையா? பகற்குருடா?"**

பொன்னம்பலத்தில் ஆடும் புனிதனைப் போற்றும் திறம் இயல்பாகவே வாய்க்கப் பெற்றவர் ஆதலின் இவர் தம் வாழ்வில் பேரருள் விளங்கிற்று. சித்தாந்த சைவச் செந்நெறிக்குப் பெருவிளக்கம் இவ்வருட் பெருந்தகை

யாராற் கிடைக்க வேண்டும் என்பது திருவருட் குறிப்பாதலின், இவருடைய வாழ்வின்கண் பல அற்புத விளக்கங்களை நாம் காண்கின்றோம். வழக்கம் போல நடராசப் பெருமானை வழிபாடு செய்து மனைக்குத் திரும்பிக் கொண்டிருந்தார் உமாபதியார்; பகற்பொழுது அது; சிவிகையில் இவர்ந்து வந்து கொண்டிருந்தார் இச்செம்மலார். கைவிளக்கு ஏந்தி ஏவலர் முன்பு சென்ற வண்ணம் இருந்தனர். திருவீதியில் மூன்றாம் சந்தான குரவராகிய மறைஞானசம்பந்தர் இக்காட்சியைக் கண்டார்; உமாபதியார்க்கு உண்மை உபதேசம் புரியும் பக்குவநிலை வந்துற்றதை உணர்ந்த மறைஞான சம்பந்தர், உமாபதியார் செவிகளிற் பொருந்தும் வண்ணம் சில மொழிகளைச் செப்பியருளினார்.

பருவகாலத்தே பெய்த மழையால் வித்துக்கள் முளைவிடுதல்போல், மெய்ஞ்ஞான நாட்டம் கொண்டிருந்த உமாபதியார் செவிகளில் மறைஞான சம்பந்தர் திருவாய் மலர்ந்த சொற்கள் வந்து வீழ்ந்தன; "பட்டகட்டையில் ஏறிப் பகற் குருடு போவதைப் பாருங்கள்" என்ற அச்சொற்கள் உமாபதியார் செவிகளில் பாய்ந்தன. உள்ளத்தே ஞான ஒளியைத் தூண்டிவிட்ட இச்சொற்களைத் திருவாய் மலர்ந்த மறைஞான சம்பந்தருடைய தோற்றம் உமாபதியார் கண்களில் விளைந்தது; உடன் சிவிகையினின்றும் இறங்கினார். தம்மை 'வலிய ஆட்கொள்ள வந்த ஞான வள்ளல் இவரே' என்ற உணர்வு மீதூரப் பெற்று, மறைஞானசம்பந்தரின் மலரடிகளில் வீழ்ந்து வணங்கினார். அனைவரும் வியந்து நின்றனர். தம் மாணாக்கராக உமாபதியை ஏற்கும் திருக்குறிப்புடன் மறைஞானசம்பந்தரும் இருந்தனர்.

எல்லாம் வல்ல இறைவன் திருவருள், இவ்வாறு மறைஞானசம்பந்தர் வழியே உமாபதியாருடைய உள்ளத்தில் தெளிவு பிறந்திடத் தகுதுணையாயிற்று.

"தாங்கள் கூறிய சொற்களின் பொருளை உரைத்தருள வேண்டும்" என்று கூறிப் பணிந்தார் உமாபதியார். மறைஞானசம்பந்தரிடம் உண்மை உபதேசம் ஏற்றார். பல்லக்கைப் 'பட்டகட்டை' என்றும், கைவிளக்கு முதலிய பரிவாரத்தால் விளைந்த ஆடம்பரத்தைப் 'பகற் குருடு' என்றும் மறைஞான சம்பந்தர் வெளிப்படையாகப் பொருள் கொள்ளுமாறு கூறினரேனும், 'பசை இல்லாத இவ்வுலகத்தினையே அவர் 'பட்டகட்டை' எனக் குறித்தார் என்பதும், வேதம் ஆகமம் முதலிய கலையறிவுகள் எல்லாம் நிரம்பப் பெற்றும் ஞானம் பெறாதவர் என்பதனையே 'பகற் குருடு' எனக் குறித்தார் என்பதும் உமாபதியார் கொண்ட ஆழ்பொருள்க ளாயிருத்தல் வேண்டும். அவருடைய அகவிழிகளைத் திறந்து 'மெய்ஞ்ஞானம் பெறவேண்டும்' என்ற தாகத்தை உண்டாக்க குருநாதருடைய இந்த மொழிகள் துணைபுரிந்தன என்று கூறலாம்.

**ஞானமலர்ச்சி :**

இயல்பாகவே உள்ளம் தெளிந்து ஞானநாட்டம் ஏற்பட்டிருந்தவேளையில் தம் குருநாதருடைய மொழிகள் உமாபதியார் உள்ளத்தில் பெரிய மாற்றத்தை ஆக்கி விட்டன. 'தம்முடைய பகட்டான வாழ்வும்' பிறவும் அகவாழ்விற்கு அணுவளவும் துணைபுரியமாட்டா' என்ற அடிப்படை உண்மையைச் சிலசொற்களிலே மறைஞான சம்பந்தர் விளக்கி விட்ட பாங்கினை உணர்ந்து தெளிந்தார் இவ்வருளாளர். காதற்ற ஊசியும் வாராது காண்நும்

கடைவழிக்கே' என்ற மொழி, பட்டினத்தாரை உருவாக்கிய வரலாறு இங்கே நினைவு கூரத் தக்கது. 'சும்மா இரு சொல்லற' என்ற மொழியின் மாபொருளை அறியமுயன்ற அருணகிரியாரின் அநுபூதிவாக்கும் இங்கே உணர்ந்து ஒப்புநோக்கத் தக்கது.

**பரிகல சேடம் உண்டது :**

உமாபதியார்க்கு ஞான உபதேசம் புரிந்த மறைஞான சம்பந்தர், அவருடைய பக்குவ நிலையை மீண்டும் அறிவதற்காகவும், உலகம் அவருடைய உயர் நிலையை உணர்வதற்காகவும் ஒரு நிகழ்ச்சியை நிகழ்த்திடத் திருவுள்ளம் கொண்டார். தில்லையில் ஆடை நெய்வோர் வாழும் திருவீதிக்குச் சென்றார்; உமாபதியாரும் தம் ஆசிரியர் பின்னேயே பரிவுடன் நடந்தார். அத்தெருவில், ஆடை நெய்வோர் நூலின் பாவில் கஞ்சியேற்றும் பொழுது வழிந்தொழுகும் கூழை மறைஞான சம்பந்தர் தம் திருக்கைகளில் ஏற்று உண்டார். அப்பெருந்தகையார் அவ்வாறு ஏற்று உண்ணும்போது, அவரது திருக்கைகளினின்று கூழ் ஒழுகிற்று. உமாபதியார் அதனைத் தம் கைகளில் ஏற்று, ஆசிரியருடைய 'பரிகல சேடமாகக்' கருதி மகிழ்ந்து உண்டார். ஆசிரியர் தம் மாணாக்கருடைய மனப் பண்பாட்டினை உணர்ந்து மகிழ்ந்தார். குலம், சாதி, முதலிய உலகியற் புன்மைகளுக்கு அப்பாற்பட்ட அன்பின் திறத்தைத் தம் மாணாக்கர் உடையவர் என்ற நிலையினைத் தம் திருவுள்ளத்தில் தேர்ந்தார்.

'சாதி குலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும் ஆதமிலிநாயேனை" என்று மணிவாசகர், சாதியின் புன்மைச் சுழிக்கொடுமையை உணர்த்தியுள்ளமை

அறிவுலகம் அறிந்ததே ஆகும். உமாபதியார் தம் நல்லாசாரியர் பரிகலச் சேடத்தை உண்டின்புற்றமை, மாணாக்கர்க்குப் பெருநெறி விளக்கிக் காட்டுவதாகும். பிற்காலத்தே, குமரகுருபர அடிகள் தம் நல்லாசிரியராகிய தருமையாதீன நான்காம் குருமூர்த்திகள் ஸ்ரீமாசிலாமணி தேசிக சுவாமிகள் மீது பாடிய "பண்டார மும்மணிக்கோவை" என்னும் தோத்திர நூலில் தம் ஞானாசிரியருடைய பரிகலச் சேடம் உண்ணும் பொருட்டு விழைவதும், தம் ஆசிரியர் அடித்தொண்டர்களின் பரிகலம் உண்ணும் வரம் படைத்த நாயாகித் தாம் பிறக்க வேண்டும் என்று வேண்டுவதும் இங்கு நினைக்கத் தக்கன.

*"திருவமு தார்ந்து தெருக்கடை யெறிந்த*
*பரிகல மாந்தியிப் பவக்கடல் வழக்கும்*
*வாறுடை ஞமலி யாகிநின்*
*அருளையும் அயரா தவதரிப்பதுவே"*

என வரும் சீரிய கவிதைப்பகுதி இந்நிலையில் ஒப்புநோக்கி இன்புறத் தக்கதாகும்.

அருணந்தி சிவாசாரியாரிடம் தாம் பெற்ற உபதேசத்தினை உமாபதியார்க்கு உரைத்தருளினார் மறைஞான சம்பந்தர். சாத்திர நூல்கள் பலவற்றையும் உணர்த்தினார், உமாபதியார் அவர்க்கு. இங்ஙனம் பேரருட் செல்வம் பெற்று ஞான ஞாயிறாக விளங்கி வரலானார்.

### கொற்றவன் குடிவாழ்வு:

'அந்தணர்க்குரிய குல ஒழுக்கத்தினை உமாபதியார் தப்பினார்' என்று தில்லைவாழ் அந்தணர்கள் தவறாக உணர்ந்தனர். அவரைத் தம்மரபினின்றும் விலக்கிவிட்டனர். ஆனந்தமா நடராசப் பெருமானைத்

தீண்டி வழிபடும் பேற்றினை இவ்வாறு பிரிந்த உமாபதியார், தில்லைக்கு அருகில் சோழ மன்னன் கொடுத்த ஒரு சிற்றூரில் திருமடம் ஒன்றில் தங்கித் தவம் பெருக்கி வரலாயினர். அங்குச் சிவபூசையும், நிட்டையும் புரிந்து, பக்குவமுள்ள மாணாக்கர்கட்குச் சிவஞான நூல்களை உபதேசித்து வீற்றிருந்து வரலாயினர். கொற்றவன் (அரசன்) வழங்கிய ஊர் ஆதலின் அந்தச் சிற்றூர் 'கொற்றவன்குடி' என்றும், அங்கேயே வாழ்ந்து வந்த காரணத்தால், உமாபதியார் 'கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார்' என்றும் வழங்கப் பெற்றமை இங்குக் கருதத்தக்கது. இந்நாட்களில், உமாபதியார் திருவருட் தொண்டின் பெருமையை உலகம் உணர்ந்து கொள்ளுவதற்கேற்ற சில நிகழ்ச்சிகள் கூத்தரசன் திருவிளையாடல்களாக நிகழ்ந்தன.

## தில்லைப் பெருமான் திருவிளையாடல் :

மூவாயிரம் அந்தணர்களில் ஒருவர் ஒவ்வொரு நாளும் நடராசப் பெருமானுக்குப் பூசனை செய்தல் மரபு. இம்மரபின்படி உமாபதியார்க்கு உரிய நாளும், வந்தது. உமாபதியாரும் உள்ளக் களிப்புடன், பெருமானை வழிபட்டு இன்புறும் பேரார்வத்துடன், பொன்னம்பலத்துப் புகுந்தார். மற்ற அந்தணர்களோ, குல ஒழுக்கம் தவறியவர் பூசனை புரியலாகாது என்று தடுத்துவிட்டனர். அளவிறந்த மெய்யுணர்வும், ஆரா அன்பும் படைத்த உமாபதியாருக்கு விளைந்த உளத்துன்பம் உரையுள் அடங்குவதன்று. தாம் வழிவழியாக இயற்றிவரும் பொன்னம்பலக் கூத்தன் புனித வழிபாடு தவறிவிட்டதே என்று எண்ணி வருந்தினர். ஆனால், "இறைவன் அருள் இவ்வாறு ஆயின் மறுத்திடவோ, மறுகிடவோ நான் யார்?" என்று மனந்தேறிக் கொற்றவன்குடிக்கு மீண்டனர்; மனத்தாலேயே

அன்று வழிபாட்டை இயற்றி முடித்தார். வழக்கம்போல் திருக்கோயிலில் மற்றைய அந்தணர்கள் பூசனைக்குச் சென்றனர்; திடுக்கிட்டனர்; பூசைப் பெட்டகத்துடன் பெருமானைக் காணவில்லை; ஏனைய அந்தணர்கள் இச்செய்தி கேட்டு அதிர்ச்சியும் அச்சமும் ஒருங்கு எய்தினார்கள். 'யார் செய்த குற்றமோ' இது என்று நடுங்கினார்கள். "பெருமானே! எல்லையில்லாக் காலந்தொட்டு இங்கு வீற்றிருக்கும் நீ, யார்க்கு அருள் புரியும் பொருட்டு, யாண்டுச் சென்றாய்? உன் திருவடியே புணையாகக் கொண்டு மாயைக் கடல் கடந்த தக்கவர்பால் நீ சென்றாயோ? யோக நெறி நிற்போர் மாட்டுப் புகுந்தாயோ? எங்குச் சென்றாய்?" என்று அழுது உளம் கனிந்து உருகினார்கள் தில்லை மூவாயிரவர் ஆகிய திருக்கூட்டத்தார். இவர்களது உருக்கத்தினை வரலாற்றாசிரியர் இவ்வாறு உரைத்துள்ளார்.

*"தாட்டுணையே புணையாகப் பற்றி நின்று*
*தனிமாயைக் கடல் நீந்தும் தக்கோர் பாலோ*
*கோட்டமிலா மனத்தோடும் குளத்தில் உன்னைக்*
*குறித்துமதி அமிழ்துண்ணும் குணத்தர் பாலோ*
*ஈட்டமரு மலராதி கொண்டன் பாக*
*எழிலுறுபூ சனைபுரியும் இயல்போர் பாலோ*
*நாட்டமொரு மூன்றுடையாய் எங்கனுற்றாய்*
*நடமிடுவாய் என்றழுது நைவா ரானார்"*

இங்ஙனம் உருகிய அன்பர் யாவரும் கேட்ப, இறைவன் அருள்வாக்கு ஒன்று எழுந்தது; "இன்று பூசனை முறை உடைய உமாபதி நம் அன்பன்; அவன்பாற் சென்று அவனுடைய பூசனையே ஏற்று நிற்கின்றோம்." இந்த அருள்வாக்கு அந்தணர் சிந்தையை மூடிநின்ற

அறியாமையை நீக்கியது; உமாபதியார் திருமடத்திற்கு விரைந்து சென்று, பணிந்து மீண்டும் வந்து பூசனை ஆற்ற வேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். உமாபதியாரும் தில்லைநாயகன் திருவருட் குறிப்பையேற்றுப் பொன்னம்பலத்திற்குப் போந்து முறைப்படி வழிபாடு செய்து மகிழ்ந்தார். ஞானநெறி நிற்கும் நல்லோர்க்குக் குலம் முதலியன ஒரு மாசும் கற்பிக்க இயலாது என்ற பேருண்மையை உலகம் உணர்ந்து உய்தி பெறுதற்காக இறைவன் நிகழ்த்திய திருவிளையாடல் இது. அன்றியும், பூசலார் நாயனார் போன்று 'மானத வழிபாடு' என்னும் மன வழிபாட்டினை உமாபதியார் மேற்கொண்டனர் என்பது, நெஞ்சம் கோயிலாகும் நேயம் மிகுந்தவர் என்ற உண்மையை விளக்குவதாக அமைகின்றது.

**பெற்றான் சாம்பானார் திருத்தொண்டு :**

தில்லைத் திருக்கோயில் அன்றாட வழிபாட்டிற்குத் தத்தம் உடலாலும் உள்ளத்தாலும் திருத்தொண்டு செய்து வருவோர் பலர் உண்டு. புலர்வதன் முன் திருவலகுத் தொண்டு செய்வோர் பலர்; திருநந்தனவனம் எனப்படும் பூந்தோட்டத்துட்புக்குத் 'திருப்பள்ளித்தாமம்' எனப்படும் பூமாலைத் தொண்டு செய்வோர் பலர். இம்முறையில், திருவமுது ஆக்கப்பெறும் மடைப்பள்ளிக்கு நாள்தோறும் விறகு கொண்டுவரும் திருத்தொண்டை அந்நாட்களில் செய்து வந்தார் ஓர் அன்பர். தாம் பிறந்த குடியால் தாழ்ந்தவரேனும், ஒழுக்கத்தால் அவ்வன்பர். இவ்வாறு அருந்தொண்டு புரிந்து சிறந்து விளக்கி வந்தார். 'பெற்றான் சாம்பானார்' என்பது அவரது திருப்பெயர். திருநாளைப் போவார் பிறந்தகுடி அவரது குடி. அன்பில், திருநாளைப்

போவார் அனையவராகவே அவர் இருந்தார். நடராசப் பிரானுக்குத் திருவமுது ஆக்கும் அருஞ்செயற்கு விறகு கொணர்வதால், அவருடைய உள்ளம் தமக்கு வீடுபேறு ஆகிய முத்தி உறுதியாக உண்டு என்று நம்பியது; தம் திருத்தொண்டினை முட்டுப் பாடின்றிச் செய்து வந்தார். கூத்தப் பெருமான் அவ்வடியவர் கருத்தறிந்து முடிக்கும் கருணையால் அவருடைய கனவில் ஒருநாள் இரவில் தோன்றினார்.

**சிவபெருமான் அருளிய சீட்டுக்கவி :**

ஓர் ஓலையில் அழகிய வெண்பா ஒன்றை எழுதி அவர் கையில் தந்தருளிய இறைவன், அதனை உமாபதி சிவாச்சாரியரிடம் தந்து பயன் பெறும்படிக் கூறி மறைந்தார். விழித்தெழுந்த பெற்றான் சாம்பானார் கைகளில் ஓர் ஓலை இருந்தது; அதில் அழகிய வெண்பா ஒன்று வரையப்பட்டிருந்தது.

*"அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்*
*குடியார்க் கெழுதியகைச் சீட்டுப் – படியின்மிசைப்*
*பெற்றான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து*
*முத்தி கொடுக்க முறை."*

**கொற்றவன் குடியில் சாம்பானார் :**

பெற்றான் சாம்பானார் பெற்ற மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. எளிய தமக்கும் தில்லைப் பெருமான் திருவருள் புரிந்து திருக்காட்சி வழங்கியமையை எண்ணி எண்ணி உருகினார். அந்த ஓலையுடன் கொற்றவன் குடித் திருமடத்திற்குச் சென்றார். அவரது வருகையை உமாபதியார்க்கு உரைப்பார் யாரும் இல்லை. அவரும் அதனால் மனம் அயர்ந்து விடாமல் திருக்கோயிலுக்குச்

செய்து வந்த விறகுத் திருப்பணியை உமாபதியார் திருமடத்திற்குச் செய்து வரலானார். அப்போதும் அத்தொண்டரது மெய்த்தொண்டின் மேன்மையை யாரும் அறிய வாய்ப்பில்லாது போயிற்று. ஒருநாள் கடுமழை காரணமாகப் பெற்றான் சாம்பானார் திருத்தொண்டிற் பலநாழிகை தாமதப் பட்டது. அன்றைய திருவமுது காலந் தாழ்த்தமைக்குரிய காரணத்தைக் கேட்ட உமாபதியார்க்குக் கடுமழையால் விறகுப் பணியில் நேரம் தாழ்த்தவாற்றை அடியார்கள் உரைத்தனர். இவ்வாறு அன்புள்ளம் கொண்ட ஓர் இனியவரின் தொண்டு பற்றி அறிந்த சிவாசாரியார், மறுமுறை வருங்கால் தமக்குக் கூறுக என்று பணித்தனர்.

**சாம்பானார் முத்தி சார்தல் :**

மறுநாள் முன்னினும் ஒருமடங்கு பெரிதாக விறகு கொணர்ந்தார் பெற்றான் சாம்பானார். உமாபதியார் பணித்தபடி அவரது வருகையை ஆசிரியர்க்கு அறிவித்தனர். ஞான ஆசிரியர் பெற்றான் சாம்பானாரைச் சந்தித்தார்; அவரது திருத்தொண்டின் வரலாறு பற்றி அன்புடன் உசாவினர். சாம்பானார் உரிய காலம் வந்ததென உவந்து தொழுது, தம் தொண்டின் வரலாறு பற்றி உரைத்து, இறைவன் அளித்த சீட்டு ஓலையினை உமாபதியாரிடம் தந்து பணிந்தனர். உமாபதியார், கூத்தப்பிரான் தாமே முத்தி வழங்கியருளாமல் தமக்குச் சீட்டுக் கவி எழுதிய பெருங்கருணைக்கு உருகினார். 'சத்தியோ நிர்வாணதை' என்னும் தீட்சையைப் பெற்றான் சாம்பானாருக்குச் செய்தார்; அப்போதே முத்தி எய்தினார் சாம்பானார்.

**முள்ளிச் செடிக்கும் முத்தி :**

பெற்றான் சாம்பானாருடைய துணைவியார்

முதலிய சுற்றத்தோர் அறியாமையினால், ஒருநாள் விறகு கொடாமைக்காகச் சினந்து சாம்பானாரைக் கொளுத்தி விட்டனர் என்று முடிவு செய்தனர்; அக்காலை அரசனிடம் சென்று முறையிட்டனர். அரசன் உமாபதியார் பெருமையை அறிவானே ஆயினும், உலகத்தார் ஐயுறாத படி வேறொருவர்க்கு அனைவரும் அறிய முத்தி கொடுத்தருள வேண்டும் என்று உமாபதியாரை வேண்டினான். உமாபதியாரும் உள்ளம் கனிந்து இசைந்தனர். தம் மாணாக்கர் யாருக்கும் அவ்வாறு முத்தியளித்தற்கேற்ற பக்குவநிலை இல்லாதிருப்பதை அறிந்தார். தாம் செய்யும் சிவபூசையின் போது, திருமஞ்சன நீரால் நாள் தோறும் நனைந்து கோமுகி அருகில் முளைத்திருந்த முள்ளிச் செடி ஒன்றினை நோக்கினார். அந்த அஃறிணை உயிர் தம்முடைய கருணைக்கேற்ற தகுதி உடையதாக நலம் கனிந்திருத்தலை நாடிற்று இந்நல்லோர் உள்ளம், 'சத்தியோ நிர்வாணதை' என்ற தீட்சையினைச் செய்தருளினார். உடன் அச்செடி ஒளிமயமாக மாறி விண்ணின் வழியே உயர்ந்து சென்ற வியத்தகு காட்சியை அரசனும் மற்றையோரும் கண்டனர். எல்லோரும் காண ஆறறிவற்ற அஃறிணை உயிர்க்கே உமாபதியார் தீட்சை புரிந்து வீட்டுலகு எய்து வித்த திறத்தை உலகு உணர்ந்து களித்தது. சித்தாந்த சைவச் செந்நெறி மாண்பும், உமாபதியார்க்குள்ள அருணலமும் எங்கும் பரவின.

**கொடி ஏற்றிய திறம் :**

தில்லைத் திருக்கோயிலில், பெருவிழாக்காலம் அப்போது வந்தது. கொடி உயர்த்தி விழாவைத் தொடங்குவது ஆகம வழக்கு. உமாபதி சிவாசாரியார்

கொடி ஏற்றலாகாது என்று ஆராயாத அந்தணர் தடுத்து விட்டனர். பின்னர்த் தாமே அப்பணி தலைப்பட்டபோது கொடி மேலே ஏறாது நின்று விட்டது. இறைவனுடைய அருள் வாக்கு, "உமாபதி வந்தாலே கொடி ஏறும்" என்று அப்போது தோன்றிற்று. அந்தணர்கள் இரண்டாம் முறையும் உமாபதியாரிடத்தே பிழையுறவுணர்ந்த நாணம்மிக, அவர்பாற் சென்று வேண்டிக் கொண்டனர். "இதுவும் இறைவன் இன்னருளே" என்று கருதித் திருக்கோயில் புகுந்த உமாபதியார் 'கொடிக்கவி' என்னும் சிறுநூலைப் பாடியருளினர்; யாரும் ஏற்ற வேண்டாமலே, தானாகக் கொடி ஏறி நின்ற வியத்தகு நிகழ்ச்சியை உமாபதியார் திருவாய் மலர்ந்த கொடிக்கவிப்பாட்டுக்கள் விளைத்து விட்டன. உயர்ந்த சான்றோர், திருவுள்ளத் தெழுந்த தீந்தமிழ்க் கவிதை எல்லாம் செய்ய வல்லது என்ற உண்மையை, இச்சந்தான குரவருடைய கொடிக்கவி நிகழ்ச்சியின் வாயிலாக உலகம் உணர்ந்து தெளிந்தது. மறைக்காட்டில் வேதங்களால் அடைபட்டுக் கிடந்த திருக்கோயிற் கதவுகள் சமயகுரவர் இருவருடைய தெய்வத் தமிழ்க் கவிதைகளால் திறக்கவும் மூடவும் பெற்று வழிவிட்ட வரலாறு இவ்விடத்தே நினைக்கத் தகுந்ததாகும்.

**பெட்டகத்தோடு வந்த பெருமான் :**

'திருக்கோயில்' என்ற திருப்பெயருக்குரியதாய், சைவ உலகின் உயிர்த்தலமாக விளங்குவது தில்லை; இங்குக் கற்பனை கடந்த சோதி வடிவினனாகிய கூத்தப் பெருமான், கருணையே திருவுருவமாகக் கொண்டு திருச்சிற்றம் பலத்துள் பொற்புற நடஞ்செய்து விளங்குகின்றான். இத்தலம் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றானும் சிறந்து விளங்குவது. 'மூர்த்தி அம்பலக் கூத்தனது உருவே; தீர்த்தம்

என்பது இங்குள்ள சிவகங்கையே; ஏத்துதற்குரிய தலம் புலியூர் எனப்பெறும் சிதம்பரமே' என்று குமரகுருபர அடிகள் அகங்குளிர்ந்து பாடுவர். இத்திருத்தலத்திற்கு உரிய பெருமைகளையெல்லாம் திரட்டிக் 'கோயிற்புராணம்' என்று இயற்றியருளினார் உமாபதி சிவாசாரியர். இந்நூல் பொன்னம்பலக் கூத்தனின் சேவடிக் கீழேயே அரங்கேற்றப் பெறுதல் வேண்டும் என்று கருதினர். இப்புராணச் சுவடியை ஏந்தி உமாபதியார், பொன்னம்பலம் புகுந்தபோது அந்தணர் அழுக்காறு பின்னும் பேருருக் கொண்டது; தடுத்து விட்டனர். பின்னே பெற்ற அநுபவங்கள் அவர்களுடைய சிற்றறிவின் எல்லைக்குப் போதுமானவையாக இல்லாமையே இதற்குக் காரணம் என்று கூறலாம். உள்ளம் வருந்தித் திரும்பிய உமாபதியார் தம் பெட்டகத்துள் அச்சுவடியை வைத்துப் பூசித்து மனம் தேறினார். வழக்கம் போல் பொன்னம்பலத்துப் பூசை செய்யப் புக்கபோது பூசைப் பெட்டகத்துடன் புனிதனைக் காணாது திகைத்த அந்தணர்க்கு அருள்வாக்கின்வழி அண்ணல் உணர்த்தினான். நடுநடுங்கிய மறையோர் உமாபதியார் திருமடம் சென்று கோயிற் புராணச் சுவடியுடன் உமாபதி சிவாசாரியாரையும் சிவிகையில் ஏற்றுவித்து, உரிய பல திருக்கோயிற் சிறப்புக்களுடன் பொன்னம்பலத்திற்கு அழைத்து வந்தனர். பொன்னம் பலத்தே பெருமான் முன்புபோற் காட்சி வழங்கினான். உமாபதி சிவாசாரியார் கோயிற் புராண அரங்கேற்றமும் குறைவின்றி நிகழ்ந்தது. 'உண்மை அன்புடையார் உறவையே இறைவன் விரும்பி எழுந்தருள்வான்' என்ற மெய்ம்மையை வையகம் அறிந்திட இந்த வரலாற்று நிகழ்ச்சி ஒரு நல்ல வாய்ப்பாயிற்று.

இவ்வாறு பல அற்புதங்கள் நிகழ்ந்தன; உமாபதி சிவாசாரியாரும் அருணமச்சிவாயர் முதலிய மாணாக்கர் பலர்க்கும் ஞான உபதேசம் செய்து கொண்டும், பல உயர்ந்த பனுவல்களை அருளிச் செய்து கொண்டும் வாழ்ந்தனர். சிவப்பிரகாசம் முதலிய எட்டு நூல்கள் இவராற் செய்யப் பெற்றுள்ள சாத்திரப் பனுவல்கள். 'பௌட்கரம்' என்ற ஆகமத் துணைநூலிற்கு ஓர் அழகிய விருத்தியுரையை உமாபதியார் வரைந்துள்ளனர். திருமுறை கண்ட புராணம் முதலிய தனி நூல்களும் இவரால் எழுதப்பட்டுள்ளன. திருத்தொண்டர் புரா்ணசாரம் என்ற நூல் பெரிய புராணத்தின் பிழிவாக நின்று கற்போர் சிந்தைக்குக் களிப்பூட்டுகின்றது.

**இறையடி நீழல் :**

இவர் இறைவன் திருவடி நீழல் எய்தியமை ஒரு சித்திரைத் திங்களில், அத்த விண்மீன் கூடிய நாளில் என்றுரைப்பது மரபு.

உண்மை ஞானத்தால் விளைந்த இன்பத்தினால் அடியார்கள் பலரும் போற்றிப் பரவிட இறைவன் திருவடித் தாமரைகளை எய்தி, எல்லையில்லாத நிறைவும், என்றும் ஒரே தன்மையும் உள்ள 'சுத்த அத்துவித ஆனந்த' வடிவம் ஆகி நின்றார் என்று இவருடைய முத்திப் பேற்றை வரலாற்று நூலாசிரியர் சுவைபடக் கூறியுள்ளார். அத்திருப்பாட்டுப் பின் வருமாறு:

*"சத்திய ஞானா னந்தத் தத்துவ அனுபவத்தால்*
*பத்திசெய் அடியார் போற்றப் பரனடிக் கமலம் எய்தி*
*நித்திய சுபாவ முத்த நிராகார பூர்த்தி யான*
*சுத்த அத் துவிதானந்த சொரூபமே ஆகி நின்றார்".*

## தருமை ஆதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் வரலாறு

*"தமிழ்மணங் கமழும் கமலையம் பதிவாழ்*
*ஞானசம் பந்தனை வணங்கின்*
*ஈனசம் பந்தம் இல்லைவீ டெளிதே"*

தென்பாண்டி நாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூரில் கார்காத்த வேளாளர் குலத்தில் சுப்பிரமணியப் பிள்ளை என்பவர் கற்பிற் சிறந்த மீனாட்சி அம்மையை மணந்து வாழ்வாங்கு வாழ்ந்து வந்தார். எல்லா நலங்களும் இருந்தும் மகப்பேறு இல்லாக் குறை மனத்தை வருத்தியது. குலதெய்வமாகவும், ஆன்மார்த்த மூர்த்தியாகவும் உள்ள ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானிடத்து நாளும் குறையை விண்ணப்பித்துச் சிறப்பொடு பூசனை புரிந்து வந்தார். சொக்கேசர் திருவருளால் மீனாட்சியம்மையிடத்து ஞானக் குழந்தை சோமவார நாளன்று உதித்தது. திருஞான சம்பந்தரைப் போல இக்குழந்தையும் சிவம் பெருக்க வேண்டும் என எண்ணிய தாய் தந்தையர்கள் குழந்தைக்கு 'ஞானசம்பந்தர்' எனப் பெயரிட்டனர்.

ஞானசம்பந்தர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தார். ஐந்தாண்டுப் பிராயத்தில் கலை பயிலத் தொடங்குவித்தனர். ஞானசம்பந்தர் கலை ஞானம் யாவும் கல்லாமலே கற்றார். அதுகண்டு பெற்றோர் வியப்புற்றனர். தமது ஆன்மார்த்த மூர்த்தியைத் தரிசிக்க எண்ணி ஆலவாய்ப்பதிக்குத் தம் ஞானப்புதல்வரையும் உடனழைத்துப் புறப்பட்டனர். அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவாய்ப்பதியை அடைந்தனர்.

பொற்றாமரைப் பொய்கையில் நீராடி, புலவர் திலகமாக உள்ள ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானையும், தீந்தமிழின் சுவையாக உள்ள ஸ்ரீ மீனாட்சி அம்மையையும் வணங்கி வழிபட்டுச் சிலநாள் மதுரையிலேயே தங்கினர்; பிறகு பெற்றோர் ஸ்ரீவில்லிபுத்தூர் செல்ல எண்ணி ஆலவாய் அண்ணலிடம் விடைபெற்றனர். ஞானசம்பந்தர் மீது சொக்கேசர் திருவருள் பதிந்தமையால், ஞானசம்பந்தர் பெற்றோர்களைப் பார்த்து, 'தொடர்ந்து நின்ற தாயும் தந்தையும் இத் திருக்கோயிலில் வீற்றிருக்க அவர்களை விட்டு எப்படிப் பிரிவேன்? என்னுடலுக்குத் தாயுந் தந்தையுமாகிய உங்களுடன் வர இயலாது' என்று கூறினார். அது கேட்ட பெற்றோர் கலங்கினரேனும், திருவருளால் கிடைத்த குழந்தை திருவருளைப் பெருக்க முற்படுகிறது; இதுவும் இறைவன் திருவருள் போலும் எனத் தெளிந்தனர்; ஸ்ரீவில்லிபுத்தூருக்குத் திரும்பினர்.

ஞானசம்பந்தர் வழக்கம்போல் ஒருநாள் பொற்றாமரையில் நீராடச் சென்றார். கரையில் தொண்டர்கள் பலர் சிவபூசை புரிவதைக் கண்டுத் தாமும் அவ்வாறு சிவபூசை புரிய எண்ணினார். எண்ணத்தை இறைவன் சந்நிதானத்தில் விண்ணப்பித்தார். கருத்தறிந்து முடிக்கும் கருணை வள்ளல் அன்றிரவு ஞானசம்பந்தர் கனவில் தோன்றி 'ஞான சம்பந்தா! நீ விரும்பிய வண்ணம் நாம் சிவலிங்கத்திருமேனி கொண்டு பொற்றாமரைத் தடாகத்தில் ஈசான மூலையில் கங்கைக்குள் இருக்கிறோம்; நாளைக் காலையில் வந்து நம்மை எடுத்துப் பூசிப்பாயாக' என அருள் பாலித்தார். துயிலுணர்ந்த ஞானசம்பந்தர் சொக்கேசர் பணித்த வண்ணமே பொற்றாமரைத் தடாகத்தில் மூழ்கிச் சிவலிங்கத் திருமேனியைக்

கண்ணுக்கினிய பொருளாகப் பெற்றார். பூசனை முறை அறிய ஆசாரியன் வேண்டுமே என எண்ணி ஆலவாயண்ணலிடம் முறையிட்டார். சொக்கேசர் அன்றிரவு ஞானசம்பந்தர் கனவில் எழுந்தருளி வந்து, 'ஞானசம்பந்தா! நமது உபதேச பரம்பரையில் வந்தவர் திருவாரூர் ஞானப்பிரகாசர்; அவரிடம் சென்று உபதேசம் பெற்று நம்மை விதிப்படி பூசிப்பாயாக' என அருளினார். அவ்வண்ணமே கமலை ஞானப்பிரகாசருக்கும் கனவில் தோன்றி, வருகிற சோமவாரத்தன்று ஞானசம்பந்தனுக்கு விதிப்படி ஞானோபதேசம் செய்து சிவபூசை எழுந்தருளப் பண்ணிக் கொடுக்க' என அருளினார்.

ஞானசம்பந்தர் காலையில் எழுந்து திருவாருருக்குப் புறப்பட்டார். திருவானைக்கா முதலிய தலங்களை வணங்கிச் சோமவாரத்தன்று காலையிலேயே திருவாரூர் சேர்ந்தார். கமலாலயத்தில் நீராடித் திருக் கோயில் சேர்ந்து வலம் வந்த ஞானசம்பந்தர், சித்தீச்சரம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் சிவயோகத்தில் அமர்ந்திருந்த ஞானப்பிரகாசரைக் கண்டவுடன் காந்தங் கண்ட இரும்பைப்போல், இவரே தமது ஆசாரியன் என்றுணர்ந்து திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். ஞானப்பிரகாசரும் ஞானோபதேசம் செய்து சொக்கநாதர் பூசையும் எழுந்தருளப் பண்ணிக்கொடுத்தார்.

வழக்கம்போல் திருக்கோயிலுக்கு எழுந்தருளிய ஞானப்பிரகாசர் ஒருநாள் வழிபாடு முடித்து அர்த்தயாமம் ஆகும் வரையில் சித்தீச்சரம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் சிவயோகத்திலிருந்து அர்த்தயாம பூசையைத் தரிசித்து வீடு திரும்பினார். திரும்புகையில் கைவிளக்குப் பணிவிடைக்காரன் உறங்கிவிட, அக்கைவிளக்குப் பணியை

ஞானசம்பந்தரே மிக்க மகிழ்ச்சியுடன் மேற்கொண்டார். வீடு சேர்ந்த ஞானப்பிரகாசர் 'நிற்க' எனப் பணித்து உள்ளே சென்றார். ஞானசம்பந்தர், 'ஆசாரியன் ஆணை, நிற்க என்பதுதானே' என்று எண்ணியவராய் அவரால் நிலைநிறுத்தப்பெற்ற சிவயோக சமாதியிலே நின்றார். அன்றிரவு பெருமழை பெய்தும் ஞானசம்பந்தர் மீது ஒரு துளிகூடப் படவில்லை. விளக்கோ சுடர்விட்டெரிந்தது. விடியலில் இந்நிலைகண்ட குருபத்தினியார் குருவுக்குத் தெரிவிக்க, ஞானப்பிரகாசரும் ஞானசம்பந்தரது பெருநிலை கண்டு வியந்து, 'அப்பனே! நீ ஆசாரியனாகும் தகுதியுடையாய்; ஆகவே நீ மாயூரத்திற்கு அண்மையில் உள்ளதும், தருமராசனால் பூசிக்கப்பெற்றதும், வில்வாரண்ய க்ஷேத்திரமுமான தருமபுரத்தில் அமர்ந்து, பக்குவ ஆன்மாக்கட்கு உண்மையை உபதேசவாயிலாக உணர்த்துவாயாக' என ஆணை தந்தனர். இது முதலாக ஞானசம்பந்தர் குருஞானசம்பந்தராயினார், "தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்" என்பதை நினைத்தார். ஆசாரியர் ஆணையை சிரமேற்கொண்டார். தருமபுரம் சார்ந்தார். பல்லாண்டுகள் தருமபுரத்தில் வீற்றிருந்து பல உயிர்கட்கு உபதேச வாயிலாக உண்மை உணர்த்தினார். சைவ சித்தாந்தத்தைத் தக்க முறையில் பரவச்செய்தார். தமது பேரின்ப அனுபவத்தை எல்லோரும் அநுபவிக்கவேண்டிப் பாடல்கள் வாயிலாக அவற்றை அருளிச் செய்தார். அவை சிவபோக சாரம், சொக்கநாத வெண்பா, முத்திநிச்சயம், சொக்கநாதர் கலித்துறை, ஞானப்பிரகாசமாலை முதலிய எட்டு நூல்களாக இலங்குகின்றன. இவை பண்டார சாத்திரம் எனப் பகரப்பெறும்.

இவ்வாறு பல்லாண்டு ஞான அரசாட்சி புரிந்த குருஞானசம்பந்தர் சிவசமாதி கூடத் திருவுளங்கொண்டார். தமது சீடர்களில் அதிதீவிர நிலையில் உள்ள ஆனந்த பரவசருக்கு ஞானோபதேசம் செய்து தமது பீடாதிபத்தியத்தை ஒப்புவித்துச் சிவசமாதி கூடினார். அதிதீவிர நிலையிலிருந்த ஆனந்தபரவசர் ஸ்ரீகுருஞானசம்பந்தர் கோயிலின் மேல்பால் சிவசமாதி கூடிவிட்டார். அஃதறிந்த ஏனைய சீடர்கள் குருஞானசம்பந்தர் சந்நிதி சேர்ந்து தங்களுக்குக் குருநாதன் இல்லை என்ற குறையைப் போக்கிக் குரு சந்தான பரம்பரை நீடு வளர அருள்புரிய வேண்டினர். குருஞான சம்பந்தர் சமாதி நிலையினின்றும் பிரிந்து வந்து தமது சீடர்களுள் ஒருவரான சச்சிதானந்தருக்கு ஞானதீக்ஷை செய்து ஞானசமாதி கைகூடச்செய்து அவரைப் பீடத்திலமர்த்தி வைகாசி மாதம் கிருஷ்ணபக்க ஷஷ்டி திதியில் சிவலிங்கத் திருவுருவின் அடியில் சிவசமாதி கூடினார்.

கி.பி.16ஆம் நூற்றாண்டில் தோன்றிய ஸ்ரீ குருஞான சம்பந்தரால் தோற்றுவிக்கப்பெற்ற இத்திருத் தருமையாதீனம் மொழித் தொண்டும், சமயத் தொண்டும், சமூகத் தொண்டும் ஒல்லும் வகையெல்லாம் ஆற்றிவருகிறது. இப்பொழுது ஞான பீடத்தில் எழுந்தருளியிருந்து அருளாட்சி புரிபவர்களாகிய இருபத்தாறாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளால் ஸ்ரீகுரு ஞானசம்பந்தர் திருப்பெயரில் நிறுவப்பெற்றுள்ள "ஞானசம்பந்தம் பதிப்பகம்" அறக்கட்டளையிலிருந்து இந்நூல் வெளியிடப்பெறுகிறது.

உ

சிவமயம்

## சந்தான குரவர் வணக்கம்

*ஈராண்டிற் சிவஞானம் பெற்றுயர்ந்த*
*மெய்கண்டார் இணைத்தாள் போற்றி*
*நாராண்ட பல்லடியார்க் கருள் புரிந்த*
*அருணந்தி நற்றாள் போற்றி*
*நீராண்ட கடந்தை நகர் மறைஞான*
*சம்பந்தர் நிழற்றாள் போற்றி*
*சீராண்ட தில்லைநகர் உமாபதியார்*
*செம்பதுமத் திருத்தாள் போற்றி*

## பதினான்கு சாத்திரங்கள்

*உந்தி களிறு உயர்போதம் சித்தியார்*
*பிந்திருபா உண்மை பிரகாசம் — வந்தஅருட்*
*பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு*
*உண்மை நெறி சங்கற்ப முற்று.*

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

**கொற்றங்குடி உமாபதிதேவ நாயனார்**

அருளிச் செய்த

# திருவருட் பயன்

**விளக்க உரை**

---

## நூற்பெயர் விளக்கம்

'திருவருள்' என்பது காரிய ஆகுபெயராய் அதனைத் தெளிவிக்கும் மெய்ந்நூல்களைக் குறித்தது. 'பயன்' என்பது 'திரண்ட பொருள்' என்பதாம். எனவே, 'திருவருட் பயன்' என்பது, 'திருவருளைத் தெளிவிப் பனவாய மெய்ந்நூல்களின் திரண்ட பொருளைக் கூறும் நூல்' என்பதாம். மெய்ந்நூல் - பொருளியல்புரைக்கும் நூல். இதனை, 'தத்துவ சாத்திரம்' என்பர். 'திரண்ட பொருளைக் கூறுவது' எனவே 'தொகுத்தல் யாப்பான் அமைந்தது' என்பது அறியப்படும். 'திரு' என்னும் அடை புணர்த்தமையால், அருள் 'இறைவனுடையது' என்பது விளங்கும்.

பொருளியல்புகளை உள்ளவாறு பொதுவாக உணர்த்துவன, 'வேதாந்தம்' எனப்படும் உபநிடதங்கள் என்பதும், சிறப்பாக உணர்த்துவன 'ஆகமாந்தம்' எனப்படும் சைவாகம ஞானபாதங்கள் என்பதும், அவற்றின் உண்மைப் பொருள்தானும், திருக்கயிலையில்

வீற்றிருந்தருளும் சீகண்ட பரமசிவனிடமிருந்து வரலாற்று முறையான் வரும் திருமரபில் நின்றுகேட்பினன்றி விளங்கமாட்டாது என்பதுமே ஆசிரியர் துணிபாகலின், அங்ஙனம் தாம் கேட்ட நல்லாசிரியரது அருண் மொழியும்,அருள் நூலும் பற்றியே, சந்தானகுரவர் நால்வருள் ஈற்றில் நிற்பவராகிய கொற்றங்குடி உமாபதிதேவ நாயனார் இந்நூலைச் செய்தருளுகின்றார். ஆசிரியர் துணிபாக மேற்காட்டப்பட்ட துணிபு சைவ சிந்தாந்தமேயாதல் அறிந்து கொள்க.

'உலகியல், மெய்ந்நெறி' என்னும் இருவகை நெறிகளுள் உலகியலை உணர்த்துவதாய திருவள்ளுவ நாயனாரது திருக்குறளுக்குப்பின், மெய்ந்நெறி உணர்த்தும் திருக்குறளாய் அமையுமாறு இதனைச் செய்தல் ஆசிரியரது கருத்து என்பது. நூலை, 'அகர உயிர்போல்' எனத் தொடங்குதலாலும், ஈரடிக் குறள்வெண்பா யாப்பினாலே நூன்முழுதும் அமையச் செய்தலாலும், பத்துக் குறள்கள் ஓரதிகாரமாக ஆக்குதலாலும் அறியப்படும். இதனை இந்நூலின் முந்துரை ஆசிரியர் நிரம்ப அழகிய தேசிகர் செய்த "திருமகள் பிறந்த" என்னும் சிறப்புப் பாயிரத்தாலும் அறிக. வீட்டு நெறிப்பாலாக ஔவை குறள் இருப்பினும், அஃது யோகத்தையன்றிப் பொருளியல்பாகிய ஞானத்தைக் கூறாமை அறிக.

இவ்வாறு செய்யப் புகுந்த ஆசிரியர், எடுத்துக்கொண்ட நூல் இடையூறின்றி இனிது முற்றுதற்பொருட்டு முதற்கண் இடையூறு நீக்கும் யானைமுகக் கடவுளை வாழ்த்துவதாகிய காப்புக் கூறுகின்றார்.

# காப்பு

"நற்குஞ் சரக்கறு நண்ணிற் கலைஞானம்
கற்குஞ் சரக்கன்று காண்"

### இதன் பொருள்

நல் குஞ்சரக் கன்று நண்ணின் — அருள் வடிவான யானைக் கன்றாகிய விநாயக் கடவுளைப் புகலிடமாக அடைந்தால்; கலைஞானம் — மெய்ந் நூலறிவு; கற்கும் சரக்கு அன்று — கற்றுப் பெறும் பண்டமாகாது; 'தானே வரும்' என்றபடி.

### விளக்கவுரை

உலகில் உள்ள யானைக்கன்றுகளினின்றும் பிரித்தற்கு. 'நல்' என்னும் அடைமொழி கொடுத்தார். யானை முகமும். பிள்ளைமையும் உடைமைபற்றிப் பிள்ளையாரை 'யானைக் கன்று' என்றார். "கலை" என்றது. ஏற்புழிக் கோடலால் மெய்ந்நூலையே குறித்துநின்றது. 'தானே வரும்' என்றது. 'எளிதின் வரும்' என்றவாறாம். காண், முன்னிலையசை, முன்னிலையாயது நெஞ்சு என்க. 'நண்ணின் எளிதின் வரும்' என்றதனால், 'யாமும் நண்ணி, இந்நூலை எளிதின் முற்று விப்போம்' என்பது குறிப்பெச்சமாயிற்று.

## நூல்

சைவாகம ஞானபாதங்கள், பொருள்களை, 'பதி, பசு, பாசம்' என மூன்றாக வரையறுத்து, அவற்றின் இயல்புகளை, 'சொரூப லட்சணம், தடத்த லட்சணம்' என இருவகையாகக் கூறும். பதி - கடவுள், பசு - உயிர், பாசம் - உயிர்களைப் பிணித்துள்ள கட்டு. இவை, முறையே, 'இறை, உயிர், தளை' எனத் தமிழில் சொல்லப்படும். சொரூப லட்சணமாவது, ஒருபொருள் பிறிதொன்றைச் சாராது தன்னளவில் நிற்கும் நிலையில் அதன்பாற் காணப்படும் தன்மை. தடத்த லட்சணமாவது, ஒருபொருள் பிறபொருளோடு சார்ந்து நின்ற விடத்து அச்சார்பு காரணமாக அதன்பாற் காணப்படும் தன்மை. எனவே, 'சொரூப லட்சணம் இயற்கைத் தன்மை' என்பதும், 'தடத்த லட்சணம் செயற்கைத் தன்மை' என்பதும் பெறப்படும். 'சொரூப லட்சணம், தடத்த லட்சணம்' என்பவற்றை முறையே, உண்மை இயல்பு, பொதுவியல்பு' எனத் தமிழில் மொழிபெயர்த்து வழங்குவர். அளவை நூலில் கூறப்படும், 'பொதுவியல்பு, சிறப்பியல்பு' என்பன வேறு. உண்மை இயல்பு, 'தன்னியல்பு' என்றும் சொல்லப்படும். சிலவிடத்து அது 'சிறப்பியல்பு' எனப்படுதலும் உண்டு.

மேற்கூறிய முப்பொருள்களுள் மேலானது பதிப்பொருளேயாதலின், அதன் இயல்பையே முதற்கண் கூறுகின்றார்.

முதல் அதிகாரம்

## பதிமுதுநிலை

அஃதாவது, இறைவனது பழமையான தன்மை. இதன் முதல் திருக்குறள்,

1. "அகர வுயிர்போ லறிவாகி யெங்கும்
நிகரிலிறை நிற்கும் நிறைந்து"

என வரும்.

### இதன் பொருள்

அகர உயிர்போல் — அகரமாகிய உயிரெழுத்துத் தானே இயங்கவும், பிற எழுத்துக்களை இயக்கவும் வல்லதாய்ப் பிற எல்லா எழுத்துக்களினும் இயைந்து வேறற நிற்றல்போல; நிகரில் இறை — தன்னோடு ஒப்பது ஒரு பொருளும் இல்லாத பதிப்பொருள்; அறிவாகி — தானே அறியவும், பிறவற்றை அறிவிக்கவும் வல்ல பேரறிவுடையதாய்; எங்கும் நிறைந்து நிற்கும் — பிற எல்லாப் பொருளிடத்தும் கலந்து வேறற நிற்கும்.

### விளக்கவுரை

'எழுத்து' என்று ஒழியாது, 'உயிர்' என விதந்தது, 'தானே இயங்க வல்லது' என்பது உணர்த்துதற்கும், எல்லா உயிரையும், பொதுப்படக்கூறாது, அகரத்தையே குறித்தது, தானே இயங்குவதன்றியும் பிறவற்றை இயக்குதல் பற்றியுமாம். அதனால் அத்தன்மைகள் வெளிப்படையாக வைத்து உரைக்கப்பட்டன. அதனானே, "அறிவாகி" என்றதற்கும் உவமை பெறப்பட்டது. இது மறுபொருள் உவமமாகலின், எங்கும் நிறைந்து நிற்றலாகிய பொதுத் தன்மைக்கு ஏதுக்களும், இடங்களும் வேறு வேறாயின.

உவமைக்கண், 'பிற எல்லா எழுத்துக்களினும்' என்றதனை, 'உயிரும் மெய்யும் ஆகிய இருதிறத்து எல்லா எழுத்துக்களினும்' என்றும், பொருட்கண் 'பிற எல்லாப் பொருளிடத்தும்' என்றதனை, 'சித்தும், சடமும் ஆகிய பிற எல்லாப் பொருளிடத்தும்' என்றும் விரித்துரைத்துக் கொள்க. சித்து - அறிவுடையது. சடம் - அறிவில்லது. பிற பொருள்கள், பசுவும், பாசமும். பசு - சித்து; பாசம் - சடம். "நிற்கும்" என்றது, 'நின்று இயக்கும்' என்ற வாறேயாம்.

*"அஆ ஆஇரண்டு அங்காந் தியலும்"*

(தொல் - எழுத்து, பிறப்பியல்)

என்றவாறு, எழுத்துக்களைச் சொல்ல முயலும் முயற்சிகளுள் முதல் முயற்சியாகிய அங்காத்தல் நிகழ்ந்தபொழுதே அகரம் பிறந்து நிற்றலானும், அம்முதல் முயற்சியின்றிப் பிற முயற்சிகள் நிகழ்தல் கூடாமையானும், பிற முயற்சிகளால் பிறக்கும் பிற எல்லா எழுத்துக்களிலும் அகர உயிர் கலந்து வேறற நிற்றலும், நின்று அவற்றை இயக்குதலும் அறியப்படுமாறு உணர்க. இவ்வுண்மை நோக்கியே,

*"மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்"*

(தொல், எழுத்து, மொழிமரபு)

என, 'தனி மெய்களைச் சொல்லுமிடத்து யாதொரு மெய்யினையும் அகரத்தொடு கூட்டியே சொல்லுதல் வேண்டும்' என ஆணை தந்தனர் தமிழாசிரியர். ஒலிவடிவில் தனி மெய்கள் இவ்வாறாகவே, வரிவடிவிலும் அவை அவ்வாறாதல் வேண்டும் என்பது சொல்லாமே அமைந்தது. எனவே தனி மெய்கள் வரிவடிவில் புள்ளியொடு நிற்றல் மொழியிடத்தேயாயிற்று.

திருவள்ளுவ நாயனார் ஆதி பகவனது முதலாந்தன்மைக்கு அகரத்தை உவமையாகக் கூறியதனை விளக்குமிடத்து, "முதல்" என்றதனை, 'தலைமை' எனக் கொண்டு விளக்க உரை கூறினார் பரிமேலழகர், தலைமைப் பொருளே, 'உடைப் பொருள்' எனப்படும். உடைப் பொருட்கும் உடைமைப் பொருட்கும் உள்ள தொடர்பு, அரசனுக்கும் அவனது வெண்கொற்றக்குடை, செங்கோல், மணிமுடி முதலியவற்றிற்கும் உள்ள தொடர்புபோல வேற்றுமைத் தொடர்பாவதன்றி, உயிருக்கும், உடம்பிற்கும் உள்ள தொடர்புபோல ஒற்றுமைத் தொடர்பன்றாகலானும், ஆதி பகவற்றும் உலகிற்கும் உள்ள தொடர்பு வேற்றுமைத் தொடர்பாகாது உடலுயிர்போல ஒற்றுமைத் தொடர்பே ஆகலானும், "ஆதி பகவன் முதற்றே உலகு" என்பதில், "முதல்" என்றதற்கு, 'உலகின் இயக்கத்திற்கு அடிநிலை யாதல் என்பதே பொருள்' என்பதும் இத்திருக்குறளானே விளங்கும். 'இயக்கம்' என்பதனை உயிர்கட்குச் செயற்படுதலோடு, அறிதலும் கொள்க.

'உலகத்தின் இயக்கத்திற்கேயன்றி, உயிர்களின் இயக்கத்திற்கும் இறைவனே அடிநிலை' என்பதற்குத் திருப்பாடல் மேற்கோள்,

*"போற்றி என் வாழ்முத லாகிய பொருளே"*
(திருவாசகம் - திருப்பள்ளியெழுச்சி 1)

என்றற் றொடக்கத்தன. இதனால், இறைவன் உலகிற்கு முதலாதலாவது, அவற்றின் இயக்கத்திற்கு அடிநிலையாய் நிற்றல் என்பதே சைவசித்தாந்தம்' என்பது விளங்கும். இறைவன் உலகத்தின் அனைத்து இயக்கத்திற்கும் அடிநிலையாதலோடு, இயற்கையாய

பேரறிவுடையன் எனவே, அவன் அவை அனைத்திற்கும் தலைவனாய் உடைப்பொருளாதல், தானே பெறப்படும். "முதற்றே" என்பதனால் குறிப்பிற் பெறப்பட்ட தலைமையை இனிது விளக்கவே திருவள்ளுவர் பின்பு இறைவனை 'வாலறிவன்' எனக் குறித்தார்.

பிற எல்லாவற்றிலும் நிறைந்து நிற்றல் அளவிற்கு அகரம் உவமையாகக் கூறப்பட்டதாயினும், உண்மையில் இறைவன் தன்னிகரில்லாத 'தனிப்பெரும் பொருளே' என்றற்கு, "நிகரில் இறை" என்றார். திருவள்ளுவரும், "தனக்குவமை இல்லாதான்" என இறைவனது தனிமையைக் குறித்தார்.

'இறைவன தன்னிகரில்லாத தனியனே' என்றற்குத் திருப்பாடல் மேற்கோள்.

*"மற்றாருந் தன்னொப்பார் இல்லாதானை"*
(திருமுறை 6, 1, 2)

*"ஒப்புடைய னல்லன்; ஒருவ னல்லன்*
*ஓரூரன் அல்லன்ஓர் உவமன் இல்லி"*
(திருமுறை 6, 97, 10)

என்றற் றொடக்கத்தன.

"அகர உயிர்போல்" என்ற உவமையானே, உயிரும் மெய்யும் ஆகிய எழுத்துக்களின் இயக்கத்திற்கு அகர உயிர் இன்றியமையாதது போல, 'சித்தும், சடமும் ஆகிய உலகத்திற்குப் பதி இன்றியமையாதது' என இதனால் பதி உண்மை அளவையுடன் கூறப்பட்டவாறு அறிக. "அகர முதல எழுத்தெல்லாம்" என்ற குறளால் திருவள்ளுவரும் முதற்கடவுள் உண்மையே கூறினார்.

இனி இரண்டாவது திருக்குறள்,

2. "தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி
பின்னமிலான் எங்கள் பிரான்"

என வரும்.

இது, மேல், "அகர உயிர்போல்" எனக் காட்டிய உவமை பற்றி வருவதோர் ஐயத்தை நீக்குகின்றது.

அஃதாவது, 'எழுத்துத்தோறும் நிறைந்து நின்று அவற்றை இயக்கும் அகர உயிர் ஒன்றாகாது அவ்வவற்றிற்கும் வெவ்வேறாய்ப் பலவாம் ஆகலின், அவ் அகரமாகிய உவமையால் அறியப்படும் பதியும் அவ்வாறே ஒன்றாகாது பலவாதல் பெறப்படும். படவே, "நிகரில் இறை" எனப் 'பதிக்குத் தனிமை கூறியது பொருந்தாது போலும்' என்னும் ஐயத்தினை அப்பதியது இயல்பு கூறும் முகத்தான் நீக்குகின்றது இத்திருக்குறள் என்க.

**இதன் பொருள்**

எங்கள் பிரான் – யாம் கூறுகின்ற இறைவன்; தன் நிலைமை – பிறப்பு இறப்புக்கள் இன்றி என்றும் ஒரு பெற்றியனாய் நிற்கின்ற ஒருவனாகிய தனது நிலைமையை; மன் உயிர்கள் சாரத் தரும் – பலவாகிய உயிர்களும் அடையுமாறு தனது உதவியைத் தருகின்ற; சத்தி பின்னம் இலான் – சத்தியோடு வேற்றுமையின்றி நிற்பவன்.

**விளக்கவுரை**

எனவே, 'அவன் ஒருவனாய் நின்றே பலவற்றினும் நிறைந்துநிற்பான்' என்பது குறிப்பெச்சம்.

'மன்னுயிர்களது நிலைமை பிறப்பு இறப்புகளில்

பட்டு உழலுதல்' என்பது காட்சியளவையானே பெறப்படுதலின், அவை அந்நிலைமையினின்றும் நீங்கி அடையப்படுவதாகிய இறைவனது நிலைமை அத்தன்மை இல்லாது என்றும் ஒரு பெற்றியனாய் நிற்றல் என்பது பெறப்பட்டது. "தன்" என்றதனால், இறைவன் ஒருவனே யாதல் குறிக்கப்பட்டது.

அகர உயிர் ஒன்றாய் நின்றே பலவற்றிற் செல்ல மாட்டாது, அவ்வவற்றிற்கும் வேறு வேறாதற்குக் காரணம், அது பிறந்து கெடுதலினாலாம். ஆகவே, அதுபோலப் பிறந்து கெடுந்தன்மை இறைவற்கு இல்லாமையால், அவன் ஒருவனே யாதலல்லது, பலராதற்குக் காரணம் இல்லை' என்றற்கு உயிர்களின் வேறுபட்ட அவனது தன்மையைப் பெற வைத்தார்.

'அவ்வாறாயினும் ஒருவன் பலவற்றில் நிறைந்து நிற்றல் கூடுவதன்றாம்; அதனால், ஒருவனாயின் எங்கும் நிறைந்து நிற்றல் கூடாது; எங்கும் நிறைந்து நின்றானாயின், ஒருவனாதல் கூடாது' என்னும் ஐயத்தினை நீக்குதற்கு, "சத்தி பின்னம் இலான்" என்றார். அஃதாவது 'ஞாயிறு (பகலவன்) ஒன்றேயாயினும், பலவிடத்தும் பரந்து விரிதற்குரிய கதிர்களை உடைமையால் எங்கும் நிறைந்து நிற்றல் போல, இறைவனும் ஒருவனேயாயினும், எல்லா வற்றினும் செல்லுதற் குரிய பேராற்றலை உடைமையால் பலவற்றினும் நிறைந்து நின்று அவற்றை இயக்குவான்' என்றவாறு.

'இறைவன் ஒருவனாய் நின்றே பலபொருளிலும் நிறைந்து நிற்பான்' என்பதற்குத் திருப்பாடல் மேற்கோள்,

*"ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க"*

(திருவாசகம் சிவபுராணம்)

*"நிலம்நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்*
*புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்*
*உலகே ழெனத்திசை பத்தெனத் தான் ஒருவனுமே*
*பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ"*

( திருவாசகம் - திருத்தோணோக்கம், 5)

என்றற் றொடக்கத்தன.

நின்ற திருத்தாண்டகப் பதிகம் முழுவதிலும் "எம் அடிகள்" என்று இறைவனை ஒருவனாகக் குறிப்பிட்டு "இரு நிலனாய்த் தீயாகி" என்பது முதலாகப் பலபட அவன் பலவாகி நிற்கின்ற தன்மை விரித்துரைக்கப்பட்டது. வேதத்துள்ளும் திருவுருத்திரமறை, ஒருவனாகிய இறைவன் பலவாகி நிற்றலையே எடுத்தோதித் துதிக்கின்றது.

இறைவனுக்கு உள்ள இவ் ஆற்றல் அறிவுருவானது என்பது முன்னைத் திருக்குறளில், "அறிவாகி" என்றதனால் விளங்கிக் கிடந்தது. 'ஆற்றல், சத்தி, வல்லமை' என்பன ஒருபொருட் சொற்கள், அறிவுருவான ஆற்றல், 'சிற்சத்தி' என்றும், அறிவல்லாததாகிய ஆற்றல், சட சத்தி, என்றும் வடமொழியில் சொல்லப்படும்.

பின்னம் - வேற்றுமை. 'சத்தியோடு அவனிடை வேற்றுமை இல்லை' எனவே, சத்தி, சத்திமான்களிடையே (ஆற்றலும், ஆற்றல் உடைய பொருளும் என்பவற்றிடையே) எவ்விடத்தும் வேற்றுமை இன்மை பெறப்படும். கதிரும், கதிரவனும் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு. இதனால் 'சத்தி சத்திமான்கள், குண குணித் தன்மை உடையவர்கள்' என்பது பெறப்படும். சத்தி, குணம்; சத்திமான், குணி; கதிர், குணம்; கதிரவன், குணி. இங்குக் குறிக்கப்பட்ட சத்தியை உடைய சத்திமான் சிவம்

பத்தி உடையவனை, 'பத்தன்' என்பதுபோல, சத்தி உடையவனை 'சத்தன்' என்றும் கூறுதல் உண்டு.

'சத்தி, குணம்' என்பதும், 'சிவம் அதனை உடைய குணி' என்பதும் மேற்குறித்தவாற்றால் பெறபட்டமையாலும், குண குணிகட்குத் தம்முள் வேற்றுமை இன்மையாலும் சத்தியும், சிவமும் வேறு வேறு முதல்கள் அல்ல; ஒரு முதலின் இரு தன்மைகளே' என்பது விளங்கும்' இதனால், 'சத்தி பெரிதா, சிவம் பெரிதா?'' என ஐயுற்று வினாவுதலும், அதற்கு அவற்றுள் ஒன்றையே பெரிது எனப்பலர் தம்முள் முரணிக்கூறி விடுத்துத் தம் கொள்கையை நாட்டுதற்குப் பல காரணங் கூறிப் பூசல் செய்தலும் போல்வனவெல்லாம் சத்தியும், சிவமும் இருவேறு முதல்களல்ல என்பதனை உணராது, இருவேறு முதல்கள் என மயங்குதலால் உளவாவனவே என்க.

சத்திமானே செயலைச் செய்பவனாக, சத்தி அவனுக்குத் துணையாதல் பற்றிச் சிவத்தை ஆண் மகனாகவும், சத்தியைப் பெண்மகளாகவும் வைத்து, அவ்விருவரிடையே மணாளன், மணாட்டி நிலைமையையும், அவர்களது செயலால் பிறப்பெய்தி வாழும் உயிர்களோடு அவர்களிடை மக்களும், பெற்றோருமாம் நிலைமையையும் ஏற்றிப் போற்றும், இறைவனிடத்தில் பேரன்பைப் பெருக்குகின்ற திருப்பாடல்கள். இவ்வுண்மை உணராத காரணத்தாலே புறச்சமயத்தார், 'எம்மைப் போலவே மனைவியை மணந்து மக்களைப் பெற்று வாழும் உங்கள் சிவபெருமான் கடவுளாதல் எவ்வாறு' எனக் கடாவி மகிழ்வர்.

'சிவமும், சக்தியும் இருமுதல்கள் அல்ல' என்னும்

உண்மையை விளக்கவே, சிவபிரான் ஓருடம்பிலே, ஆண், பெண் இருதிறனாய்க் காட்சி வழங்குகின்றான். இக்காட்சியை எடுத்தோதும் திருப்பாடல்கள் சில வருமாறு:

*"ஒருமை பெண்மை உடையன்"*

(திருமுறை 1, 1, 5)

*"ஓருடம் பிருவ ராகி"*

(திருமுறை 8 - 10)

*"புதுவிரி பொன்செய் ஓலை ஒருகாதொர் காது*
*சுரிசங்கம் நின்று புரள,*
*விதிவிதி வேத கீதம் ஒருபாடும் ஓத*
*ஒருபாடு மெல்ல நகுமால்;*
*மதுவிரி கொன்றை துன்று சடைபாகம் மாதர்*
*குழல்பாகம் ஆக வருவர்;*
*இது இவர் வண்ண வண்ணம்; இவள் வண்ண வண்ணம்;*
*எழில்வண்ண வண்ணம் இயல்பே"*

(திருமுறை 7, 33, 1)

*"பாதிஓர் பெண்ணை வைத்தாய்"*

(திருமுறை 4, 22, 6)

*"பாவைஓர் — கூறுதாங்கிய குழகரோ"*

(திருமுறை 7, 20, 3)

*"குவளைக் கண்ணி கூறன் காண்க"*

(திருவாசகம் - திருவண்டப்பகுதி)

*"தோலும், துகிலும், குழையும், சுருள்தோடும்,*
*பால்வெள்ளை நீறும், பசுஞ்சாந்தும், பைங்கிளியும்,*
*சூலமும், தொக்க வளையும் உடைத்தொன்மைக்*
*கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ"*

( திருவாசகம் - திருக்கோத்தும்பி 13)

சிவம் சத்திகளது தன்மை இதுவாகவே, ஞாயிறு பிற பொருளிடத்துக் கலந்துள்ள நிலையில், 'கதிர்' என்றும், தன்னளவில் நிற்குமிடத்து, 'கதிரவன்' என்றும் சொல்லப்படுதல்போலப் பதிப்பொருள் பிற பொருள் இடத்துக் கலந்து நிற்கும் நிலையில் 'சத்தி' என்றும், அவ்வாறின்றித் தன்னளவில் நிற்குமிடத்து, 'சிவம்' என்றும் சொல்லப்படுகின்றது என்பது விளங்கும்.

இனி, ஞாயிறு, கண்ணுக்குப் பிறபொருளைக் காட்டுமிடத்து, 'கதிர்' என்றும், அவ்வாற்றால் காண்கின்ற கண்ணுக்குக் காட்டுவதோடு நில்லாது காணப்படும் பொருளும் தானேயாகின்ற பொழுது 'கதிரவன்' என்றும் சொல்லப்படுதல் போல, பதிப்பொருள் உயிர்களுக்கு அறிவிக்கின்ற நிலையில் 'சத்தி' என்றும், அவ்வாற்றால் அறிகின்ற உயிர்க்கு அறிவித்தலோடு ஒழியாது அறியப்படும் பொருளும் தானேயாய் நிற்குமிடத்து, 'சிவம்' என்றும் சொல்லப்படும் என்பதும் உணர்க. 'இறைவன், அறிவிக்கின்ற சத்தியாய் நிற்கும்பொழுது அறிவும்,அருளுமாய் நிற்பன்' எனவும், 'அறியப்படும் பொருளாய் நிற்கும் பொழுது இன்பமாயும், நுகரப்படும் பொருளாயும் நிற்பன்' எனவும் உணர்க. இறைவன் தன்னையே உணர்ந்து நிற்பார்க்கு எல்லையில் இன்பமாக மேலும் மேலும் விளங்குவன் என்பதை,

*"ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்*
*போகமாய்த் தான்விளைந்த பொற்பினான்"*

(சூ. 11, அதி.1)

என்பதனானே அறியப்படும்.

'சத்தி' சிவத்தின் தன்மையை உயிர்கள் சாரச்

செய்யும் என்பதனால், 'அஃது அவ்வாறு செய்தல் வேண்டும்' என்று பதிக்குப் பசுக்கள்மீது உள்ள அருளேயன்றி வேறில்லை' என்பது போந்தது.

*"அருளுண்டாம் ஈசற்கு அதுசத்தி அன்றே*
*அருளும் அவனன்றி இல்லை – அருளின்*
*றரனன்றே இல்லை அருட்கண்ணார் கண்ணுக்*
*கிரவிபோல் நிற்கும்அரன் ஏய்ந்து"*

(சூ.5, அதி.2)

எனச் சிவஞானபோதத்தினும்

*"அருளது சத்தியாகும் அரன்றனக்கு; அருளை யின்றித்*
*தெருள்சிவம் இல்லை; அந்தச் சிவமின்றிச் சத்தி இல்லை;*
*மருளினை அருளால்வாட்டி மன்னுயிர்க் களிப்பன், கண்கட்*
*கிருளினை ஒளியால் ஓட்டும் இரவியைப் போல ஈசன்"*

(சூ. 5.9)

எனச் சிவஞான சித்தியினும் விளக்கப்பட்டமை காண்க.

*"நங்கையினால் நாம்அனைத்தும் செய்தாற்போல் நாடனைத்தும்*
*நங்கையினால் செய்தளிக்கும் நாயகனும் – நங்கையினும்*
*நம்பியாய்த் தான்நடுவே நாட்டப் பெறும்இதுகாண்*
*எம்பெருமா னார்தம் இயல்பு"*

என்ற திருக்களிற்றுப்படியாரானும் இச் சத்தி சிவங்களது இயல்பு இனிது உணரப்படும்.

இவ்வாற்றால் 'இறைவன், பிறப்பு இறப்பு இன்றி நிலைபேறுடையனாதலின், அனைத்தையும் இயக்குதற்கு ஒருவனே ஆதலன்றி வேறுவேறாதல் வேண்டா' என்பதும், 'ஒருவனன்றிப் பலர் இல்லாதபொழுது ஒருவனே பலவற்றிலும் நிறைந்து நிற்றல் பெறப்படுதலின், அவ்வாறு நிறைந்து நிற்பதொரு சத்தி அவனுக்கு உண்டு' என்பதும்,

'அச்சத்தி மேற்கூறியவாறு அறிவாதலோடு, அருளும் ஆவது' என்பதும், 'அச்சத்தியினின்றும் சிவன் வேறாத லின்றி ஒன்றானவனே' என்பதும் இதனால் கூறப்பட்டவாறு அறிக.

மூன்றாவது குறள்,

3. "பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின்
அருமைக்கும் ஒப்பின்மை யான்"

என வரும்.

**இதன் பொருள்**

பெருமைக்கும் – எல்லாப் பொருளும் தன்னுள் அடங்க, அவை எல்லாவற்றிலும் தானே பெரிய பொருளாய் அவற்றைக் கடந்து நிற்கும் தன்மைக்கும்; நுண்மைக்கும் – எல்லாப் பொருளிலும் அவற்றிற்கு உள்ளீடாய் நிறைந்து நிற்கும் சிறுமைக்கும்; பேர் அருட்கும் – அளவற்ற உயிர்கள் மீதும் என்றும் மாறாது கொண்டு நிற்கும் பேரிரக்கத்திற்கும்; பேற்றின் அருமைக்கும் – பிறர் தன்னைப் பெறுதற்கரிய நிலைக்கும்; ஒப்பின்மையான் – நிகர் வேறொன்றில்லாத சிறப்பினை உடையவன் எங்கள் இறைவன்.

**விளக்கவுரை**

முன்னைக் குறளில் உள்ள, 'எங்கள் பிரான்' என்பது இக்குறளிலும் வந்து இயையும்.

*"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்*
*அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி*
*ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்*
*நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன*
*இன்னுழை கதிரின் துன்னணுப் புரையச்*
*சிறிய வாகப் பெரியோன்"*

(திருவாசகம், திருவண்டப்பகுதி 1 - 6)

என இறைவனது பெருமையும்,

*"அண்டம்ஓர் அணுவாம் பெருமைகொண் டணுஓர்*
*அண்டமாம் சிறுமை கொண்டு"*

(திருவிசைப்பா - 13, 6)

என்று அவனது பெருமை, சிறுமை இரண்டும் கூறப்பட்டவாறு காண்க.

அளவிலாத அருளுடையனாதல்பற்றி இறைவன் 'கருணைக் கடல்' எனக் கூறப்படுதல் வெளிப்படை. உயிர்கள் இறைவனைப் பெறுதற்கருமை, அவற்றிற்கு உள்ள பாசத்தடையினாலாயது. பெற்ற பின்பும் அவற்றது சிறுமையால் அவனது இயல்பு முற்றும் உயிர்களால் அறியப்படாது அதனை,

*"கடல்அலைத்தே ஆடுதற்குக் கைவந்து நின்றும்*
*கடல்அளக்க வாராதாற் போலப் – படியில்*
*அருத்திசெய்த அன்பரைவந் தாண்டதுவும் எல்லாம்*
*கருத்திற்குச் சேயனாய்க் காண்"*

என்று கூறும் திருக்களிற்றுப்படி. 90.

இதனால் முதற்கண் "நிகரில் இறை" என்றது இனிது விளக்கப்பட்டது. எனவே, 'இறைவன் ஒப்புயர்வற்ற தனிப் பொருள்' என்றதாயிற்று. 'பரம்பொருள், பரவத்து' என்றெல்லாம் கூறுதற்கும் இதுவே கருத்தென்க. பரம்மேன்மை. "பதி பரமே" என்பது சிவப்பிரகாசம்.

இவ்விரு குறள்களிலும், "எங்கள் பிரான்" என்றதனால் 'எங்களுக்கு வேறுகடவுள், பிறருக்கு வேறுகடவுள்' எனக் கடவுளர் பலர் உளர் எனக் கூறியதன்று; 'கம்பராமன், கம்ப சீதை இத்தகையோர், வால்மீகி ராமன்,

வால்மீகி சீதை இத்தன்மையர்' எனின், இராமனும், சீதையும் இவ்விருவர் உளர் என்பது கருத்தன்று. 'இராமர், சீதை என்பவரது இயல்புகளைக் கம்பர் இப்படி கூறினார், வால்மீகியார் அப்படிக் கூறினார்' என்பதே கருத்து. அதுபோலவே, "எங்கள் கடவுள் இத்தன்மையான்" என்றால், சைவசித்தாந்தம் கடவுள் இயல்பை இப்படிக் கூறுகின்றது; பிற பிற சமயங்கள் பிற பிறவாறு கூறுகின்றன என்பதே கருத்தாம். பிறவிடத்தும் இவ்வாறேயாம்.

நான்காவது குறள்,

4. "ஆக்கி எவையும் அளித்தா சுடனடங்கப்
போக்குமவன் போகாப் புகல்"

என வரும்.

**இதன் பொருள்**

அவன் – அத்தன்மையனாகிய இறைவன்; எவையும் – எல்லாப் பொருள்களையும்; ஆக்கி – படைத்து; அளித்து – காத்து; ஆசுடன் அடங்கப் போக்கும் – மலத்தோடு ஒரு சேரத் துடைப்பான்' (அதனால்) போகாப் புகல் – அவனே உயிர்கட்கு நீங்காத புகலிடம்.

**விளக்கவுரை**

"எவையும்" என்பது இடைநிலை விளக்கு. எல்லாப் பொருள்களுமாவன, 'அருவம், உருவம், அருவுருவம்' என்னும் மூவகை நிலையினவாய்ப் பலதிறப்படுவன. அருவம், கண் முதலிய பொறிகளுள் ஒன்றற்கும் புலனாகாது கருத்திற்கு மட்டும் புலனாவன. அவை பரமாணுக்கள், அவை போல்வனவாகிய சில சிற்றுடம்புகள், ஆகாயம், மனம், காலம் முதலியவை.

உருவம், கண் முதலிய பொறிகட்குப் புலனாவன. அவை நிலம், நீர், மக்களும் அவர்க்குக் கீழ்ப்பட்டனவும் ஆகிய உயிர்க்குரிய உடம்புகள் முதலியவை. அருவுருவம், கண் முதலிய பொறிகட்கு ஒருகாற் புலனாகியும், ஒருகாற் புலனாகாதும் நிற்பவை. அவை நெருப்பு, காற்று முதலியவை. 'நிலாவும் (திங்களும்) அருவுருவப் பொருள்' என்பது பண்டைய கொள்கை. இம்முத்திறப் பொருள்களும் வேறொரு வகையால் நான்காகக் கூறப்படும். அவை, 'தனு, கரணம் புவனம், போகம்' என்பன. தனு - உடம்பு, கரணம் - மனம் முதலிய உட்கருவிகள். புவனம் - நிலைக்களம். போகம் - நுகரப்படும் பொருள். இவற்றை முறையே, 'உடல், உளம், உலகம், உறுபொருள்' எனக் கூறலாம். இவை அனைத்தும் சடப் பொருள்களே (அறிவில்லாத பொருள்களே). சடப் பொருள் அனைத்தும் மாயையின் காரியங்களாம். காரியம் - செயப்படுபொருள். எனவே, இச் செயப்படு பொருள்களை இறைவன் செய்வோனாய் நின்று ஆக்கி, காத்து, அழிப்பன் என்க. எனவே, இறைவன் உயிர்களின் பொருட்டு 'படைத்தல், காத்தல், அழித்தல்' என்னும் முத்தொழில்களைச் செய்வன் என்பது இனிது விளங்கிற்று.

இனி, 'போக்கும்' என வாளா கூறாது, "ஆசுடன் அடங்கப் போக்கும்" என்றதனால், 'உயிர்கள் இயல்பாகவே ஆசு (மாசு - அழுக்கு) உடையனவாய் உள்ளன' என்பதும், 'அவ்ஆசினைத் தேய்த்துக் கழுவுதற் பொருட்டே இறைவன் மேற்குறித்த 'உடல், உளம், உலகம், உறுபொருள்' என்பவற்றைப் படைத்துக் காத்து அழிக்கின்றான்' என்பதும், 'அவ் ஆசு தேய்வுற்று மெலிந்த காலத்தில், இயல்பாய் உள்ள அதனோடு தான் படைத்துக்

காத்த உடல் முதலியவற்றையும் ஒருசேரப் போக்கி உயிரைத் தூயதாக்குவன்' என்பதும் போந்தன. உயிர்கள் இறைவனை அடைதற்குத் தடையாய் நின்றது ஆசேயாதலின், 'அது நீங்கித் தூய்தான உயிர் இறைவனை அடையும்' என்பதும், 'ஆசு' என்றும் துன்பமேயாதலின், அதுநீங்கி, இறைவனை அடைந்த உயிர் இடையறா இன்பத்தில் திளைக்கும் என்பதும் பெறப்படும்.

உயிர்கள் ஆசுற்று நின்றநிலை, 'பெத்தம்' என்றும், அதனின் நீங்கி இறைவனை அடையும் நிலை 'முத்தி' என்றும் சொல்லப்படும். 'பெத்தம், பெந்தம், பந்தம், கட்டு என்பன ஒருபொருட் சொற்கள். 'முத்தி, மோட்சம், வீடு' என்பன ஒரு பொருட் சொற்கள்.

உயிர்களுக்கு இயற்கையாய் உள்ள ஆசே 'ஆணவ மலம்' எனப்படுவது. இதுவே ஏனைய எல்லாக் குற்றங்கட்கும் காரணமாதலின், 'மூல மலம்' என்றும் உயிர் என்று உண்டோ அன்றே இம்மலம் அதற்கு உடனாய் இருத்தலின், 'சகச மலம்' என்றும் சொல்லப்படும். உயிர்கட்கு இதனை நீக்கி இறைவன் தன்னை அடையச் செய்தலே உண்மையாக அருள்புரிதல். அதனால் அவன் உயிர்கட்கு வீடுபேற்றைத் தரும் செயலே 'அருளல்' எனப்படுகின்றது. அதற்கு முன்னர்ச் செய்யும் செயல்களில் எல்லாம் உயிர்கள் இறைவனை அறியமாட்டாது உலகத்தையே அறிந்து நிற்றலால் அவையெல்லாம் 'மறைத்தல்' என்றே சொல்லப்படும். எனவே, இறைவன் உயிர்களுக்குப் பெத்தமாகச் செய்யும் தொழில்கள் மறைத்தலும், முத்தியாகச் செய்யும் தொழில் அருளலும் ஆகின்றன. படைத்தலும், காத்தலும், அழித்தலும் ஆகிய

தொழில்கள் சடப் பொருளாகிய உலகத்தின்மேல் நிகழ்வன. மறைத்தலும் அருளலுமாகிய தொழில்கள் சித்தாகிய (அறிவுடைப் பொருள்களாகிய) உயிர்கள்மேல் நிகழ்வன. இவ்வேறுபாடுகள் இனிது விளங்க இறைவன் செய்யுந்தொழில்கள் பலவற்றையும் விரிவாக எண்ணினால், 'படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்' என ஐந்தாகும். அவ்வேறுபாடு கருதாது தொகுத்துக் கூறும் வழி, மறைத்தல், காத்தல் தொழிலிலும், அருளல், அழித்தல் தொழிலிலும் அடங்க, இறைவன் செய்யும் தொழில் மூன்றாகியே நிற்கும். இக்கருத்துத் தோன்றவே இங்கு அருளலை அழித்தலுள் அடக்கி, "ஆசுடன் அடங்கப் போக்கும்" என்றார். மேல், "ஒப்பின்மையான்" என்றதனால், இவ்வாறு பெத்தம், முத்தி இரண்டிலும் உயிர்கட்கு அவற்றின் நிலையறிந்து அருள் புரிவார் பிறர் இன்மையால், 'அவற்றிற்கு என்றும் நீங்காத புகலிடம் அவனேயன்றிப் பிறர் இல்லை' என்றார். எனவே, 'இறைவனே உயிர்கட்கு என்றும் கதியாகலின், அவனை அறிந்து அடைதலே உயிர்கள் கதியடைதலாகும்' என்பது பெறப்படுகின்றது. அதனால் சைவ சித்தாந்தம் இறைவனை அடைதல் ஒன்றே மேலான கதி, 'பரமுத்தி' என்றும், 'பிற கதிகள் எல்லாம் மேலான கதி அல்ல' என்றும் கூறுகின்றது.

இதனால், 'இறைவன் செய்யும் தொழில் தொகையால் மூன்றும், விரியால் ஐந்துமாம்' என்பதும், 'அவனை அடைதல் ஒன்றே உயிர்கள், அடையத்தக்க பேறுகளுள் முடிந்த பேறு' என்பதும் கூறப்பட்டன.

ஐந்தாவது குறள்.

5. "அருவு முருவு மறிஞர்க் கறிவா
முருவு முடையா னுளன்"

என வரும்.

**இதன் பொருள்**

உடையான் — எப்பொருளையும் உடைய முதல்வனாகிய இறைவன்; அறிஞர்க்கு அறிவாம் உருவும் — மெய்யுணர்வினை உடைய பெரியோர்க்கு அறிவே உருவாய திருமேனியையும், அருவும், உருவும் — ஏனையோர்க்கு அருவத் திருமேனியையும், உருவத் திருமேனியையும்; உளன் — உடையவன்.

**விளக்கவுரை**

பின்னர், "அறிஞர்க்கு" என்றதனால், முன்னர், ஏனையோர்க்கு என்பது பெறப்பட்டது. அருவத் திருமேனியாவது, கட்புலனாகாது, கருத்தினாற் கருதியும், மெய்ந்நூல்களால் தெளிந்தும் உணரப்படுவது. அஃது உயிர்களிடத்து 'சூக்குமை' என்னும் வாக்கு வடிவாய் நின்று அவற்றிற்கு உணர்தல் தன்மையை உண்டாக்கும் நிலை. இந்நிலை 'நாதம், விந்து' என இரண்டாகச் சொல்லப்படும்.

இந் நாத விந்துக்களே தூலம் (பருமை) என வைத்து, 'அவற்றிற்கு முன்னே சூக்குமமாய (நுட்பமாகிய) 'சிவம், சக்தி' என்னும் இருநிலைகள் உள்ளன' என ஆகமங்கள் கூறும். அவையும் அருவத் திருமேனிகளே. அதனால், 'சிவம் சத்தி, நாதம் விந்து' என அருவத் திருமேனிகள் நான்கு என அறிக.

இனி உருவத் திருமேனியாவது கட்புலனாய், முகம், கை, கால் முதலிய உறுப்புக்களுடன் காணப்படும் வடிவம். இவ்வாறு நம்மனோர் கண்ணிற்குக் காணப் படாவிடினும், தவத்தோர் கண்ணிற்குக் காணப்படும். உருவத் திருமேனி, மேற்குறித்த ஐந்தொழில்களுள் அருளல் தவிர, ஏனைய நான்கு தொழில்களையும் செய்யும் நிலையில் கொள்ளப்படுவன. அவையே, 'அயன், மால் உருத்திரன், மகேசுரன்' என்னும் பெயருடையனவாம். ஆகவே, உருவத் திருமேனிகள் நான் காதல் அறிக.

அருவமும், உருவமும் கூறிய அதனால் இடைநிற்கும் அருவுருவமும் கொள்ளப்படும். அருவுருவத் திருமேனியாவது முகம் முதலிய உறுப்புக்களுள் யாதும் இன்றிப் பிழம்பு மாத்திரமாய்க் காணப்படுவது. இஃது ஒளி அல்லது சுடர் வடிவமே. முகம் முதலிய உறுப்புக்கள் இன்மையால் 'அருவம்' எனவும், கட்புலனாய்த் தோன்றலால் 'உருவம்' எனவும் சொல்லப்படும் இருதன்மைகளையும் இஃது உடையதாம். இன்னும் இது சுடர் வடிவேயாகலின், ஏனை மகேசுரன் முதலியனபோல நின்றாங்கு நிற்பதாம். அதனாலும் இஃது அருவுருவமாகின்றது. இத் திருமேனி சிவாலயங்களில் மூலத்தானத்தில் உள்ள இலிங்கத் திருமேனியே. இதுவே, மேற்கூறிய ஐந்தொழில்களுள் அருளலைச் செய்வது. அதனால் அருவுருவத் திருமேனி இஃது ஒன்றேயாம். இத் திருமேனி, 'சதாசிவ மூர்த்தி' எனப் பெயர் பெறும்.

முதலில் உள்ள அருவத் திருமேனிகள் நான்கு, இறுதியில் உள்ள உருவத் திருமேனிகள் நான்கு, இடையில் உள்ள அருவுருவத் திருமேனி ஒன்று ஆக ஒன்பதும்,

'நவந்தருபேதம்' எனப்படும். இதனை,

*"சிவம்சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன்*
*உவந்தருள் உருத்தி ரன்றான் மாலயன் ஒன்றின் ஒன்றாய்*
*பவந்தரும்; அருவம் நால்இங் குருவம்நால் உபயம் ஒன்றாய்*
*நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்"*

என்னும் சிவஞான சித்தியால் அறிக.

அருவமாய் நிற்கின்ற யாதொரு பொருளும் உருவமாய் வடிவுபெறும் பொழுது இடையே அருவுருமாய் நின்றே பின் உருவமாகும். இது வித்தின்கண் அருவமாய் இருந்தமரம், பின் உருவமாகுங்கால், இடையே 'முளை' என்னும்அருவுருவ நிலையில் நின்று பின்பே உருவமாதலால் அறியப்படும். அதனால், 'சிவம், சத்தி, நாதம், விந்து' என்னும் அருவ நிலையில் உள்ள இறைவன், பின்பு, 'மகேசுரன், உருத்திரன், மால், அயன், என உருவ நிலையில் வருங்கால், இடையே 'சதாசிவன்' என்னும் அருவுருவ நிலையில் நின்றே வருபவனாவான். ஆகவே, 'அருவம், உருவம்' என்பவற்றோடு 'அருவுருவம்' என்பதொன்றும் இடையே உளதாதல் அறிந்து கொள்க. 'அருவம், அருவுருவம், உருவம்' என்னும் இவையே இறைவனது 'மூவகைத் திருமேனிகள்' எனப்படுவனவாம்.

'இவையெல்லாம் இறைவன் மெய்யுணர்வு பெறாதார் பொருட்டுக்கொள்ளும் திருமேனிகள்' எனவும், 'மெய்யுணர்வு பெற்றார்க்கு அவன் அறிவே வடிவாய் விளங்குகின்றான்' எனவும் கூறிய அதனால், 'இம்மூவகைத் திருமேனிகளும் பிறர் பொருட்டுக் கொள்ளும் பொது வடிவங்கள்' என்பதும், 'அறிவே வடிவாய் நிற்றலே அவனது உண்மை நிலை' என்பதும் விளங்கும்.

விளங்கவே, 'இறைவனது நிலை இங்ஙனம் பொது, உண்மை என இரண்டாகி நிற்கும்' என்பது அறியப்படும். பொதுநிலை, 'தடத்தம்' என்றும், உண்மை நிலை 'சொரூபம்' என்றும் சொல்லப்படுதல் மேலே கூறப்பட்டது. அவ்வாற்றால், இறைவன் உண்மை நிலையில் நிற்கும் பொழுது 'சொரூப சிவன்' என்றும், தடத்த நிலையில் நிற்கும்பொழுது, 'தடத்த சிவன்' என்றும் சொல்லப்படுவான். 'பரசிவன், பரமசிவன், சுத்த சிவன்' என்பன எல்லாம் சொரூப சிவனையே குறிக்கும். இவற்றுள் இறைவனது உண்மை நிலை மெய்யுணர்ந்தார்க்கே அறிதல் கூடுவதாகலானும், அதனை அறிந்தபின் அவர் அதன் இன்பத்தையே நுகர்ந்து நிற்றலல்லது பிறிதொன்றனை விரும்பாராகலானும், 'அறிஞர்க்கு அறிவாம் உருவம் உளன்' என்றும், ஏனையோர் அதனை உணரமாட்டாமையின், அவர் உணருமாற்றால் மூவகைத் திருமேனிகளை இறைவன் கொள்கின்றான் என்பது பற்றி, 'ஏனையோர்க்கு அவைகளை உளன்' என்றும் கூறினார். இதனுள் மலவாதனை மட்டுமே உடையவரும் மலம் உடையவர் போலச் சொல்லப்பட்டனர் என்க. 'உளன்' என்பது, 'உடையன்' என்னும் பொருட்டாய் நின்றது. 'அறிஞர்க்கு அறிவாம் உருவம் உடையான்' எனப் பாடம் ஓதி, அதனை உடம்பொடு புணர்த்தலாக்கியும் உரைப்ப.

இதனால், மேற்கூறியவாறு ஐந்தொழில் செய்யும் இறைவன், அவற்றின் பொருட்டுக் கொள்ளும் வடிவங்களும் வடிவம் அற்ற அவனது உண்மை இயல்பும் கூறப்பட்டன.

ஆறாவது குறள்,

6. "பல்லா ருயிருணரும் பான்மையென மேலொருவன்
இல்லாதான் எங்கள் இறை"

என வரும்.

### இதன் பொருள்

பல் ஆர் உயிர் உணரும் பான்மை என — பலவாய் நிறைந்த உயிர்கள், ஒன்றனைத் தாமே அறியமாட்டாது, தம்மை அறிவித்தற்குத் தமக்கு மேலோன் ஒருவனை உடையனவாய் இருத்தல்போல; எங்கள் இறை — எங்கள் கடவுள்; மேல் ஒருவன் இல்லாதான் — தன்னை அறிவித்தற்குத் தனக்கு மேலானவனாக ஒருவனை உடையனல்லன்.

### விளக்கவுரை

எனவே, தானே எல்லாவற்றையும், அறிதலும் உயிர்களுக்கு அறிவித்தலும் செய்வன்' என்பதாம். "உணரும் பான்மை" என்பது, 'உணர்தற்கு ஒருவனை உடையனாம் பான்மை' என அதன் காரணத்தின்மேல் நின்றது. 'ஒருவனை' என்னும் இரண்டாம் உருபு, தொகுக்கும்வழித் தொகுத்தலாயிற்று.

"மேல் ஒருவன்" என்றது பண்புத்தொகை. "இல்லா தான்" என்றதில் இன்மை, உடைமைக்கு மறுதலையாயது. இதனானே முதற் குறளில் "நிகரில் இறை" என்றதனால் 'தன்னோடு ஒப்பதொருபொருள் இல்லை' என்பதும் பெறப்பட்டது. அதனால், 'ஒப்பாரும், மிக்காரும் இல்லாத தனிப்பெரும் தலைவன் இறைவன்' என்றதாயிற்று.

தானே அறிந்தும், அறிவித்தும் நிற்பதே சுதந்திர அறிவாம். அவ்வாறில்லாது பிறர் அறிவிக்க அறிவது சுதந்திரம் இல்லாத அறிவாகும். அவற்றுள், 'இறைவன் சுதந்திர அறிவுடையவன்' என்பது இதனால் கூறப்பட்டது. அதனை விளக்குதற்கு உயிர்களது அறிவு சுதந்திரம் இல்லாதது என்பதும் ஈண்டே கூறப்பட்டது.

ஏழாவது குறள்,

7. "ஆனா அறிவாய் அகலான் அடியவர்க்கு
வானாடர் காணாத மன்"

என வரும்.

**இதன் பொருள்**

வான் நாடர் காணாத மன் — தேவரால் அறியப்படாத தலைவனாகிய கடவுள்; அடியவர்க்கு — தனக்குத் தொண்டராயினார்க்கு; ஆனா அறிவாய் அகலான் — அவர் அறிவினின்றும் நீங்காத அறிவாய் அவருடனே இருப்பான்.

**விளக்கவுரை**

ஆனாமை - நீங்காமை, நீங்கற்பொருள் வருவிக்கப்பட்டது. அகலுதல், செய்மையனாதல். 'அறிவுக்கறிவாய் அகலான்' எனவே, 'அவரால் எஞ்ஞான்றும் அறியப்பட்டு நிற்பான்' என்றதாயிற்று. நிலவுலகில் உள்ள பிறப்புக்களில் மக்கட்பிறப்பை எய்தினாரே உயர்ந்தவர் ஆதலாலும், அவரால் உயர்ந்தவராக வழிபடப்படுவோர் தேவர் ஆதலாலும், அத்தேவரால் அறியப்படாமையே எடுத்துக் கூறினார். கூறவே, மக்கள் முதலிய பிறப்பில் நிற்கும் பிற உயிர்களால் அறியப்படாமை தானே அமைந்தது. இனி 'அடியார்'

என்பவரும் மேற்கூறிய தேவரினும், மக்களினும் உள்ளாரன்றி வேறல்லாராகவும், 'அவர்க்கு அறிவுக் கறிவாய் அகலான்' என்றமையால், 'இறைவன் அறியப் படுதலும், படாமையும் பிறப்பானாதல், பிறவற்றானாதல் ஆவனவல்ல; தொண்டராய் நிற்றலும், நில்லாமையுமாகிய தகுதி, தகுதி இன்மைகளான் ஆவனவே' என்பது பெறப்பட்டது.

*"யாவ ராயினும் அன்ப ரன்றி*
*அறியொ ணாமலர்ச் சோதியான்"*

(திருவாசகம் - சென்னிப்பத்து - 1)

*"கனவிலும் தேவர்க்கு அரியாய் போற்றி*
*நனவிலும் நாயேற் கருளினை போற்றி"*

(திருவாசகம் - போற்றி - 143, 144)

*"காண்டற் கரிய கடவுள் கண்டாய்;*
*கருதுவார்க்கு ஆற்ற எளியான் கண்டாய்"*

(திருமுறை - 6, 23, 1)

என்றாற்போலும் அருட்டிருமொழிகள் யாவும் இக்கருத்தையே விளக்குவனவாதல் அறிக.

இதனால், 'இறைவன், அகர உயிர்போல் அறிவாகி எங்கும் நிறைந்தும், மூவகைத் திருமேனி கொண்டும், அனைத்துயிர்க்கும் அறிவித்தும் நிற்பினும் அடியவர் உள்ளத்தில் விளங்கியும், பிறவிடத்தில் விளங்காதும் நிற்பன்' என்பது கூறப்பட்டது. இதனானே, 'அவனை அறிதற்கு வழி, அவனுக்குத் தொண்டு பூண்டு நிற்றலே' என்பதும் கூறப்பட்டதாம். தொண்டு பூண்டு நிற்றலாவது, 'மனம், மொழி, மெய்' என்னும் முக்கருவிகளாலும், அறிவு, இச்சை, செயல்களாலும் தம் வழி நில்லாது அவன்வழி நிற்றலாம்.

எட்டாவது குறள்.

8. "எங்கும் எவையும் எரியுறுநீர் போல்ஏகம்
தங்குமவன் றானே தனி"

என வரும்.

### இதன் பொருள்

"அவன் — அடியாரிடத்து விளங்கியும் ஏனையோரிடத்து விளங்காதும் நிற்கின்ற அவ்விறைவன்; எங்கும் — எல்லா இடங்களிலும்; எவையும் — அவ்விடங்களில் உள்ள அறிவுடைப் பொருள், அறிவில் பொருள் என்னும் எல்லாப் பொருள்களிலும்; நீர் உறு எரிபோல் — காய்ச்சப்பட்ட நீரில் பொருந்திய வெப்பம்போல்; ஏகம் தங்கும் — ஒன்றாய், வேறற நிற்பான். தான் தனியே — ஆயினும், அவன் தான் அவற்றுள் ஒன்றாகாது, வேறாகியே நிற்பான்.

### விளக்கவுரை

எனவே, 'அகர உயிர்போல் எங்கும் எப்பொருளிலும் கலப்பினால் ஒன்றாய் நிற்கின்ற இறைவன், அப்பொழுதே நீரில் கலந்து நிற்கின்ற வெப்பம்போலப் பொருள் தன்மையால் வேறாயும் நிற்பானாகலின், அப்பொருள்களின் தன்மையைத் தான் எய்துவானல்லன்' என்றவாறாயிற்று.

இறைவன் உலகத்தொடு பொருந்தி நிற்கும் தொடர்பு இவ்வகையது என்பதைக் குறிப்பதே. 'அத்துவிதம்' என்னும் சொல்' என்பதும், 'அச்சொல், ஒன்றாதல், வேறாதல் உடனாதல் என்னும் மூன்றற்கும் பொதுவாய் நிற்கும் நிலையையே பொருளாக உடையது'

என்பதும் 'கடவுள் அத்துவிதப்பொருள்' என்று உபநிடதங்களில் கூறப்படுதலால், இறைவன் உலகத்தோடு ஒருவகையில் ஒன்றாயும், மற்றொரு வகையில் வேறாயும், பிறிதொரு வகையில் உடனாயும் நிற்றல் அறியப்படும் என்பதும், ஒன்றாய் நிற்றல் கலப்பினாலும், வேறாய் நிற்றல் பொருள் தன்மையாலும், உடனாய் நிற்றல் உயிர்க்குயிராதல் தன்மையாலுமாம்' என்பதும் மெய்கண்ட தேவரால் சிவஞானபோதத்துள் உணர்த்தப்பட்டன. அவற்றுள் கலப்பினால் ஒன்றாதற்கு, 'உடலில் நிற்கும் உயிர்போல்' என்னும் உவமையையும், பொருள் தன்மையால் வேறாதற்கு, 'கண்ணொளியோடு கலந்து நிற்கும் ஞாயிற்றின் ஒளிபோல்' என்னும் உவமையையும், உயிர்க்குயிராதல் தன்மையால் உடனாதற்கு கண்ணொளி யோடு கலந்து நிற்கும் ஆன்மபோதம் போல் என்ற உவமையையும் இவ்வாசிரியர் தமது சிவப்பிரகாச நூலுள் 'புறச்சமயத் தவர்க்கொளியாய்' என்னும் ஒரு செய்யுளிலே தொகுத்துக் காட்டினார். இந்நூலுள் 'அகர உயிர்போல்' என்ற உவமையை ஒன்றாதற்கும், 'நீருறு எரிபோல்' என்ற உவமையை வேறாதற்கும், இங்குக் காட்டினார். இதனானே, "நீருறு தீயே" என்ற திருவாசகத்திற்கும் இதுவே கருத்தாதல் அறிந்து கொள்ளப்படும். உடனாதற்கு, தாடலைபோல் என்ற உவமையைப் பின்னர் கூறுவார்.

இறைவன் கலப்பினால் ஒன்றாதலாவது, உயிர் உடலில் நின்று அதனை நிலைபெறுவித்தல் போலச் சடமும் சித்துமாய பொருள்களில் நின்று அவை அவ்வத்தன்மை உடையனவாக நிலைபெறுவித்தலாம். வேறாதலாவது அவை அவ்வாற்றால் இயக்கப்படுவனவாகத் தான் இயக்குவோனாகியே நிற்றலாம். அதனால் அவற்றின்

தன்மை தனக்கு எய்தாமையும் பெறப்படும். உயிர்க் குயிராதல் தன்மையால் உடனாதலாவது, உயிர் ஒன்றனை அறியுமிடத்துத் தானும் அதனோடு உடன் சென்று அறிதலாம். இஃது அறிவுடைப் பொருட்கே சிறந்து நிற்றல்பற்றி இதனை உயிரிடத்து மட்டுமே வைத்துக் கூறுவர். எனினும், ஏனைச் சடப் பொருள்களின் தொழிற் பாட்டிலும் அவன் அவ்வாறு இயைந்து நிற்றல் வேண்டும் என்க.

உயிரால் உடல் நிலைபெறுவதாயினும், உயிர் வேறாக அறியப்படாது உடலேயாய் எண்ண நிற்றலாலும், அகர உயிரால் ஏனை எழுத்துக்கள் நிலைபெறுவவாயினும் அகரம் வேறாக அறியப்படாது ஏனை எழுத்துக்களாகவே எண்ண நிற்றலாலும் அவையிரண்டும், இறைவன் கலப்பினால் உலகமேயாய் நிற்றற்கு உவமையாகக் கொள்ளப்பட்டன. ஞாயிற்றின் ஒளிகண்ணொளியில் ஒன்றாய்க் கலந்து நிற்பினும், கண்ணொளி பொருளைக் காண்பதாக, கதிரொளி கண்ணிற்குப் பொருளைக் காட்டுவதாய் நிற்கும் தன்மையால் வேறுபட்டு நிற்றலாலும், நீரிற் பொருந்திய வெம்மை அதனோடு ஒன்றாய்க் கலந்து நிற்பினும், சுடுந்தன்மையால் தனது தன்மை அதனின் வேறாய் அறியப்படுதலாலும் அவை இறைவன் உலகுயிர்களோடு ஒன்றாய்க்கலந்து நிற்பினும், தன்மையால் வேறாய் நிற்றற்கு உவமையாகக் கொள்ளப்பட்டன. கதிரொளி கண்ணொளியிற் கலந்து நின்றதாயினும், பொருள்களைக் காண்கின்ற காட்சி வேறுபாடுகள் கண்ணுக்கன்றிக் கதிரொளிக்கு இல்லா மையும், வெப்பம் நீரில் பொருந்தியதாயினும் 'நாழி' என்றும், 'நானாழி' என்றும் இவ்வாறு அளக்கப்படுதலும்,

கழுவப்படுகின்ற பொருளின் மாசுகளை உடைத்தாதலும் போலும் தன்மைகள் வெம்மைக்கு இல்லாமையும் கருதற்பாலன.

இவ்வாறு ஒன்றாய் நிற்றல், வேறாய் நிற்றல், உடனாய் நிற்றல் என்னும் மூன்று தன்மையும் ஒருங்கே தோன்றநிற்கும் தன்மையே அத்துவிதம் என்க. இந்நிலையை மெய்கண்ட தேவருக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே திருஞானசம்பந்தர் தமது திருவீழிமிழலைத் தேவாரத்துள்,

*"ஈறாய்முதல் ஒன்றாய்இரு பெண்ணாண்குணம் மூன்றாய்*
*மாறாமறை நான்காய்வரு பூதம்மவை ஐந்தாய்*
*ஆறார்சுவை ஏழோசையொ டெட்டுத்திசை தானாய்*
*வேறாய் உடனானான்இடம் வீழிம்மிழலையே"*

(திருமுறை 1, 11, 2)

என்று அருளிச் செய்தார்.

ஒன்றாதல் முதலிய மூன்றனையும் பிற சமயத்தார் பிற உவமைகளால் பிறவாறு கூறுவர். அவையாவன: 'பொன்னும் பணியும்போல இறைவன் உலகத்தோடு ஒன்றாயிருப்பன்' என்று ஒருசாரார் கூறுவர். இவர் 'அத்துவிதம்' என்பதற்கு, 'ஒன்று' என்பதே பொருள் என்பர். மற்றை இரண்டனையும் இவர் கொள்ளார். இவர் 'ஏகான்மவா திகள்' எனப்படுவர். 'இறைவனும், உலகமும் வேறல்ல' என்பதனால் இவர் கூற்று, 'அபேத வாதம்' எனப்படும். 'இறைவனும், உலகமும் பொன்னும் பணியும்போல்வன' என்றால், இறைவன் தன்மையே உலகிற்கும் உளதாதல் வேண்டும். ஏனெனில், பொன்னின் தன்மைதானே பணிகளிற் காணப்படுதலால். அல்லது உலகின் தன்மையையே இறைவனும் உடையனாதல்

வேண்டும். இருபொருளும் பெரிதும் வேறுபட்ட உயர்வு தாழ்வுகளை உடையன என்பது நன்கறியப்பட்டது. அதனால் ஏகான்மவாதிகளது அபேதவாதம் பொருந்தாத தாகின்றது.

அபேதவாதம் பொருந்தாமை பற்றி, இருளும் ஒளியும் போல இறைவனும் உலகமும் வேறு வேறேயாம் என்பர் மற்றொருசாரார். இவ்வாறு இயைபில்லாமை தோன்றக் கூறுதலால் இவர் கூற்றுப் 'பேதவாதம்' எனப்படுகின்றது. இவர் 'அத்துவிதம்' என்பதற்கு 'இரண்டு' என்றே பொருள் கொள்வர். ஏனை இருவகைகளைக் கொள்ளார். அதனால், இவர் 'துவித வாதிகள்' எனப்படுகின்றனர். இறைவனும் உலகமும் ஒளியும், இருளும்போல ஆகிவிடின், இரண்டிற்கும் இயைபின்றி ஒழிய, இறைவனால் உலகிற்கு யாதொரு பயனும் இல்லையாய்விடும். அதனால் பேதவாதமும் பொருத்தம் அற்றதாகின்றது.

இவை இரண்டும் பொருந்தாதொழிதலின், 'சொல்லும், பொருளும்போல இறைவனும் உலகமும் ஒன்றும் வேறுமாவர்' என்பர் பிறிதொரு சாரார். இவர், 'அத்துவிதம்' என்பதற்கு இஃதொன்றனையே பொருளாகக் கொள்வர். ஏனை இரண்டையும் கொள்ளார். இதனால் இவர், 'பேதாபேதவாதிகள்' எனப்படுகின்றனர். சொல்வேறு, பொருள்வேறு ஆதலின் அவை ஒன்றாமாறு இல்லை. அதனால் அவ்வுவமை பொருளற்றதாகலின், அதுகொண்டு நிறுவப்படும் பொருளும் நிலைபெறாதாம். ஆகவே, பேதாபேதவாதமும் பொருந்துவது அன்றாம். எனவே 'இறைவன் அத்துவிதமாய் உள்ளான்' என்பதற்கு

மேற்கூறப்பட்ட பொருளே பொருந்துவதாதல் அறிந்து கொள்க.

இதனால், இறைவன் உலகத்தொடு ஒன்றாயினும், வேறாய் நிற்றல் கூறிய முகத்தால், அவன் எல்லாப் பொருளிலும் நிறைந்துநின்றே, அவற்றில் தோய்வின்றித் தூயனாய் நிற்றல் கூறப்பட்டது.

ஒன்பதாவது குறள்,

9."நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன்"

என வரும்.

**இதன் பொருள்**

நண்ணினர்க்கு நல்லன் - தன்னை அடைந்தார்க்கு இன்பம் செய்தலுடையவன்; நண்ணார்க்கு நலம் இலன் - தன்னை அடையாதார்க்கு இன்பம் செய்தல் இலனாதல் குற்றம் ஆக்ாமையின்; சலம் இலன் - அவன் கோட்டம் இலனேயாம் - பேர் சங்கரன் - ஆதலின், அவனது பெயர் சங்கரன் ஆதற்கு இழுக்கில்லை.

**விளக்கவுரை**

சம் + கரன் = சங்கரன். சம் - இன்பம்; கரன் - செய்பவன்.

*"இன்பம் செய்தலிற் சங்கரன், எம்பிரான்*
*இன்பம் ஆக்கலின் சம்பு, இடும்பைநோய்*
*என்ப தோட்டும் இயல்பின் உருத்திரன்"*

(பரசிராமேச்சரம் - 44)

என்னும் காஞ்சிப் புராணச் செய்யுளைக் காண்க.

'இறைவன் இன்பே உருவானவன்' என்பதனை, 'அவ்வாறாயின், அவ்வின்பம் நம்மனோர்க்குக் கிடையாதது என்னை' என்று எழும் ஐயத்தினை, 'அஃது அவனைச் சார்ந்தார்' 'அடையத்தக்கதேயன்றிச் சாராதார்' அடையத் தக்கது அன்று' என விடுத்தும், 'அங்ஙனமாயின், அவன் தனது இன்பத்தினை ஒருசாரார்க்கு வழங்குதலும், மற்றொருசாரார்க்கு வழங்காமையும் ஆகிய கோட்டமுடையன் போலும்' எனப் பின்னும் எழும் ஐயத்தினை, 'யாதொரு பொருளின்பயனும் அதனைச் சார்ந்தார் பெறுதலும், சாராதார் பெறாமையும் இயல்பாதலின், அங்ஙனமே இறைவனது வரம்பில் இன்பமும், அவனைச் சார்ந்தாரால் பெறப்படுதலும், சாராதாரால் பெறப்படாமையும் இயல்பேயாகலின், அதுபற்றி அவன் கோட்டம் உடையனாதல் எவ்வாறு' என விடுத்தும் வலியுறுத்து ஓதுவார், சொற்பல்காமைப் பொருட்டு இவ்வாறு ஐயமறுத்தலாக ஓதினார். 'சங்கரனே' என்னும் தேற்றேகாரம் தொகுத்தல்.

மழையும், பனியும் உள்வழி அவற்றின் நீங்கித் தீயை அணுகினார் குளிர் நடுக்கம் நிங்கி இன்பம் எய்துதலும், அணுகாதார் அவ்வின்பத்தை எய்தாமையும், வெயில் உள்வழி அதனின் நிங்கி நிழலையும், நீரையும் அடைந்தார் வெப்பம் நீங்கி இன்புறுதலும், அடையாதார் அவ்வின்பம் உறாமையும் அவரவர் செயலானே ஆவனவல்லது, 'தீ, நிழல், நீர்' என்பவற்றது கோட்டங் காரணமாக ஆவன அல்ல. அதுபோலப் பாசத்தின் நீங்கி இறைவனைச் சார்ந்தார் பிறவித் துன்பம் நீங்கி வரம்பில் இன்பத்தை எய்துதலும், சாராதார் அவ்வின்பத்தினை எய்தாமையும் அவரவர் செயலானே ஆவனவன்றி,

இறைவனது கோட்டங் காரணமாக ஆவன அல்ல என்பார், 'நண்ணினர்க்கு நல்லன்; நண்ணார்க்கு நலமிலன்; (ஆதலின்) சலம் இலன்' என்றும், 'அவ்வாறாகவே அவனை, 'சங்கரன்' என்று உண்மை நூல்கள் கூறுதலை ஏலாது, 'கோட்டம் உடையன்' எனக் கூறிப் பிணங்குதல் அறியாமைப் பாலதாம்' என்பார், "பேர் சங்கரனே" என்றும் கூறினார். இத்தன்மையினை இனிது விளக்க எழுந்ததே பின்வரும் திருப்பாடற்பகுதி;

*பொருதிடங் கொண்டு புண்ணியம் புரக்கும்*
*மருதிடங் கொண்ட மருத வாண,*
*நின்னது குற்றம் உளதோ! நின்னினைந்*
*தெண்ணருங் கோடி இடர்ப்பகை களைந்து*
*கண்ணுறு சீற்றத்துக் காலனை வதையா*
*இறப்பையும் பிறப்பையும் இகந்து சிறப்பொடு*
*தேவர் ஆவின் கன்றெனத் திரியாப்*
*பாவிகள் தமதே பாவம்; யாதெனின்,*
*முறியாப் புழுக்கல் முப்பழங் கலந்த*
*அறுசுவை அடிசில் அட்டினி திருப்பப்*
*புசியா தொருவன் பசியால் வருந்துதல்*
*அயினியின் குற்ற மன்று; வெயிலின்வைத்*
*தாற்றிய தண்ணீர் நாற்றமிட் டிருப்ப*
*மடாஅ ஒருவன் விடாஅ வேட்கை*
*தெண்ணீர்க் குற்ற மன்று; கண்ணகன்று*
*தேன்துளி சிதறிப் பூந்துணர் துறுமி*
*வாலுகங் கிடந்த சோலை கிடப்ப*
*வெள்ளிடை வெயிலிற் புள்ளிவெயர் பொடிப்ப*
*அடிபெயர்த் திடுவா னொருவன்*
*நெடிது வருந்துதல் நிழற்றீங் கன்றே.*

(திருமுறை - 11,திருவிடைமருதூர் மும்மணிக் கோவை - 16)

*"மனிதர்காள் இங்கே வம்மொன்று சொல்லுகேன்*
*கனிதந் தாற்கனி உண்ணவும் வல்லிரே*
*புனிதன் பொற்கழல் ஈசன் எனுங்கனி*
*இனிது சாலவும் ஏசற் றவர்கட்கே"*

*"கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்*
*பனிம லர்க்குழற் பாவைநல் லாரினும்*
*தனிமுடிகவித் தாளும் அரசினும்*
*இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே"*
(திருமுறை 5)

என்றற்றொடக்கத்தனவாக, இறைவன் இணையிலாப் பேரின்ப வடிவினனாதலை, அறிவுறுத்து வனவாய் அளவின்றிப் பரந்து வரும் திருமொழிகள் பலவும் அவனைச் சார்தற்கண் மனவெழுச்சி சேறற்கு அருளிச் செய்தனவேயாதல் அறிக.

யாண்டும் ஒரு பெற்றியனேயாகின்ற இறைவன் திருமுன் உயிர்கள் நன்மையும், தீமையும் உறுதல் அவற்றது இயல்பான் ஆவனவே; அதனை அறியாது. 'இறைவனைக் கோட்டம் உடையன்' எனக் கூறிப் பிணங்குதல் ஆகாது என்பதனையே திருவள்ளுவர்,

*"என்பி லதனை வெயில்போலக் காயுமே*
*அன்பி லதனை அறம்"*
(குறள் - 77)

என்பதனாற் குறித்தார்.

இதனால் உயிர்கள் எல்லாவற்றோடும் உடனாய் நின்று அவற்றை நடத்துகின்ற இறைவன், அவ்வவ்வுயிர்களின் நிலைகட்கு ஏற்பப் பயன் தருதல் கூறப்பட்டது.

பத்தாவது குறள்,

10. "உன்னும்உள தையம்இலதுணர்வாய் ஓவாது
மன்னுபவந் தீர்க்கும் மருந்து"

என வரும்.

**இதன் பொருள்**

ஓவாது மன்னு பவம் தீர்க்கும் மருந்து - ஒழியாது நிலை பெற்று நிற்கின்ற பிறவியாகிய நோயைத் தீர்க்கின்ற மருந்து ஒன்று; உணர்வாய் உளது - நும் அறிவிற் கறிவாயே நும்முடன் இருக்கின்றது; ஐயம் இலது - மயக்கத்தால் அதன் உண்மையில் ஐயம் கொள்ளவேண்டுவதில்லை; உன்னும் - அதனை அகத்தே நோக்கி உணர முயலுங்கள்.

**விளக்கவுரை**

'முயன்றால் இனிது வெளிப்படும்' என்பது குறிப்பெச்சம். பிறப்பு உயிரைப்பற்றிய காலம் இது என அறியப்படாது, அன்று தொட்டு அதனை விடாதே பற்றி வருதலின், "ஓவாது மன்னு பவம்" என்றும், பிறவியால் வருவது துன்பமேயன்றி இன்பமன்று ஆதலின் அதனை 'நோய்' என்றும், அறிவிலார்க்குப் பிறவி நோய் என்பது தோன்றாவிடினும், அறிவுடையார்க்கு அது நன்கு தோன்றுதலால் அவர் அந்நோயைத் தீர்க்கும் மருந்தை நாடி நிற்றலானும், அம்மருந்து இறைவனையன்றி வேறின்மையானும் இறைவனை, "பவம் தீர்க்கும் மருந்து" என்றும், அம்மருந்துதான் நோயுடையார்க்கு வேறாய் இல்லாது அவரோடே ஒன்றாய் இருத்தலின், "உணர்வாய் உளது" என்றும், அவ்வாறு உள்ளதாயினும் அவ்வறிவிலே உள்ள மயக்கம் காரணமாக அது புலப்பட்டிலது ஆதலின்,

அம்மயக்கத்தை நீக்க வேண்டுதல் பற்றி, "ஐயம் இலது" என்றும், மயக்கத்தை விடுத்து அதனொடு ஒற்றுமைப்பட்டு உணர்தலே அதனைப் பெறும் முறையாதல் பற்றி, "உன்னும்" என்றும் கூறினார். "பவம் தீர்க்கும் மருந்து" என்றது ஏகதேச உருவகம்.

பிறப்பு, தொடங்கிய காலம் அறியப்படாது தொடர்ந்து துன்புறுத்தி வருதலையே மாணிக்கவாசகர் "புல்லாகிப் பூடாய்" எனத் தொடங்கி, "செல்லாஅ நின்றஇத் தாபர சங்கமத்துள், எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்" (திருவாசகம், சிவபுராணம் - 26, 31) என்றார். பிறவிப் பிணிக்கு மருந்து இறைவன் ஆதலையே திருநாவுக்கரசர்,

*"மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித்*
*தீராநோய் தீர்த்தருள வல்லான் றன்னை"*

(திருமுறை - 6, 54, 8)

என்று அருளிச்செய்தார்.

இறைவன் தன்னை உணரப் புகுவார்க்கு வேறாய் இல்லாமல் அவர்தம் உணர்வினுள்ளே இருந்து அவர் உணர்வனவற்றை யெல்லாம் அறிதலையும், அத்தன்மையை அறிந்து உள்ளம் உருகி அன்பினால் உணரும் வழியே அவன் வெளிப்படுதலையும், அங்ஙனம் உணர்தற்கு இடையே ஐயம் திரிபுகள் உளவாயின் அவன் மறைந்து போதலையும் நாவுக்கரசர் பின்வருமாறு அருளிச்செய்தார்.

*"உள்குவார் உள்ளத் தானை,*
*உணர்வெனும் பெருமை யானை,*
*உள்கினேன் நானும் காண்பான்*
*உருகினேன் ஊறி ஊறி*
*எள்கினேன் எந்தை பெம்மான்*
*இருதலை மின்னு கின்ற*
*கொள்ளிமேல் எறும்பென் னுள்ளம்*
*எங்ஙனங் கூடு மாறே.*

(திருமுறை - 4, 75, 6)

'ஐய உணர்வு உடையார்க்கு இறைவனை அடைதல் இயலா.து' என்பதனைத் திருவள்ளுவரும்,

*"ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்*
*வானம் நணிய துடைத்து"*

(குறள் - 353)

என்றார்.

இதனால் பதிப்பொருளை உணருமாறும், உணர்ந்தார் எய்தும் பயனும் கூறப்பட்டன.

இரண்டாம் அதிகாரம்

## உயிரவை நிலை

அஃதாவது, உயிர்த்தொகுதியது இயல்பு. 'உயிர்' என்று ஒழியாது, 'தொகுதி' என்றதனால், 'உயிர்கள்தாம் எண்ணில' என்பது போந்தது. இனி, 'அவை' என்பதனை 'தொகுதி' என்னாது, பகுதிப்பொருள் விகுதியாக்கின், 'உயிரவையிற்றின்' என்னும் சாரியை தொகுத்தலா யிற்றாம். உயிர்களைப் பலவாகக் கூறிய இதனானும், மேலையதிகாரத்துக் கூறப்பட்ட, பதி 'ஒன்றே' என்பது போதரும். பதிநிலையை அடுத்துப் பசுநிலை கூறுதலே முறையாதல் அறிக.

இவ்வதிகாரத்தின் முதற்குறள்,

11. "பிறந்தநாள் மேலும் பிறக்கும்நாள்போலும்
துறந்தோர் துறப்போர் தொகை"

என வரும்.

### இதன் பொருள்

துறந்தோர் துறப்போர் தொகை – பற்றற்று வீடு பெற்றவர். இனி அவ்வாற்றான் வீடுபெற இருப்பவர் இவரது எண்ணிக்கை முறையே; பிறந்தநாள் மேலும் பிறக்கும் நாள் போலும் – அவர் இதுகாறும் பிறந்து இறந்து உழன்ற நாட்கள், இனி அவ்வாறு உழலவேண்டிய நாட்கள் இவற்றது எண்ணிக்கையோடு ஒக்கும்.

### விளக்கவுரை

இஃது, "இறந்தாரை எண்ணிக்கொண்டற்று, (குறள்-22) வன்பாற்கண் வற்றல் மரந்தளிர்த் தற்று" (குறள்-78) என்றாற்போல, கூடாமை பற்றிவந்த உவமை.

எனவே, 'இருதிறத்தாரும் அளவிலர்' என்றதாயிற்று. உவமையும், பொருளுமாய் வந்த இருதொடர்களும் உம்மைத் தொகைகள். அவை நிரல் நிரை வகையால் தம்முள் இயைந்து நின்றன. பிறந்த நாள், துறப்போர்க்கும் உரியவேனும் இனிப் பிறக்கும் நாள்களையே அவருக்கு உரித்தாக ஓதினார். 'அவரது இழிவு காரணமாக அவர் இரங்கத்தக்கவர்' என்பதும், 'முன்னர்க் கூறப்பட்ட வர்க்குப்போலத் தாம் முன்னர்ப் பிறந்த நாள்களால் பெரும் பயன் பெற்றிலர்' என்பதும் உணர்த்தற்கு.

செய்யுளாகலின், 'அவர்' என்னும் சுட்டுப்பெயர் முதற்கண் எஞ்சிநின்றது. "துறந்தோர்" என்றது, 'வீடு பெற்றோர்' எனத் தன் காரியமும் உடன் தோன்ற நின்றது. "தொகை" என்பது உவமைக்கண்ணும் சென்று இயையும். 'உயிர்கள்' எண்ணில எனக் கூறியொழியாது, இவ்வாறு வகுத்தும், உவமைபுணர்த்தும் ஓதினார்; 'இருதிறத்தாரும் எண்ணிலர்' என்பது இனிது விளங்குதற் பொருட்டும், அவரிடையுள்ள உயர்வு இழிவுகள் தோன்றுதற் பொருட்டும். "துறந்தோர், துறப்போர்" என உயர்திணையாக வைத்து ஓதியது, 'உயிர்' எனப் பொதுப்படக் கூறாது, வகுத்தோதுகின்றாராதலாலும், அதற்கேற்ப வீடு பெறுதற்கு வாயிலாகும் பிறப்புப் பெரும்பான்மையும் மக்கட் பிறப்பேயாதலாலும் என்க. 'இவ்வாறு ஓதினாரேனும், அனைத்துயிர்களையும் தொகுத்தோதுதல் கருத்து' என்பது பெறப்பட்டது.

இதனால், உயிர்கள் எண்ணிலவாதல் கூறப்பட்டது. 'பல்லுயிர்' எனவும், 'மன்னுயிர்' எனவும் வரும் வழக்குக்கள் இதனை வலியுறுத்தும் என்ப.

இரண்டாவது குறள்,

12. "திரிமலத்தார் ஒன்றதனிற் சென்றார்கள் அன்றி
ஒருமலத்தா ராயும் உளர்"

என வரும்.

**இதன் பொருள்**

திரிமலத்தார் - மேற்கூறப்பட்டார் அனைவரும் மும்மலமும் உடையவர் எனவும்; அதனில் ஒன்று சென்றார்கள் - அந்நிலையினின்றும் ஒன்று நீங்கிய இருமலம் உடையவர் எனவும்; அன்றி ஒரு மலத்தாராயும் - அவரேயன்றி ஒருமலமே உடையர் எனவும்; உளர் - இங்ஙனம் மூன்று திறத்தினராய் உள்ளார்.

**விளக்கவுரை**

'அவர்' என்னும் எழுவாய், மேலைக் குறளினின்றும் வருவிக்க. "ஆயும்" என்பது, ஏனை இரண்டிடத்தும் சென்று இயையும். "அதனில்" என்றதில் சுட்டுப் பெயர், அந்நிலைமேல் நின்றது. 'அவற்றில்' எனப் பாடம் ஓதுதல் சிறக்கும். "அன்றி" என்பது 'மற்று' என்னும் பொருட்டு. மும்மலத்தார், 'சகலர்' எனவும், இருமலத்தார் 'பிரளயாகலர்' எனவும், ஒருமலத்தார், 'விஞ்ஞானகலர்' எனவும் பெயர் கூறப்படுவர். சகலர் - கலையோடு கூடியவர். அகலர் - கலையில்லாதவர். கலை - மாயா காரியம். விஞ்ஞானகலர் என்பது 'விஞ்ஞானகலர்' என மருவி வழங்கும். விஞ்ஞானாகலர் - விஞ்ஞானத்தால் (விசேடஞானத்தால்) கலை அற்றவர். பிரளயாகலர் - பிரளயத்தில் (உலகம் ஒடுங்கிய காலத்தில்) கலையற்றவர். பரமுத்தி பெற்றவருள் இவ் வேறுபாடு இல்லையேனும்,

அதற்குக் கீழ் அபரமுத்தி பதமுத்தி நிலைகளில் இவ்வேறுபாடு இருத்தலின் மேல், "துறந்தோர்" எனக் குறிக்கப்பட்டவர்க்கும் இது கூறினார். எனினும், 'துறப்போர்க்கே இவ்வேறுபாடு சிறந்தது' என்க.

இதனால், அனைத்துயிரும் மூன்று திறத்தனவாதல் கூறப்பட்டது.

மூன்றாவது குறள்,

13. "மூன்றுதிறத் துள்ளாரும் மூலமலத் துள்ளார்கள்
தோன்றலர்தொத் துள்ளார் துணை"

என வரும்.

**இதன் பொருள்**

மூன்று திறத்து உள்ளாரும் — மேற்கூறிய மூன்றுவகை உயிர்த்திறத்தில் உள்ளவரும்; மூலமலத்து உள்ளார்கள் — மூலமாகிய ஆணவத்தில் அகப்பட்டுள் ளார்கள்; தொத்து உள்ளார் — அவருள் மாயையுள் அகப்பட்டுள்ளவரே; துணை தோன்றலர் — உயிர்க்குத் தோன்றாத் துணையாகிய பதியுண்மை தோன்றப் பெறாது மயங்கும் சகலராவார்.

**விளக்கவுரை**

எனவே, 'அகலர் எனப்பட்ட ஏனை இருவர்க்கும் மாயை இல்லை' என்றதாயிற்று. 'எல்லாரும் மூலமலம் உடையர்' என்றதனால், 'ஒருமலம் உடையராய விஞ்ஞானகலர் ஆணவம் ஒன்றே உடையர்' என்பதும் 'அகலர்க்கு மாயை இல்லை' எனவே, 'இருமலம் உடையராய பிரளயாகலர் ஆணவம், கன்மம், என்னும் இவற்றை உடையர்' என்பதும் போந்தன. "துணை

தோன்றலர்'' என்றது, 'சகலர்' என்பதனைக் குறிக்கும் குறிப்புமொழியாய் நின்றது.

*"மூவகை ஆருயிர் வருக்கம், 'மலத்தார், கன்ம*
*மூலமலத் தார், மூன்றும் உடையார்' அன்றே"*

என இவ்வாசிரியர் தாமே சிவப்பிரகாசத்துள் அருளியதும்,

*"உரைதரும்இப் பசுவருக்கம் உணரின் மூன்றாம்;*
*உயரும்விஞ் ஞானகலர், பிரளயாகலர், சகலர்*
*நிரையில்மலம், மலம்கன்மம், மலம்கன்மம்மாயை நிற்கும்"*

என அருணந்திதேவர் தமது சிவஞானசித்தியுள் அருளிச் செய்ததும் காண்க.

மும்மலங்களுள் ஆணவமலத்தை 'மூலமலம்' என்றதனால் அதனை ஒட்டியே ஏனை இருமலங்களின் பிணிப்பும் உளவாகின்றன' என்பது பெறப்படுகின்றது. படவே, சகலர் முதலிய முப்பிரிவும் அம் மூலமலம், 'தூல தரம், தூலம், சூக்குமம்' என்னும் வகையில் பிணித்துள்ளமை காரணமாகவே அமைந்தன என்பதும் பெறப்படும்.

இயற்கையாய் உள்ள தன்மைக்கேற்ப அமைந்த இப்பிணிப்பு வேறுபாட்டினால் உள்ள விஞ்ஞானகலர் பிரளயாகலர் போலச் சகலருள்ளும் சிலர் தவத்தால் மாயை கன்மங்களின் நீங்கி அவரோடு ஒப்பநிற்பர் என்க. தொத்து, பல்வேறு வகைப்பட்ட ஆற்றல்களின் தொகுதி.

இதனால், மூன்று திறத்துள்ளார்க்கும் உள்ள பிணிப்பு நிலை கூறப்பட்டது.

நான்காவது குறள்,

14. "கண்டவற்றை நாளுங் கனவிற் கலங்கியிடுந்
திண்டிறலுக் கென்னோ செயல்"

என வரும்.

### இதன் பொருள்

நாளும் கண்டவற்றை — பலநாளும் நனவில் பழகித் தெளிய உணர்ந்த பொருள்களை; கனவில் கலங்கியிடும் திண் திறலுக்கு — கனவின்கண் திரியக் கண்டு மயங்குகின்ற திண்ணிய ஆற்றலுடையதாகிய உயிருக்கு; செயல் என் — தன்வயமான செயலாய் உள்ளது யாது!

### விளக்கவுரை

காண்டல் - தெளிய உணர்தல், கலங்குதல் - திரியக் காண்டல், கலங்குதல் 'கனவில்' என்றதனால், 'கண்டது நனவில் என்பது போந்தது. அக்கலக்கமாவன, செல்வராய் உள்ளோர் தம்மை வறியராகக் கண்டு துயருறுதலும், வறியராய் உள்ளோர் தம்மைச் செல்வராகக் கண்டு மகிழ்வுறுதலும் போல்வன. "கலங்கியிடும்" என்றதில், 'இடு' துணைவினை. 'உயிர்கள் தம்வய முடையனவாயின், இங்ஙனம் கலக்கம் எய்தாவன்றோ' என்பதாம். எனவே, 'உயிர்கள் தமக்குத் துணையாய பொருளின் வழிப்பட்டு நிற்கும்' என்றவாறாயிற்று.

'திறல்' என்பது, அதனையுடைய பொருளைக் குறித்தது திறல் இல்லாத உயிரைத் திறல் உடையதாகக் கூறியது புகழ்வது போலப் பழித்ததாம். இதனால், 'உயிர் தன்வயமில்லாதது' என்பது கனவுநிலையில்வைத் துணர்த்தப்பட்டது.

ஐந்தாவது குறள்.

15. "பொறியின்றி யொன்றும் புணராத புந்திக்
கறிவென்ற பேர்நன் றற"

என வரும்.

**இதன் பொருள்**

பொறி இன்றி ஒன்றும் புணராத புந்திக்கு நனவு நிலையிலும் ஐம்பொறிகள் இல்லாமல் ஒன்றையும் அறிய மாட்டாத உயிருக்கு, அறிவு என்றபேர் அற நன்று – 'அறிவுடையது' என்ற ஆன்றோர் கூறிய பெயர். முற்றிலும் நன்றாயிருக்கின்றது.

**விளக்கவுரை**

புந்தி - புத்தி. இதுவும் இதனை உடைய உயிரைக் குறித்தது. 'அற நன்று' என்பதும் மேலைக் குறளிற்போலக் குறிப்பான் இகழ்ந்தது. 'உயிர் அறிவுடைய தாயினும், அவ்வறிவு, தானே விளங்கமாட்டாது; மற்றொரு பொருள் விளக்க விளங்குவது' என்றவாறு.

இதனால், 'உயிர்கள் தாமே அறிவனவல்ல; அறிவித்தால் அறிவன' என்பது நனவுநிலையில்வைத் துணர்த்தப்பட்டது.

*"அறிவிக்க அன்றி அறியா உளங்கள்"*

என்பது சிவஞான போதம். (சூ. 8. அதி.2)

ஆறாவது குறள்,

16. "ஒளியும் இருளும் உலகும் அலர்கட்
டெளிவி லெனில்என் செய"

### இதன் பொருள்

அலர் கண் தெளிவு இல் எனில் — விழித்துநிற்கின்ற கண்ணிடத்துக் காணுந்தன்மை இல்லையாயின்; ஒளியும் இருளும் உலகும் என் செய — ஒளி முதலிய மூன்றும் அக்கண்ணிற்கு என்ன பயனைச் செய்ய இருக்கின்றன!

### விளக்கவுரை

'இருந்தும் யாதொரு பயனையுஞ் செய்யா' என்பதும், 'கண்ணிற்குக் காணுந் தன்மை யிருத்தலானே, ஒளி அதற்கு விளக்கத்தையும், இருள் அதற்கு மறைப்பையும், உலகம் புலப்படுதலையும் செய்கின்றன' என்பதும் கருத்து. 'இருக்கின்றன' என்பது சொல்லெச்சம்.

'உயிருக்கு அறியுந் தன்மை யில்லையாயின், அதற்கு ஐம்பொறிகள் விளக்கத்தையும், ஆணவம் மறைப்பையும், ஐம்புலன்கள் புலப்படுதலையும் செய்யா' என்னும் பொருளைத் தோற்றுவித்தலின், இக்குறள், ஒட்டணி. 'ஐம்பொறி முதலிய மூன்றானும் உயிர் அவ்ப் பயனை அடையக் காண்கின்றோமாதலின், உயிர் அறியுந்தன்மை யுடையதே' என்றவாறு.

இதனால் மேல் 'அறிவென்ற பேர் நன்று அற" என்றதனால், 'அறிவிலது என்று பெயர் கூறலாமோ' என்றெழும் ஐயத்தை அறுத்து, 'உயிர் அறிவுடையதே' என்பது உணர்த்தப்பட்டது.

இவ்வாறாகவே, 'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களுள், 'பதி, பிறர் அறிவிக்க வேண்டாது தானே அறிவது' என்பதும், 'பசு, தானே அறியமாட்டாது, அறிவித்தால் அறிவது' என்பதும், 'பாசம், தானேயும் அறியாது; அறிவித்தாலும் அறியாது' என்பதும் போந்தமை காண்க.

எவ்வாற்றாலேனும் அறியுந் தன்மை யுடையது 'சித்து' என்றும், எவ்வாற்றானும் அறியுந் தன்மை இல்லாதது 'அசித்து' அல்லது 'சடம்' என்றும் சொல்லப்படும்.

'சித்து' என்னும் பொதுமையால், பதியும், பசுவும் ஓரினம். சித்தன்மையால், பாசம் வேற்றினம். எனினும், பதி பேரறிவுப் பொருள்; பசு சிற்றறிவுப் பொருள். இவை முறையே 'சூக்கும சித்து, தூல சித்து' என்று சொல்லப்படும்.

ஏழாவது குறள்,

17. "சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கண்இவை
உய்த்தல்சத சத்தாம் உயிர்"

என வரும்.

### இதன் பொருள்

சத்து அசத்தைச் சாராது – சத்துப் பொருள் அசத்துப் பொருளை, அஃது இழிந்ததாகலின் சாராது; அசத்து அறியாது – அசத்துப் பொருள் அசித்துமாம் (அறிவிலதுமாம்) ஆகலின், அதுவும் சத்துப் பொருளை அறிந்து சாரமாட்டாது. அங்கண் – அந்நிலைமைக்கண்; இவை உய்த்தல் – இவ்விரண்டினிடத்தும் தனது அறிவைச் செலுத்தி நிற்றலால். உயிர் சதசத்தாம் – உயிர் சத்துமாகாது. அசத்துமாகாது இருதன்மையும்

உடைத்தாகிய சதசத்தாம்.

**விளக்கவுரை**

வருவித்துரைத்தன இசையெச்சங்கள். 'சத்தாயின் அசத்தைச் சாராது, அசத்தாயின் அறியாது' என்று ஓதற்பாலதனை இவ்வாறு ஓதினார், சத்து அசத்துக்களது இயல்பும் உணர்த்தவேண்டி 'உய்த்தலால்' என்னும் மூன்றன் உருபு தொகுத்தலாயிற்று.

சத்து - தோற்றக்கேடுகள் இன்றி என்றும் ஒரு பெற்றித்தாய் நிற்பது. இதனையே 'மெய்ப்பொருள்' என்ப. அசத்து - தோற்றக் கேடுகள் உடையதாய் நிலையாமையுடையது. இதனையே, 'பொய்ப் பொருள்' என்ப. பதி, சத்து. பாசம், அசத்து. எனவே, பதி பாசத்தைச் சார நினையாது. பாசம் பதியை அறிந்து சாரமாட்டாது. சார்தல் அதனில் அழுந்தி அதுவாதல். ஆகவே, 'பசுவே அசத்தாகிய பாசத்தைச் சார்ந்து அசத்தாயும், சத்தாகிய பதியைச் சார்ந்து சத்தாயும் நிற்கும்' என்பதாம். எனவே, சார்ந்ததன் வண்ணமாதல் உயிரின் இயல்பு என்பது பெறப்பட்டது.

*"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும்; மாந்தர்க்கு*
*இனத்தியல்ப தாகு மறிவு"*

என்ற திருக்குறளாலும்(452) இவ்வியல்பு அறியப்படும்.

மேல், 'பசு சித்துமாகாமல், அசித்துமாகாமல் சிதசித்தாய் நிற்கும்' என்று உணர்த்தியபின், அவ்வாற்றானே, பசு சத்து மாகாமல், அசத்துமாகாமல் சதசத்தாய் நிற்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

எட்டாவது குறள்,

18. "இருளில் இருளாகி எல்லிடத்தில் எல்ஆம்
பொருள்க ளிலதோ புவி"

என வரும்.

**இதன் பொருள்**

புவி – இந்நிலவுலகம்; இருளில் இருள் ஆகி – இருள் உள்ள பொழுதில் இருளேயாகியும்; எல் இடத்தில் எல் ஆம் பொருள்கள் – ஒளி வந்தபொழுதில் ஒளியேயாகியும் சார்ந்த தன் வண்ணமாகின்ற பொருள்களை; இலதோ – உடைத்தாயிற்றில்லையோ!

**விளக்கவுரை**

'இருள், ஒளி' என்பன ஆகு பெயராய் அவை உள்ள காலத்தைக் குறித்தன. 'இருளில், இருளாயும், ஒளியில் ஒளியாயும் இவ்வாறு சார்ந்ததன் வண்ணமாகின்ற பொருள்கள் கண், படிகம், விண் முதலாகப் பல உள்ளன' என்றபடி.

எனவே, இதனால், 'பொருள்கள் சத்தும், அசத்தும் ஆகிய இரு திறத்துள் யாதானும் ஒரு திறத்துள் நிற்பதன்றி, அவ் விருதிறனுமாகாமலும், ஆகியும் நிற்றல் கூடாது; அதனால், 'உயிர் சத்தோ, அசத்தோ, என வினவுவார்க்கு, 'சத்துந்தான், அசத்துந்தான்' என விடை கூறுதல். அனேகாந்த வாதமாம் (ஒருமுடிவு இல்லாத பேச்சாகும்) ஆகவே, 'ஆன்மாவை, 'சதசத்து' என்றல் போலியாம் போலும்' என்னும் தடைக்கு உயர்ந்ததும் இழிந்தது மன்றிச் சார்ந்ததன் வண்ணமாகின்ற பொதுமைப் பொருளும் உண்டு' என்பதனை உவமையளவையால் உணர்த்தி விடை

கூறி, மேலைக் குறளிற் கூறியபொருள் வலியுறுத்தப் பட்டதாம்.

மக்களுள்ளும் பலர், பிறர் ஒன்றைப் புகழ்ந்தால் தாங்களும் 'நன்று' என்ற புகழ்பவராயும், பிறர் இகழ்ந்தால், தாங்களும் அதனை 'தீது' என்று இகழ்பவராயும் இருத்தலைக் காணலாம். இவர்களை இவ்வாசிரியர், "தமக்கென ஒன்றிலர்" என்பார். இத்தன்மையோர் மேன்மக்களுமாகாமல், கீழ்மக்களுமாகாமல், பொது மக்களாய் இருத்தல் போல, ஆன்மாவும் பெரும் பொருளாகிய பதியுமாகாமல், சிறுபொருளாகிய பாசமுமாகாமல், இடைப்பட்ட பொதுப் பொருளாம் என்பது உணர்க.

ஒன்பதாவது குறள்,

19. "ஊமன்கண் போல ஒளியும் மிகஇருளே
யாமன்கண் காணா தவை"

என வரும்.

**இதன் பொருள்**

மன்கண் காணாதவை – அனாதியே பேரறிவோடு கூடியிருந்தும் அதனை அறியாது நிற்கும் சிற்றறிவுகள்; ஊமன்கண்போல – கதிரவன் ஒளியிற் கலந்து நின்றும் அதனையறியாது நிற்கும் கூகையினது கண்போல்; ஒளியும் இருளே மிக ஆம் – ஒளியிடத்தும் இருளில் மூழ்கி இருளாய் இருக்கும் தன்மையையே மிகப் பெற்றிருக்கும்.

**விளக்கவுரை**

வருவித்துரைத்தன இசையெச்சங்கள். 'ஒளி, இருள்' என்பன உவமையும் பொருளுமாகிய இரண்டற்கும்

இயையப் பொதுவாய் நின்று, முறையே இயற் பெயராய் அவ்வப்பொருளையும், உவம ஆகுபெயராய், அறிவு அறியாமைகளையும் உணர்த்தி நின்றன. 'ஒளிக்கண்ணும்' என்னும் உருபு தொகுத்தலாயிற்று. உம்மை, 'இருளிடத்தன்றியும்' என இறந்தது தழுவிற்று. "இருள்" என்றது, இருளாந் தன்மையை. மன் - தலைமை; அது பெருமைமேல் நின்றது. 'கண்' இரண்டில் பின்னது அறிவு. 'காணாதவை' என்னும் வினையாலணையும் பெயர், அறிவை உணர்த்திற்று; ஊமன் கண்ணோடு உவமிக்கப் படுவதும், இருளேயாய் நிற்பதும் அதுவேயாகலின். எனவே இதுபற்றியே அதனை வினை முதல்போலக் கூறினார் என்க..

இதனால், சார்ந்ததன் வண்ணமாம் இயல்புடைய ஆன்மா, அனாதியேசத்தோடு கூடிநின்றும், சத்தில் அழுந்திச் சத்தாய் நில்லாது, அசத்தில் அழுந்தி அசத்தாய் நின்றதென்னை என்னும் ஐயத்தினை, 'சார்ந்ததன் வண்ணமாகின்ற இயல்போடு, யாதொரு பொருளையும் படிமுறையான் உணர்தலன்றி, முதற்கண்ணே உணர மாட்டாத இயல்பும் உடைமையால், ஆன்மா முதற்கண் சிறுபொருளாகிய அசத்தில் அழுந்தி அசத்தாய் நின்றது' எனக் கூறி அகற்றி, மேற்கூறிய சார்ந்ததன் வண்ணமாந் தன்மையுடைமை வலியுறுத்தப்பட்டது.

இப் படிமுறை விளக்கமே 'பக்குவம்' எனப்படுவது என்க. எனவே, அனாதியில் பக்குவமின்றி நிற்கும் ஆன்ம அறிவிற்கே ஊமன்கண் உவமையாதல் அறிக.

பத்தாவது குறள்,

20. "அன்றளவும் ஆற்றுமுயிர் அந்தோ அருள்தெரிவ
தென்றளவொன் றில்லா இடர்"

என வரும்.

**இதன் பொருள்**

அன்று அளவும் அளவு ஒன்று இல்லா இடர் ஆற்றும் உயிர் — இருளில் அழுந்திய அன்று தொட்டே அது காரணமாக வந்து பொருந்துகின்ற எல்லையற்ற துன்பத்தைப் பொறுத்து நிற்கின்ற உயிர்; அந்தோ — ஐயகோ; அருள் தெரிவது என்று — முதல்வனது ஞானமாகிய ஒளியைப்பெற்று இடர் நீங்கப்பெறுவது எந்நாளோ!.

**விளக்கவுரை**

"அன்று" என்றது, மேற்கூறியவாறு இருளேயாய் நின்ற நிலையை. அளவுதல் - கலத்தல். மேல், 'இருள்' என்றதனால் அருள் ஒளியாதல் பெறப்பட்டது.

'அருள் தெரிவது என்று' என்ற குறிப்பு, 'இருளில் அழுந்திய உயிர் படிமுறையான் விளக்கம்பெறும் தன்மைத் தாதலின், அதனினின்றும் நீங்குங்காலம் உண்டு' எனவும், 'ஆயினும் அஃது அவ்வவ்வுயிர்தோறும் உள்ள சிறப்பியல்பாகிய பக்குவ நிலைக்கு ஏற்பச் சேய்த்தாயும், அணித்தாயும் நிற்கும்' எனவும் கூறியவாறாம். இதனுள்ளே, இருள்நிலை துன்பம்' என்பதும், 'அருள்நிலை இன்பம்' என்பதும் போந்தவாறு அறிக.

இதனால்மேல், ஊமன்கண்போல 'என்ற உவமைபற்றி' 'உயிர்கள் எக்காலத்தும் ஒளிபெறுதல் இல்லைபோலும்' என்று எழும் ஐயம் அகற்றப்பட்டது.

மூன்றாம் அதிகாரம்

# இருள்மல நிலை

அஃதாவது, அறியாமையைச் செய்கின்ற மாசினது இயல்பு. 'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களுள் மேல் இரண்டதிகாரங்களாலும் முறையே பதி, பசு என்னும் இரண்டன் இயல்புகூறி, எஞ்சி நின்ற பாசத்தின் இயல்பு இதனாற் கூறுகின்றார். பாசம், 'ஆணவம், கன்மம், மாயை' என மூன்று. அவற்றுள் ஆணவமே இருள் மலமாம். 'இருள் மல நிலை' என்பது பெரும்பான்மை பற்றி வந்த பெயர்; என்னை? இறுதி ஒரு குறள் கன்ம மாயைகளது இயல்பு கூறுவதாக, ஏனை ஒன்பது குறள்களாலே இருள் மல நிலை கூறப்படுகின்றதாகலின்.

முதற் குறள்,

21."துன்றும் பவத்துயரும் இன்பும் துணைப் பொருளும்
இன்றென்ப தெவ்வாறு மில்"

என வரும்.

**இதன் பொருள்**

துன்றும் பவத் துயரும் — தொன்றுதொட்டு ஒன்றன்பின் ஒன்றாய்த் தொடர்ந்து வருகின்ற பிறவியால் வரும் துன்பமும்; இன்பும் — அத்துன்பம் நீங்கப் பெறுகின்ற அழிவிலா வீட்டின்பமும்; துணைப் பொருளும் — இவ்விரண்டற்கும் முதனிலைகளாய் உள்ள பொருள்களும்; இன்று என்பது எவ்வாறு இல் — இல்லையென்றற்கு எந்த அளவையும் இல்லை. (ஆயினும், அவைகளை உயிர்கள் அவ்வாறு கருதி நிற்றற்குக் காரணம் உளதாகல் வேண்டும்; அதுவே இருள்மலமாம்)

### விளக்கவுரை

ஈற்றில் வருவித்துரைத்தன குறிப்பெச்சம். "துணை" இங்கு 'முதனிலை' என்னும் அளவாய் நின்றது. அவை வினையும், இறை ஆணையுமாம். இறை ஆணை ஒன்றே 'திரோதான சத்தி' எனவும் 'அருட்சத்தி' எனவும் இருவகைத்தாய் நின்று, முறையே பவத்துயரையும், வீட்டின்பத்தையும் உயிர்கட்குத் தருவதாகும். அங்ஙனம் தருமிடத்துப் பவத் துயரை வினை வழியாகவும், வீட்டின்பத்தை நேராகவும் தரும்.

"இன்று" என்றது, பன்மை யொருமை மயக்கம். "என்பது" என்பது அத்தொழிலின்மேல் நின்றது. பவத்துயர் முதலியன உளவாதல், அறிவுடையார்க்கு உரையளவை கருதலளவைகளால் இனிது விளங்குதலால் அவற்றை 'இன்று' என்றல் பொருந்தாமை பற்றி, "இன்றென்பது எவ்வாறு மில்" என்றார். 'இங்ஙனமாகவும் அவற்றை அறியாமை உயிர்களிடத்துக் காணப்படுதலின், அதற்குக் காரணமாகிய இருள் உண்டென்பது காரிய ஏதுப்பற்றித் துணியப்படும்' என்பது கருத்து.

இதனால் இருள் மலத்தது உண்மை கூறப்பட்டது.

இரண்டாவது குறள்,

22. **"இருளான தன்றி யிலதெவையும் ஏகப்**
**பொருளாகி நிற்கும் பொருள்"**

என வரும்.

### இதன் பொருள்

எவையும் ஏகப் பொருளாகி நிற்கும் பொருள் — காணத் தக்க பொருள் யாவும் தானேயாய்த் தோன்றி,

அவற்றுள் ஒன்றையும் காணவொட்டாது கண்ணொளியை மறைத்து நிற்கும் பொருள்; இருளானது அன்றி இலது — 'இருள்' எனப்படுகின்ற ஒன்றையன்றிப் பிறிதில்லை.

### விளக்கவுரை

எனவே, துன்றும் பவத் துயர் முதலாக அறியத் தக்க பல பொருள்களுள் ஒன்றையும் அறியவொட்டாது உயிரறிவை மறைத்து நிற்கும் மலமும் இருள் தன்மையதாம்' என்பது கருத்தாயிற்று. "ஆனது" என்பது அசைநிலை, இதனை, 'எழுவாயின் சொல்லுருபு' என்பர்.

இதனால், ஆணவ மலம் கண்ணை மறைக்கின்ற புற இருள்போல, 'உயிரின் அறிவை மறைத்து நிற்கின்ற அக இருளாதல் கூறப்பட்டது.

மூன்றாவது குறள்,

23. "ஒருபொருளுங் காட்டா திருள்உருவங் காட்டும்
இருபொருளுங் காட்டா திது"

என வரும்.

### இதன் பொருள்

இருள் — புற இருளானது; ஒரு பொருளும் காட்டாது உருவம் காட்டும் — பிற பொருள்களுள் ஒன்றைத்தானும் காண ஒட்டாது கண்ணொளியை மறைத்து நிற்குமாயினும், தான் உளதாதலை உணர நிற்கும்; இது இரு பொருளும் காட்டாது — அக இருளாகிய இந்த ஆணவமலம் — 'பிற பொருள், தான்' என்னும் இரு பொருள்களையும் அறியவொண்ணாத வகையில் உயிரறிவை மறைத்து நிற்கும்.

## விளக்கவுரை

கண்வழியாகப் புறப்பொருள்களைக் காணும் உயிர் அக் கண்ணின் வேறாதலின், கண் மறைக்கப் பட்டவழி அம்மறைப்பு உள்ளபொழுதே அதனை கண் செயற்படாமை பற்றி உயிர் கருதி உணர்கின்றது. புறப்பொருள், அகப்பொருள் ஆகிய எல்லாப் பொருள்களையும் அறிவினால் அறியும் உயிர், அவ்வறிவின் வேறன்மையால், அவ்வறிவின் மறைப்பினை அஃது உள்ளபொழுது, உயிர் எவ்வாற்றானும் அறியமாட்டாதாம். ஆகவே, அம்மறைப்பு நீங்கி அறிவு நிகழ்வுழியே அந்நிகழ்ச்சி பற்றி முன்னை மறைப்பினை உயிர் கருதி உணரும் என்க. இதுபற்றியே திருவள்ளுவ நாயனார், 'அறிதோ றறியாமை கண்டற்றால்' (குறள் 1110) என்று அருளிச்செய்தார். இது, பித்துக்கொண்ட ஒருவன், தன்னை, 'பித்துக்கொள்ளி' என்று அறியாதிருந்து களித்திருத்தலின் வைத்து நன்குணரப்படும். இதனால், 'அறியாமை அறிவே போலத் தோன்றும்' என்பதும் பெறப்படும். 'அறிவுபோல் அடர்ந்தெழும் அறியாமையின் வலி'' என்றார் மாதவச் சிவஞான யோகிகள்.

*"காணாதாற் காட்டுவான் தான்காணான்; காணாதான்*
*கண்டானாந் தான்கண்ட வாறு"*

(குறள் - 849)

என்றதும் இது பற்றி.

இதனானே, 'உயிர் தன் அறியாமையை மட்டுமே தான் அறியாது நிற்குமன்றித் தன் அறிவைத் தான் அறியா தொழிதல் இல்லை' - என்பதும் தெளிவாகும்.

புற ஒளி இல்லாமையால் இருளில் அழுந்தி இடருறுவோர் அவ் இடரினை உணர்ந்து அதனை நீக்கிக்கொள்ள முயலுதலும், அறிவில்லாமையால் அறியாமையில் அழுந்தி இடருறுவோர் அதனை அறிதலும்' அறிந்து அதனை நீக்கிக் கொள்ள முயலுதலும் இல்லாமையும் தெளிவாதலை இங்ஙனம் கூறினார்.

உம்மை இரண்டனுள் முன்னது இழிவு சிறப்பு; பின்னது முற்று. 'காட்டாமை, காட்டுதல்' என்பன உணர நிற்றல், உணர நில்லாமைகளை உணர்த்தின. 'காட்டாது' என்பதன் பின், 'ஆயினும்' என்பது சொல்லெச்சமாய் நின்றது. 'உருவம்' என்னும் பொதுமைப் பெயர். இங்கு உண்மை மாத்திரையைக் குறித்தது. என்னை? உருவமாவது ஒளியன்றி அதற்கு மறுதலையாய இருளன்றாகலின். இதனால், 'இருளுண்மையை உணர்தல் காட்சியானன்றிக் கருத்தாலே' என்பதும், 'அது காட்சி போலத் தோன்றுதல் மயக்கம்' என்பதும் பெறப்படும்.

தருக்க மதத்தவர் இருளை, 'உண்மைப்பொருள்' என்னாது, 'ஒளியினது இன்மையே' என்பர். எனினும், 'ஒளி முக்குணங்களுள் சாத்துவிகத்தின் கூறாகிய உண்மைப் பொருளாதல்போல, ஒளியின் மறுதலைப் பொருளாகிய இருளும் தாமதத்தின் கூறாய் உண்மைப் பொருளேயாம்' என்பதே சைவசித்தாந்தத்தின் கொள்கை.

"இருள்சேர் இருவினை" (குறள் - 5) "இருள்நீங்கி இன்பம் பயக்கும்" (குறள் - 352) "விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல்" (குறள் - 1182) "விளக்குப்புக இருள்மாய்ந்தாங்கு" (நாலடி - 51) என்றாற்போலத் தமிழ் நூல்களுள் இருளை உண்மைப் பொருளாகவே கூறுதல்

அறியத்தக்கது. "இது" என்றது. 'இருளின் தன்மைத்து' என மேற்கூறப்பட்டது என்றவாறு.

மேலைக் குறளால், 'ஆணவ மலம் மறைத்தல் வலிமையால் இருளோடொக்கும்' எனக் கூறிய பின்னர், 'அது சித்தாகிய ஆன்மாவை மறைத்தலால், சடமாகிய கண்ணை மறைக்கும் இருளினும் வலியது' என்பது கூறமுகத்தால், அதன் கொடுமை மிகுதி கூறப்பட்டது.

நான்காவது குறள்,

24. "அன்றளவி யுள்ளொளியோ டாவி யிடைஅடங்கி
இன்றளவும் நின்ற திருள்"

என வரும்.

**இதன் பொருள்**

இருள் – இருளாகிய ஆணவ மலம்; ஆவியிடை உள் ஒளியோடு அன்று அளவி – உயிரின்கண் இரண்டறக் கலந்து நிற்கின்ற அக ஒளியாகிய பதிப்பொருளோடே தானும் அன்றே இரண்டறக் கலந்து; அடங்கி – அவ்விரண்டிற்கும் கீழ்ப்பட்டதாய்; இன்றளவும் நின்றது – இதுகாறும் நீங்காமலே உள்ளது.

**விளக்கவுரை**

'அன்றே' என்னும் தேற்றேகாரம் தொகுத்தலாயிற்று. "அன்று" என்றது, 'பதி பசுவிற் கலந்துள்ள அப்பொழுதே' என, வேறொரு காலத்தைக் குறியாது, இயற்கையாகிய அனாதி நிலையைக் குறித்தது. அதனால், 'பதி' என்று உண்டோ அன்றே பசுவும் உண்டு' என்பதும், 'அவை இரண்டும் உள்ள அன்றே பாசமும் உண்டு' என்பதும் "அளவி" என்றதனால், 'அம்முப்பொருளும்

வேறுவேறாய் நில்லாது, ஒன்றாய்க் கலந்தே உள்ளன' என்பதும் "அடங்கி" என்றதனால், 'மூன்றும் ஒன்றாய்க் கலந்து நிற்பினும் அவை தம்முட் சமமாகாது, பதியில் பசுவும், பசுவிற் பாசமும் அடங்கி நிற்பன' என்பதும் பெறப்பட்டன. அடங்கி நிற்பதை 'வியாப்பியம்' என்றும் அடக்கி நிற்பதை 'வியாத்தி' (வியாப்தி) என்றும் கூறுவர். பருப்பொருள் (தூலம்) வியாப்பியமாயும், நுண்பொருள் (சூக்குமம்) வியாபகமாயும் இருத்தல் இயல்பு. ஆகவே, பாசம் பருப்பொருளும், (தூலப்பொருளும்) பதி நனி நுண்பொருளும் (அதிசூக்குமப் பொருளும்) ஆதலும், பதி வியாபகமும், பசு அதனில் வியாப்பியமும், பாசம் அதனில் வியாத்தியும் ஆதலும் அறிந்து கொள்ளப்படும். அதி சூக்குமத்தை, 'பரம்' என்பர். தூலமும் பரமும் தம்முள் இயையுமாறு இல்லை யாதலின், தூலமாகிய ஆணவம் பரமாகிய பதியைப் பற்றாது, அதனிற் கீழாயுள்ள பசுவையே பற்றி நிற்கும் என்க. பதி, பசு, பாசம் மூன்றும் தம்முள் கலந்து நிற்றற்கு, "தண்கடல் நீர் உப்புப்போல்" (சிவஞானபோதம் சூ.7. அதி.3) என்று உவமை கூறினார் மெய்கண்டார்.

"இன்றளவும்" என்றது. "எண்ணற்ற பிறவிகளில் உழன்று இம் மானுடப் பிறவியில் வந்து பொருளியல்பை ஆராயத் தொடங்கிய இன்றுகாறும்' என்றபடி. "நின்றது" என்றது, 'ஏனை மாயை கன்மங்கள்போல விட்டு விட்டுப் பற்றாது. இடையறாது பற்றி நிற்கின்றது' என்றவாறு. இன்னும், 'இன்றளவும் நின்றது' என்றது. 'இது நீங்குங்காலம் என்றோ' எனவும் பொருள் தந்து. 'இது நீங்குங் காலமும் ஒன்று உண்டு' என்பதனைக் குறிப்பித்தது.

இதனால், 'ஆணவம்' செம்பிற்குக் களிம்புபோல் உயிருக்கு இயற்கைக் குற்றமாயும், 'தூல சூக்கும பரம்' என்பவற்றுள் தூலமாய்ப் பசுவோடே கலந்து அதனில் வியாத்தியாம்' என்பதும், இயற்கை (அனாதி) யாயினும், 'குணமாகாது குற்றமாய் நிற்றலின் ஒருகாலத்தில் நீங்கும்' என்பதும் கூறப்பட்டன. இயைபுபற்றி, பதி பசு பாசங்கள் தம்முள் வியாபக, வியாப்பிய, வியாத்திகளாதலும் கூறப்பட்டன.

ஐந்தாவது குறள்,

25."பலரைப் புணர்ந்தும்இருட் பாவைக்குண் டென்றுங்
கணவற்குந் தோன்றாத கற்பு"

என வரும்.

### இதன் பொருள்

இருட் பாவைக்கு – அக இருளாகிய 'ஆணவம்' என்னும் பெண்ணிற்கு; பலரைப் புணர்ந்தும் – அவள் பலரைக் கூடியிருப்பினும்; என்றும் கணவற்கும் தோன்றாத கற்பு உண்டு – எஞ்ஞான்றும் தன் தலைவனுக்கும் தனது உருவைக் காட்டாத கற்புநிலை உளதாகின்றது.

### விளக்கவுரை

'இது வியப்பு' என்பது குறிப்பெச்சம். "பலர்" என்றது உயிர்களையும், 'கணவன்' (தலைவன்) என்றது கடவுளையும் என்க. ஆணவம் ஆன்மாவுடன் வேறறக் கலந்து நிற்பினும், என்றும் அவ்வாறே நில்லாது ஒரு காலத்தில் நீங்குதலின், அவைகட்கு உரிய இல்லாள் என்னாது, பிறனுக்குரிய, ஒழுக்கம் இல்லாத இல்லாளாகவும், பசு, பாசங்கள் அனைத்தையும்

அடிமையாகவும், உடைமையாகவும் உடையவன் இறைவனேயாதலின், அவனை அவட்குக் கணவனாகவும், அவன்முன் ஆணவம் ஒளிமுன் இருள்போலும் ஆதலின் அவனுக்கும் அஃது என்றும் புலனாகாமையைச் சீரியதொரு கற்பாகவும் உருவகித்தார். 'கணவர்க்கும்' எனப் பன்மையாகப் பாடம் ஓதி, 'கணவர், ஆன்மாக்கள், என உரைத்தல், "ஒரு பொருளுங் காட்டாது", என மேற்போந்ததனையே கூறுவதாய் இக்குறளை வெற்றெனத் தொடுத்தலாக்குதலையும், "பலர்" என முன்னர்ப் பிறராகக் கூறப்பட்டவரையே பின்னர், 'கணவர்' எனத் தன்னை உடையவராகக் கூறுதல் மாறுகொளக் கூறலாய் முடிதலையும், "ஆவியிடை அடங்கி" என மேல் குறிப்பால் ஆணவம் இறைவன் முன் ஒளிமுன் இருள்போலும் எனக் கூறியதனை இனிது விளங்க எடுத்தோதுதலும் இன்றியமையாததாதலையும் ஓர்ந்துணர்க.

"பாவை" என்ற ஒருமையால், ஆணவம் ஒன்றேயாதலும், "பலரைப் புணர்ந்தும்" என்றதனால், அஃது ஒன்றேயாயினும் அளவற்ற உயிர்களையும் மறைத்து நிற்கக்கூடிய அளவற்ற ஆற்றலை (சத்தியை) உடையதாதலும், தன்னால் அடையப்பட்டவரைக் கணவரல்லாத பிறர் என்றமையால், அவர்களைப் பற்றி நிற்கும் ஆற்றல்கள் ஒவ்வொரு கால எல்லையில் அவர்களை விட்டு நீங்குதலும் பெறப்பட்டன.

இதனால், 'ஆணவம் பொருளால் ஒன்றேயாய், அளவற்ற சத்திகளால் எல்லா ஆன்மாக்களையும் மறைத்து, இறைவன் முன் தோன்றாமல் நின்று, அங்ஙனம் மறைக்கப்பட்ட ஆன்மாக்களை ஒவ்வொரு கால எல்லையில் விட்டு நீங்கும்' என்பது கூறப்பட்டது.

ஆறாவது குறள்,

26. "பன்மொழிகள் என்உணரும் பான்மை தெரியாத
தன்மையிருளார் தந்தது"

என வரும்.

### இதன் பொருள்

பன்மொழிகள் என் – ஆணவ மலத்தின் உண்மை (இருப்புப்) பற்றிப் பல தடை விடை மொழிகள் எதற்கு; உணரும் பான்மை தெரியாத தன்மை – முன்னையதிகாரத்தில் 'உயிர் உணருந் தன்மைத்து' என விளக்கப்பட்டதற்கு மாறாக, அதற்கு அத்தன்மை தோன்றாத நிலை; இருளார் தந்தது – 'அக இருள்' எனப்பட்ட ஆணவமாகிய அம்மையாரால் தரப்பட்டதே.

### விளக்கவுரை

அதனால், 'அவ்வம்மையாரது இருப்பைப் பற்றி ஐயுற வேண்டுவதில்லை' என்பது குறிப்பெச்சம். தெரிதல் - தோன்றுதல். "இருளார்" என உயர்திணையாகக் கூறியது. இகழ்ச்சிக் குறிப்பாய், அதனது இழிவு தோற்றி நின்றது.

முதல் இரு குறள்களால் ஆணவ மலத்துண்மை கூறப்பட்டதாயினும், 'அஃது உயிருக்காதல், இறைவனுக்காதல் புலனாதல் இல்லை' என்றமையால், 'ஒருவருக்கும் புலனாகாத ஒன்று உள்பொருளாதல் எவ்வாறு' என மீள ஐயம் நிகழ்தலின், 'காட்சிக்குப் புலனாகாதாயினும், காரிய ஏதுவால் கருத்திற்குப் புலனாதலின், அஃது உண்டு' என நிறுவி, எய்தியது இகந்துபடாமை இதனால் காக்கப்பட்டது.

ஏழாவது குறள்,

27. "இருளின்மேற் றுன்பென் உயிரியல்பேற் போக்கும்
பொருளுண்டேல் ஒன்றாகிப் போம்"

என வரும்.

**இதன் பொருள்**

இருள் இன்றேல் துன்பு என் — அக இருளாகிய ஆணவம் இல்லையாயின் ஆன்மாக்கட்குத் துன்பம் உண்டாதற்குக் காரணம் யாது; உயிர் இயல்பேல் — துன்பமும், உயிரிடத்தே உள்ள ஒரு பண்பல்லது, அதனின் வேறாய ஒரு தனிப்பொருள் அன்று எனின்; போக்கும் பொருள் உண்டேல் — துன்பம் அதற்கு மாற்றாய பிற பொருள்களால் நீங்கவும் காண்கின்றோம். ஆதலின், துன்பத்திற்கு மருந்தாய் அதனை நீக்கும் பொருளும் உண்டென்பது பெறப்படுகின்றது; படவே; ஒன்றாகிப் போம் — துன்பமும் உயிரின் இயல்பே யாயின், துன்பம் இல்லையாகின்ற காலத்தில், ஆன்மாவும் அதனோடு இல்லையாய் ஒழியும்.

**விளக்கவுரை**

'அவ்வாறு இன்மையால், துன்பம் உயிரின் இயல்பன்று; வேறேயாம்' என்பது குறிப்பெச்சம். எனவே, 'துன்பத்திற்குக் காரணமாக ஆணவம், உயிரின் வேறாய தனி முதலாய் உண்டென்பது அறியப்படும்' என்பது கருத்து. துன்பத்திற்குக் காரணம் அறியாமை என்பது உலகியலிலும் காணப்படுவதே. அதனால், 'துன்பம்' என்பது, அதற்குக் காரணமாகிய அறியாமையின் மேலதேயாம். அவ் அறியாமை பின்பு நீங்குதலும்

உலகியலிற்றானே அறியப்படுதல் பற்றி, 'போக்கும் பொருளுண்டேல்'' என அதனை ஏதுவாக வைத்துக் கூறினார். மாறுபட்ட இருதன்மை ஒரு பொருட்கு இருத்தல் இயலாது' என்னும் முடிபினை, முரணிக் கூறுவார்முன் கூறுதல் ஏலாமையின், அறியாமை உயிர் இயல்பன்று' என்பதனை வேறோராற்றால் நிறுவினார்.

இதனால், 'ஆணவம் உயிரின் குணம் அன்று; அதனின் வேறாய தனிமுதல் என்பது கூறப்பட்டது.

எட்டாவது குறள்,

28."ஆசாதி யேலணைவ காரணமென் முத்திநிலை
பேசா தகவும் பிணி"

என வரும்.

**இதன் பொருள்**

ஆசு ஆதியேல் – ஆணவமலம் அனாதியாய் இல்லாமல் ஆதியாய் இடையே ஒரு காலத்து வந்தது எனின்; காரணம் என் – அவ்வாறு வந்து பற்றுதற்குக் காரணம் யாது; (காரணம் இன்றியே வந்தது எனின்), முத்திநிலை பிணி பேசாது அகவும் – உயிர் வீடுபெற்ற நிலையிலும் அவ்வாணவத் தடை காரணமின்றியே வந்து அகப்படுத்துவதாகும்.

**விளக்கவுரை**

'அங்ஙனங் கூறுதல் கூடாமையால் ஆணவத்தை ஆதி எனல் பொருந்தாது; அனாதியேயாம்' என்பது குறிப்பெச்சம். பேசாது - காரணம் சொல்ல ஒண்ணாதபடி. 'பேசாது கவ்வும்' எனவும் பாடம் ஓதுப.

இதனால், ஆணவம் ஆதியாகாமை பொருந்துமாறு பற்றி வலியுறுத்தப்பட்டது.

ஒன்பதாவது குறள்,

29. "ஒன்று மிகினும் ஒளிகவரா தேல்உள்ளம்
என்றும் அகலா திருள்"

என வரும்.

**இதன் பொருள்**

ஒன்று மிகினும் — ஆணவ மலம் மிகுந்திருப்பினும்; உள்ளம் ஒளி கவராரதேல் — உயிர் இறைவனது திருவருளைச் சிறிது சிறிதாக உணர்ந்து வருதல் இல்லையாயின்; இருள் என்றும் அகலாது — அதற்கு ஆணவம் என்றுமே நீங்காது.

**விளக்கவுரை**

'வேதாகமங்களில் பல உயிர்கள் மலம் நீங்கி வீடு பெற்றமை கேட்கப்படுதலாலும், உலகத்திலும் அறியாமையில் நின்றோர் பின்னர் அதனினின்றும் நீங்கி அறிவு பெறக் காண்கின்றோம் ஆகையாலும், உயிர் பக்குவம் முதிர முதிர ஆணவத்தினின்றும் சிறிது சிறிது நீங்கி இறைவனைச் சிறிது சிறிது உணர்ந்து முடிவில் ஆணவத்தினின்றும் விடுபட்டு இறைவனை அடையும்' என்பதாம்.

இதனால், உயிர்களின் பக்குவ முதிர்ச்சி காரணமாக ஆணவம் அவைகளை விட்டு நீங்குவதாகும் என்பது கூறப்பட்டது.

பத்தாவது குறள்,

30. "விடிவா மளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து"

என வரும்.

### இதன் பொருள்

வடிவு ஆதி – உயிர்கட்கு உடம்பு முதலியன; கன்மத்து – அவைகளது வினைக்கு ஏற்ப; மாயை வந்து – மாயையினின்றும் தோன்றி; விடிவாம் அளவும் – ஆணவ இருள் விடியும் வரையும்; விளக்கு அனைய – இருளில் உள்ளவனுக்கு விளக்குப்போல உதவுவனவாம்.

### விளக்கவுரை

உடம்பு முதலியவாவன, தனு கரண புவன போகங்கள். 'உலகம்' என்பன இவை நான்குமே என்பது மேலே கூறப்பட்டது. இவை மாயையினின்றும் தோன்றும்' என்றதனால், 'மாயை உலகிற்கு முதற்காரணமாய் நிற்கும்' என்பதும், 'விளக்கனைய' என்றதனால், 'மாயை ஆணவத்திற்கு மாற்றுப்பொருளாம்' என்பதும், 'கன்மத்து' என்றதனால், 'கன்மம்' உயிர்களின் இன்பத் துன்பங்கட்கு ஏதுவாய் நிற்கும், என்பதும் பெறப்பட்டன. பிற மதங்கள் உலகத்தை அல்லது மாயையை உயிர்கட்குத் தீங்கு செய்யும் பொருளாகக் கூற, சைவசித்தாந்தம் அதனை உயிர்கட்கு நன்மை செய்யும் பொருளாகக் கூறுதல் அறியத்தக்கது.

இவ்வொரு குறளால், ஆணவம் ஒழிந்த ஏனைய மாயை கன்மங்களாகிய இரு மலங்களின் இயல்பும் தொகுத்துக் கூறப்பட்டன.

நான்காம் அதிகாரம்

## அருளது நிலை

அஃதாவது, இறைவனது திருவருளின் இயல்பு. இது முதல் அதிகாரத்தில் "தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத்தரும்" எனக் கூறப்பட்ட சத்தியது இயல்பேயாம். அங்குக் கூறியவாறு சத்தி இறைவனின் வேறன்றாயினும், மன்னுயிர்களைப் பலவாற்றானும் பக்குவப்படுத்திச் சிவமாந்தன்மையை எய்துவிப்பது அதுவேயாதலின், அதனது இயல்பு இனிது விளங்குதற்பொருட்டு வேறோர் அதிகாரமாக வைத்துக் கூறுகின்றார். இதனானே, மேல் மூன்றதிகாரங்களாலும் பதி முதலிய மூன்று பொருள்களின் இயல்பும் கூறிய பின்னர் இது கூறுதற்குரிய இயைபு இனிது விளங்கும். 'அருளது' என்பதில் அது, பகுதிப்பொருள் விகுதி. நிலை - நிற்கும் முறை.

முதற் குறள்,

31. "அருளிற் பெரிய தகிலத்தில், வேண்டும்
பொருளிற் றலையிலது போல்"

என வரும்.

### இதன் பொருள்

வேண்டும் பொருளின் பெரியது இலதுபோல் – ஒரு செயற்கு இன்றியமையாத பொருளைவிட அவ்விடத்திற்குச் சிறந்த பொருள் வேறு எதுவும் இல்லாமை போல; அருளின் பெரியது அகிலத்து இல் – இறைவனது திருவருளைவிடச் சிறந்து நிற்பதொரு பொருள் எவ்விடத்தும் இலதாம்.

விளக்கவுரை

என்றது, 'எப்பொருட்கும் இன்றியமையாததாய் நிற்பது திருவருள்' என்றவாறு. வேண்டுதல், இங்கு இன்றியமையாமை. வேண்டும் பொருளின் தலையாயது இன்மையாவது, ஒரு செயல் நிரம்புதற்கு வேண்டப்படும் பொருள் மிகச் சிறியதேயாயினும் அதனாலன்றி அச்செயல் நிரப்பப்படாமை. அதனை, அச்சாணி மிகச் சிறிய தேயாயினும் அதனாலன்றித் தேர் ஓடுதல் நிரம்பாமையும், சுவைபட அடும் அடிசிற்கு வேண்டப்படும் உப்பு மிக எளியதேயாயினும் அதனாலன்றி அடுதல் தொழில் நிரம்பாமையும் போல்வனவற்றில் வைத்துக் கண்டு கொள்க. 'இலது' என்பது அப்பண்பின்மேல் நின்றது.

இதனால், எப்பொருளும் அருளையின்றி அமையாமை கூறப்பட்டது.

இரண்டாவது குறள்,

32. "பெருக்க நுகரவினை பேரொளியாய் எங்கும்
அருக்கனென நிற்கும் அருள்"

என வரும்.

இதன் பொருள்

அருக்கன் என — உலகில் உள்ளோர் தொழில் செய்தலும், அவற்றின் பயனைத் துய்த்தலும் நிகழுமாறு பகலவன் புறப் பேரொளியாய் எங்கும் பரவி நிற்றல்போல; அருள் — இறைவனது திருவருள்; வினைபெருக்க நுகர — உயிர்கள் இருவினைகளை ஈட்டுதலும், அவற்றின் பயனை நுகர்தலும் நிகழுமாறு; பேரொளியாய் எங்கும் நிற்கும் — அகப் பேரொளியாய் எங்கும் நிறைந்து நிற்கும்.

**விளக்கவுரை**

பொருட்கண் உள்ள அடைவினைகட்கு ஏற்ற அடைவினைகள், உவமைக்கண்ணும் வருவித்து உரைக்கப்பட்டன. 'புறம், அகம்' என்பன ஆற்றலால் வந்தன. அக ஒளியாவது, அறியாமை யிருளைப் போக்குகின்ற அறிவு. "அறிவாகி எங்கும் நிறைந்து நிற்கும்" என முதற்குறளிலே கூறினார்.

இதனால், 'இருளால் மறைக்கப்பட்ட கண்ணினையுடை யார்க்குப் பகலவனை இன்றி யாதொரு தொழிலைச் செய்தலும், அவற்றின் பயனைத் துய்த்தலும் கூடாமைபோல, ஆணவ மலத்தால் மறைக்கப்பட்ட அறிவினையுடைய உயிர்கட்கு இறைவனது திருவருளையின்றி யாதொரு வினையையும் ஈட்டுதலும், அதன் பயனை நுகர்தலும் கூடா' என, அருள் இன்றியமையாதவாறு தெரித்துக் காட்டுமுகத்தால், அதனது பயன் கூறப்பட்டது. இவ்வாற்றான் இங்கு 'அருள்' என்றது திரோதானத்தை என்பது விளங்கும்.

மூன்றாவது குறள்,

33. "ஊனறியா தென்றும்; உயிரறியா தொன்றும்; இவை
தானறியா தாரறிவார் தாம்"

என வரும்.

**இதன் பொருள்**

ஊன் என்றும் அறியாது – உடம்பு ஒருகாலத்தும் அறிவுடையதாதல் இல்லை; உயிர் ஒன்றும் அறியாது – உயிரும் உடம்பு இல்லாதபொழுது ஒன்றையும் அறியமாட்டாது; (ஆகவே) இவை தான் அறியாது ஆர்

அறிவார் — இவ்விரண்டனையும் அருள் அறிந்து கூட்டுவியாமல் வேறுயாவர் அறிந்து கூட்டுவிப்பார்!

### விளக்கவுரை

ஆகவே, 'அருள் உண்மை நன்கு துணியப்படும்' என்பதாம். இஃது ஒழிபளவை. (பாரிசேடப் பிரமாணம்.) தாம், அசைநிலை.

இதனால், அருள், அருக்கன்போல நின்று உயிர்களையும், உலகத்தையும் கூட்டிச் செயற்படுத்துதல் கூறுமுகத்தால், அதன் உண்மை நிறுவப்பட்டது.

நான்காவது குறட..

34. "பாலாழி மீனாளும் பான்மைத் தருளுயிர்கள்
மாலாழி யாளு மறித்து"

என வரும்.

### இதன் பொருள்

அருள் உயிர்கள்; திருவருளாகிய கருப்பஞ்சாற்றுக் கடலிலே உள்ள உயிர்கள்; மறித்து மால் ஆழி ஆளும் — அதனை நுகர அறியாது மீள மீள மாயையாகிய மதுக்கடலையே நுகரும்; மீன் பால் ஆழி ஆளும் பான்மைத்து (இது) பாற்கடலிலே உள்ள மீன்கள் அப் பாலை நுகர அறியாது அதில் உள்ள சிற்றுயிர்களை நுகரும் தன்மையை ஒப்பது.

### விளக்கவுரை

அஃதாவது, 'அறியாமைப்பாலது' என்பதாம். "மால்" என்பது மயக்கத்தைத் தரும் மதுவைக் குறித்தலுடன், மாயையின் மேலும் நோக்குடைத்தாய் நின்றது. அவ்வாற்றான் மாயையை, 'மதுக்கடல்' எனக்

கூறவே, 'திருவருள் கருப்பஞ்சாற்றுக்கடல்' என்பதும் தானே பெறப்பட்டது. இங்குக் குறிக்கப்பட்ட அறியாமை யாவது, உயர்ந்ததனை இழிந்ததெனவும், இழிந்ததனை உயர்ந்ததெனவும் உணரும் திரிபுணர்வு. இதனை, 'விபரீத ஞானம்' என்பர்.

'உடம்பைப் பெறாதபொழுது உயிர் ஒன்றையும் அறியாதாயினும், உடம்பைப் பெற்றபின் எல்லா வற்றையும் அறிந்து அனுபவிக்கின்ற உயிர், வினையைப் பெருக்க நுகரப் பேரொளியாய் எங்கும் அருக்கன் என நிற்கும் திருவருளை அறிந்து அனுபவியாமை என்னை' என்னும்ஐயத்தினை உட்கொண்டு, 'உடம்பைப் பெற்ற பின்னும் உயிர்கட்கு மயக்க உணர்வே உளதாதலின் அது கூடாதாயிற்று' எனக் கூறியவாறு "ஊமன்கண் போல" என்னும் குறட்கு, உயிர்களின் அறியாமை யாகிய சிறுமை கூறுதல் கருத்தெனவும், இதற்கு அவற்றது மயக்க உணர்வாகிய சிறுமை கூறும் முகத்தால் திருவருளின் பெருமை கூறுதல் கருத்தெனவும் தெரிந்துணர்ந்து கொள்க.

இதனால், திருவருள், உலகம்போல மாசுடையதும், சிற்றின்பத்ததுமாகாது, தூயதும், எல்லைஇல் இன்பத்தது மாதல் கூறப்பட்டது.

ஐந்தாவது குறள்,

35."அணுகு துணையறியா ஆற்றோனில் ஐந்தில்
உணர்வை உணரா உயிர்"

என வரும்.

**இதன் பொருள்**

அணுகு துணை அறியா ஆற்றோனில் - தனக்குக்

காவலாகத் தன் பின்னே வருகின்ற துணைவனைத் திரும்பிப் பாராது அச்சத்தால் நடுக்கமுற்றுச் செல்லும் வழிப் போக்கன் போலவும்; ஐந்தில் — தம்மை உள்நின்று செலுத்தும் உயிரை உணரமாட்டாத ஐம்பொறிகளைப் போலவும் — உயிர் உணர்வை உணரா — உயிர்கள் பேரறிவே வடிவான திருவருளை உணராது துன்பமுறும்.

### விளக்கவுரை

திருவருளை உணர்ந்தவழித் துன்பம் இலதாதலை உணர்த்துதற்கு, எதிர்மறை வகையால் அணுகு துணை அறியா ஆற்றோனை உவமை கூறியவழி, 'அணுகு துணைவன் ஆற்றோனின் வேறாகலின், ஆற்றோன் அத்துணைவனை அறியானாவன்; திருவருள் அவ்வாறின்றி எங்கும் எவையும் எரியுறு நீர்போல் ஏகமாய்த் தங்கி நிற்றலின், அதனை உயிர்கள் அறியா என்றல் பொருந்துமாறு என்னை என்னும் ஐயத்தை அகற்றுவதற்கு ஐம்பொறிகளை உவமை கூறினார். உயிர் உணர்வுடைய தாயினும், புறவுணர்வை மட்டுமே உடையதாய் அகவுணர்வை இழந்து நிற்றற்கண் ஐம்பொறிகளோடு ஒக்கும் என்பதாம்.

*"விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்*
*களந்தறிந் தறியா ஆங்கவை போலத்*
*தாம்தம் உணர்வின் தமியருள்"*

(சிவஞானபோதம், சூத்திரம் - 5)

என்றார் மெய்கண்டதேவர்.

இதனால், திருவருள், உயிர்கட்குத் தோன்றாத் துணையாய் நின்று உதவுதல் கூறப்பட்டது.

ஆறாவது குறள்,

36. "தரையை யுணராது தாமே திரிவார்
புரையை உணரா புவி"

என வரும்.

**இதன் பொருள்**

தரையை உணராது தாமே திரிவார் — (நிலத்தின் கண் வாழ்வோர் அதன்கண் வாழ்ந்தும்) தம்மைத் தாங்கி நிற்பது நிலம் என்பதனை நினையாமல் தாமே வாழ்க்கையில் திளைத்து நிற்பர்; (அதுபோல்) புவி புரையை உணரா — உயிர்கள் திருவருளால் எல்லாவற்றையும் பெற்று நின்றும், அவற்றைத் தருவது திருவருள் என்பதனை உணராது பெற்றவற்றிலே அழுந்தி நிற்கும்.

**விளக்கவுரை**

இஃது எடுத்துக்காட்டுவமை. இங்கு 'எல்லாம்' என்பது, உலகியல் பற்றி வருவனவற்றையே; என்னை? மெய்ந்நெறி பற்றி வருவனவற்றை அறியும் உயிர் திருவருளை மறத்தல் இல்லையாகலின். புரை, கரப்பிடம். அஃது ஆகுபெயரால் அவ்விடத்து உள்ள பொருளைக் குறித்தது. கரப்பிடம் இங்குப் பாசத் திரைக்கு அப்பாலுள்ள இடம். இனி, புரை உயர்வுமாம். 'புரைய' என்பது பாடமாயின், "திருவருளை" என்பது அதிகாரத்தால் வருவித்துத் தொழிலுவமமாக உரைக்க. "புவி" என்றது உலகம் என்னும் பொருட்டாய்க் கட்டுற்று நிற்கும் உயிர்களைக் குறித்தது.

இதனால், திருவருள் உயிர்களை எஞ்ஞான்றும் தாங்குவதாதல் கூறப்பட்டது.

ஏழாவது குறள்,

37. "மலைகெடுத்தோர் மண்கெடுத்தோர்
வான்கெடுத்தோர் ஞானந்
தலைகெடுத்தோர் தற்கேடர் தாம்"

என வரும்.

**இதன் பொருள்**

ஞானம் தலைகெடுத்தோர் – திருவருள் உணர்வை இழந்தவர்; மலை கெடுத்தோர் மண் கெடுத்தோர் வான் கெடுத்தோர் – தமக்கு அரணாய் உள்ள மலையை இழந்தவரோடும், விளைவைத்தரும் நிலத்தை இழந்த வரோடும், மறுமையில் அடையும் நற்கதியை இழந்த வரோடும் ஒப்பர்; (ஆகவே) தாம் தற்கேடர் – அவர் தாமே தமக்குக் கேடுசெய்து கொள்பவராவார்.

**விளக்கவுரை**

'கெடுத்தோர்' மூன்றும் உவமை ஆகுபெயர். அம் மூன்றனாலும் முறையே, திருவருளை உணராமையால் வினைத் துன்பம் வந்து பற்றுதலும், மெய்யுணர்வு பிறவாமையும், வீடு பெறுதல் கூடாமையும் குறிப்பால் உணர்த்தப்பட்டன. "ஞானம்" என்றது திருவருள் உணர்வை என்பது ஏற்புழிக் கோடலால் விளங்கிற்று. "தலைகெடுத்தோர்" என்பது ஒருசொல் தன்மைத்து. "தற்கேடர்" என்பது பெயரளவாய் நிற்றலின் பால்வழு வாகாதாயிற்று.

இதனால், திருவருளை மறத்தலின் குற்றம் தொகுத்துணர்த்தப்பட்டது.

எட்டாவது குறள்.

38. "வெள்ளத்துள் நாவற்றி எங்கும் விடிந்திருளாம்
கள்ளத் தலைவர் கடன்"

என வரும்.

### இதன் பொருள்

கள்ளத் தலைவர் கடன் – பொய்த்தலைவராகிய உயிர்களது செயலால்; வெள்ளத்துள் நா வற்றி – நிறைந்த நீரிலே நின்றும். நீர் வேட்கையால் நா வறண்டு நிற்றலும், விடிந்து எங்கும் இருள் ஆம் – பொழுது புலர்ந்து பகலவன் தோன்றிய பின்பும் இருளே நிறைந்திருத்தலும் ஆகிய பயன்களே உளவாவனவாம்.

### விளக்கவுரை

"வற்றி" என்னும் வினையெச்சம் எண்ணின் கண் வந்தது. 'நாவற்றியாங்கு' எனப் பாடம் வேறாகவும் ஓதுவர். "விடிந்து" என்பது, 'விடிய' என்பதன் திரிபு. 'விடிந்தும்' என்னும் உயர்வு சிறப்பும்மையும், 'கடனால்' என்னும் உருபும் தொகுத்தலாயின. "நாவற்றி" எனவும். "இருளாம்" எனவும் வந்தவை ஒட்டணியாய் நின்று, 'நிறைந்த இன்பத்துள் நின்றும் அதனை நுகரமாட்டாது துயருறும் நிலையே உண்டாகும்' என்னும் பொருளைக் குறித்தது. 'பொய்த்தலைவர்' என்றது, யாதொரு செயற்கும் தாம் முதல்வராகாது சுதந்திரம் சிறிதுமின்றி இருக்கவும், எல்லாவற்றுக்கும் தாமே முதல்வர் எனக் கூறிக் கொள்ளுதலை. 'கடனால்வற்றி ஆம்' என இயைத்து முடிக்க. 'திருவருளை மறத்தலால் கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாதது போல்வதோர் இழிநிலை உயிர்கட்கு உளதாயிற்று' என்றவாறு. இவ் இழிநிலை ஆணவ மலத்தொடர்பினாலே உண்டாயது என்க.

ஒன்பதாவது குறள்,

39. "பரப்பமைந்து கேண்மின்இது பாற்கலன்மேற் பூஞை
கரப்பருந்த நாடுங் கட"

என வரும்.

### இதன் பொருள்

பரப்பு அமைந்து கேண்மின் – திருவருளை மறந்து தற்போதத்தால் ஐம்புலனை நுகர்தற்கு விரைகின்ற விரைவு அடங்கி, அருளாசிரியர் தம் அருள்மொழியைக் கேட்டு அதன் வழி நில்லுங்கள்; இது பாற்கலன்மேல் பூஞை பரப்பு அருந்த நாடும் கடன் – நீவிர் கொள்ளுகின்ற இவ் விரைவு, பாலையுடைய பாண்டத்தின் மேல் அமர்ந்திருக்கின்ற பூனை அந்தப் பாலை உண்ண நினையாமல், அப்பால் இருக்கும் கரப்பான் பூச்சியைப் பிடித்து உண்ணுமாற்றை ஆராய்கின்ற செயல் போல்வது ஆகலான்.

### விளக்கவுரை

"எண்ணம் முற்றிய வழியும் நிரம்புதல் இன்மையும், முற்றாத வழி இரண்டனையும் ஒருங்கிழத்தலும் உளவாமாதலின், அவ்வெண்ணம் கொள்ளத் தக்கதன்று' என்பது அவ்வுவமையாற் பெறப்படுவது. விரைவு, மனோவேகம். கேட்டலுக்குச் செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது. கேட்டல், இங்கு அதன்வழி நிற்றலின்மேற்று. 'நிற்பின்' நிலைத்த பெரும்பயனைப் பெறுவீர்கள்' என்பது குறிப்பெச்சம். பூனை பாற்கலன்மேல் இருத்தல் கூறினமையால் கரப்பு அப்பால் உள்ளதென்பது பெறப்பட்டது. 'பூசை' என்பதும் பாடம். திருவருளை மறத்தலால் உயிர்க்கு வீண் துன்பம் உளதாகின்றது என்றவாறு.

பத்தாவது குறள்,

40. "இற்றை வரைஇயைந்தும் ஏதும் பழக்கமிலா
வெற்றுயிர்க்கு வீடு மிகை"

என வரும்.

**இதன் பொருள்**

இற்றைவரை இயைந்தும் — அன்று தொட்டு இன்று காறும் திருவருளோடு கூடியிருந்தும்; ஏதும் பழக்கம் இலா வெற்றுயிர்க்கு — சிறிதும் அதனோடு பழகுதல் இல்லாத வீணான உயிருக்கு; வீடு மிகை — துன்பத்தினின்றும் நீங்குதல் வேண்டாததேயாம்.

**விளக்கவுரை**

"இற்றைவரை" என்றதனால், 'அன்று தொட்டு' என்பது போந்தது. அன்று - அனாதி. பழகுதல் - அறிந்து நிற்றல், வெறுமை, செயற்பாலதனைச் செய்யாமை. துன்பம், பிறவியாகிய பெருந்துன்பம். வீடு, 'விடுதல்' ஆதலின், அதற்குச் செயப்படுபொருள் துன்பமாயிற்று. 'மிகை' என்றது, அடையவாராமை பற்றி. எனவே, திருவருள் உணர்வின்றிப் பிறவித் துன்பத்தினின்றும் நீங்குதல் கூடாமை கூறிய வாறாயிற்று.

இவை மூன்று குறள்களாலும் திருவருளை மறத்தலின் குற்றம் வகுத்துக் கூறப்பட்டது.

ஐந்தாம் அதிகாரம்

## அருளுரு நிலை

அஃதாவது, அருள்பண்ணும் திருமேனியது இயல்பு. அருள் உரு, வினைத்தொகை. 'அருளுதல்' என்றது முதல்வன் செய்யும் ஐந்தொழில்களில் இறுதிக்கண்ணதாகச் சொல்லப்படுவதனை. 'அருளுரு' என்பதற்கு இவ்வா றன்றி, 'அருட்டிருமேனி' என உரைப்பின் அது, படைத்தல் முதலியவற்றின் பொருட்டுக்கொள்ளும் திருமேனிகட்கும் பொதுவா மாதலின், இவ்வதிகாரப் பெயர்க்குச் சிறப்பாகாமை யறிக. மேல், 'அருளை உணர்தல் உயிர் கட்கு இன்றியமையாதது' எனக் கூறி, இதனுள் அதனை உணருமாறு கூறலின், முன்னையதிகாரத்தோடு இயை புடைத்தாயிற்று.

முதற்குறள்,

41. "அறியாமை உள்நின் றளித்ததே காணும்
குறியாகி நீங்காத கோ"

என வரும்.

### இதன் பொருள்

காணும் குறியாகி நீங்காத கோ — பக்குவம், உற்ற பொழுது கண்ணால் அறியத்தக்க பொருளாகி வெளிவந்து நீங்காது உடனாய் நிற்கின்ற அருள் தலைவன்; அறியாமை உள் நின்று அளித்ததே — பக்குவம் உறாதபொழுது எவ்வாற்றானும் அறியாதவாறு உயிர்க்குயிராய் உள்ளே மறைந்து உயிர்க்கு அறிவைக் கொடுத்துவந்த பொருளே; பிறிதல்லன்.

**விளக்கவுரை**

'அப்பொருள் முதற் பொருள்' என்பது வெளிப்படை. "அறியாமை" என்றது எதிர்மறை வினையெச்சம். அளித்தல் - கொடுத்தல்; இங்கு வளர்த்தலின் மேற்று. அதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. "குறி" என்றது, "புலன்" என்றவாறு. "கோ" என்றது ஏற்புழிக்கோடலால் அருள் தலைவனைக் குறித்தது. அருள் தலைவனாவான், திருவருளைத்தெளிய உணர்த்தும் தலைவன். இவனே 'ஞானாசிரியன்' எனப்படுபவன் என்க. இவனை, 'காணும் குறியாகி நீங்கான்' என்றதனால், 'அங்ஙனம் தோன்றி வந்து உடனின்று உணர்த்தித் தெளிவித்தாலல்லது உயிர்கள் திருவருளைத் தெளிய மாட்டா' என்பது பெறப்பட்டது. 'பொருள்' என்பது இருதிணைக்கும் பொதுவாதலின், 'அளித்தது' என்பது 'அளித்த பொருள்' என்னும் பொருட்டாய், "கோ" என்பதனோடு இயைந்தது. ஏகாரம், தேற்றம். (இனி "கோ" என்பது அஃறிணை வாய்பாடு எனினும் ஆம்.)

இதனால் 'திருவருளை உணர்த்தும் ஞானாசிரியன் சிவமே' என்பது கூறப்பட்டது.

*"குருவே சிவம்எனக் கூறினன் நந்தி"*

(திருமந்திரம் 6ம் தந்திரம்)

*"தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த"*

(சிவஞானபோதம் சூ.8)

என்பவற்றைக் காண்க.

இரண்டாவது குறள்,

42. "அகத்துறுநோய் உள்ளின ரன்றி அதனைச்
சகத்தவருங் காண்பரோ தாம்"

என வரும்.

**இதன் பொருள்**

அகத்து உறு நோய் — இல்லத்தில் உள்ளார்க்கு உற்ற நோயினது நிலையை; உள்ளினர் அன்றி — இல்லத்தினுள் உறைபவர் அறிதலன்றி; அதனைச் சகத்தவரும் காண்பரோ — அதனை வெளியில் உள்ள பிறர் அறிவரோ; அறியார்.

**விளக்கவுரை**

'அதுபோல உயிரின் அகத்துப் பொருந்தி நிற்கும் அறிவின் பிணியாகிய அறியாமை நிலையை உயிர்க்குயிராய் அதனுள் நிற்கின்ற முதல்வன் அறிதலன்றிப் பிறர் அறிய வல்லுநரல்லர்' என்னும் பொருள்தோன்ற நிற்றலின் இஃது ஒட்டணி. 'அறியாமை தேயாத பொழுது அருளை உணர்த்துதலும் குற்றம்; அது தேய்ந்தபின் உணர்த்தாமையும் குற்றம்; ஆதலால், அறியாமை தேய்ந்த நிலையை உணர்ந்து வந்துஅதனை உணர்த்தும் ஞானாசிரியன், உயிர்க்குயிராய் நிற்கும் சிவனேயன்றிப் பிறன் அல்லன்' என்பதாம். தாம், அசைநிலை.

நிரம்ப அழகிய தேசிகர் 'நோய்க்கு' என்பது உருபு மயக்கம் என உரையாமையாலும், 'அறியவல்லரோதாம்' எனப் பொருள் உரைத்தமையானும், 'நோய்க்கு, தான்' என்பன'பாடம் ஆகாமை யறிக.

இதனால் 'ஞானகுரு சிவமேயாதல் பொருந்துமாறு பற்றித் தெளிவிக்கப்பட்டது.

மூன்றாவது குறள்,

43. "அருளா வகையால் அருள்புரிய வந்த
பொருளா அறியா புவி"

என வரும்.

### இதன் பொருள்

அருளா வகையால் அருள் புரிய வந்த பொருளா — நேர் நின்று அருளாமல் குருவடிவில் மறைந்து நின்று அருள் புரிய நினைத்துவந்த முதற் பொருளாக; புவி அறியாஞான குருவை உலகம் உணரமாட்டாது.

### விளக்கவுரை

நிரம்ப அழகிய தேசிகர் கொண்ட பாடம் இதுவே, என்பதனை அவரது உரை நோக்கித்தெளிக. 'ஞான குருவை' என்பது அதிகாரத்தால் வந்தது. 'அறியாது' என்பது ஈறு தொகுத்தலாயிற்று. 'பொருள் ஆர் அறிவார் புவி' என்பது பாடமாயின், 'பொருள்' என்பதற்கு, 'கருத்து' என உரைக்க. அவ்வழி, 'புவிக்கண்' என உருபுவிரித்தும், 'உலகோர்' என்னும் எழுவாய் வருவித்தும் கொள்ளப்படும். கருத்தாவது, 'உண்மை வடிவில் தோன்றின் மக்கட் பிறப்பினராய மாணாக்கர் அஞ்சி யகல்வர்' எனக் கருதுதல். இக்கருத்து இங்குக் கொண்ட பாடத்தில் உடம்பொடு புணர்த்தலால் பெறப்பட்டது. இக்கருத்தினால் குருவடிவில் மறைந்து நின்று அருளுதலையே, "மானைக் காட்டி மானைப் பிடித்தல்" என்பர். இவ்வுவமை இனி இவ்வதிகாரத்துள்ளும் கூறப்படுதல் காண்க. 'இறைவன் தனது உண்மை வடிவில் தோன்றின் மக்கள் அதனைக் காணவும், அணுகவும் மாட்டாது அஞ்சி யகல்வர்' என்பதனை நக்கீரர்,

*"அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்*
*மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி"*
(திருமுருகாற்றுப்படை - 289, 90)

என்பதனால் குறித்தார்.

*"கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி*
*மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும் — வெண்ணெய்நல்லூர்*
*மெய்கண்டான்"*

என்பது முதலியவற்றான் அறிக.

இதனால், 'ஞானாசிரியன் சிவமேயாதல் சத்திநிபாதர்க் கன்றி விளங்காது' என்பது கூறப்பட்டது.

நான்காவது குறள்,

44. "பொய் இருண்ட சிந்தைப் பொறியிலார் போதமாம்
மெய்யிரண்டுங் காணார் மிக"

என வரும்.

**இதன் பொருள்**

பொய் இருண்ட சிந்தைப் பொறியிலார் — இல்லது போல நிற்பதாகிய ஆணவமல மறைப்பால் அறியாமையே வடிவான அறிவினை யுடையராகிய பக்குவம் இல்லாதவர்; போதம் ஆம் மெய் இரண்டும் — ஞானமும், அந்த ஞானமேயான குருவடிவும் ஆகிய இரண்டனையும்; மிகக் காணார் — முற்றவும் அறிய மாட்டார்.

**விளக்கவுரை**

'ஆகவே, அவர்கட்கு அவ்விரண்டனது மெய்ம்மையும் விளங்கமாட்டா' என்பதாம். "பொய் இருண்ட" என்றது, வினையொடு தொக்க மூன்றாவதன்

தொகை. பொய் - பொய்ப் பொருள்; ஆகுபெயர். புலனாகாமையால் பொய்ப் பொருளோடு ஒத்தல் பற்றி ஆணவ மலத்தை, "பொய்" என்றார். "பொய்யிருள் கடிந்த மெய்ச்சுடரே" (கோயில் திருப்பதிகம் - 3) எனத் திருவாசகத்தும் வந்தது. பொறி - நல்லூழ்; அஃது இங்குத் திருவருளைப்பெறும் பக்குவத்தைக் குறித்தது. "ஆம்மெய்" என்பதனை, 'அதுவேயாம் மெய்' என வேறாக எடுத்துக் கொண்டு உரைக்க. 'மிக' என்பது எதிர்மறையைச் சிறப்பித்தது.

இதனால், ஞானாசிரியரது பெருமை சத்திநி பாதர்க்கன்றி அறியலாகாமைக்குக் காரணம் கூறப்பட்டது. அதனானே ஞானம் அவர்கட்கு எய்தாமையும் உடன் உணர்த்தப்பட்டது.

ஐந்தாவது குறள்.

45. "பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் காணா புவி"

என வரும்.

### இதன் பொருள்

பார்வை என — காட்டில் உள்ள விலங்குகளைக் கைப்பற்றித் தம்முடையனவாகச் செய்துகொள்ளுதற்கு வாயிலாக வேடர் பழக்கி வைத்திருக்கும் "பார்வை, விலங்கு" எனப்படும் அவ்வவ்வினத்து விலங்குகள் போல, மாக்களை முன் பற்றி பிடித்ததற்கு ஆம் போர்வை என — பக்குவான் மாக்களை முன்பு தனக்கு ஆளாகக் கொண்டு பின்பு தன்பால் அடக்கிக்கொள்ளுதற் பொருட்டு இறைவன் தன்னை மறைத்துக்கொண்டுவரும் வடிவமே என்று புவி காணா — உலகத்தவர் ஞான குருவின் உண்மையை இவ்வாறு உணர மாட்டார்.

**விளக்கவுரை**

உவமைக்கும் ஏற்புடைத்தாக 'ஆன்மாக்கள்' என்பதனைத் தலைக்குறையாக ஓதினார்.

பார்வை விலங்குகள் தோற்றத்தால் ஏனை விலங்குகளுள் ஒன்றாய் நின்று அவற்றை அழைக்குமாயினும், அவை உண்மையான் அவற்றுள் ஒன்றாகாது வேறாதல் போல, ஞானகுருவும், தோற்றத்தால் நம்மனோருள் ஒருவனாய் நின்று நம்மோடு அளவளாவினும், உண்மையான் அவன் நம்மினும் வேறானவனே என்பதாம். இவ்வுவமையானே, குருவடிவம் பக்குவான்மாக்கள் அச்சமின்றி அணுகுதற்கு வாயிலாதலும் உணர்த்தப்பட்டது.

இதனால், குரு சிவமேயாதல், உவமை யளவையின் வைத்துத் தெளிவிக்கப்பட்டது. இதனானே, 'மானைக்காட்டி மானைப்பிடித்தல் போல' என்னும் வழக்கின் பொருளை இனிதுணர்ந்து கொள்க. மான் - மா; காட்டுவிலங்கு.

ஆறாவது குறள்,

46. "எமக்கென் எவனுக் கெவைதெரியும் அவ்வ
தமக்கவனை வேண்டத் தவிர்"

என வரும்.

**இதன் பொருள்**

எவனுக்கு எவை தெரியும் — எவன் ஒருவனுக்கு எவை தெரியுமோ; அவ்வ தமக்கு அவனை வேண்ட — அவை தமக்குத் தெரிதற் பொருட்டு அவனது துணையை வேண்டி

நிற்றல் எவ்விடத்தும் உள்ள இயல்பாக; எமக்கு தவிர் என் — ஞானத்தை உணர விரும்பும் எமக்கு. ஞானகுருவின் துணையைத் தவிர்தல் என்னாம்!.

**விளக்கவுரை**

'என்னாம்' என்றது, 'பேதைமையாம்' என்றபடி, 'அவ்' என்னும் வகரஈற்றுப் பெயர், அகரம் ஏற்றி ஒற்று விரிக்கப்பட்டது. 'அவ்வை' எனப்பாடம் ஓதி, அவை' என்பது விரித்தலாயிற்று' எனினும் ஆம், தவிர், முதனிலைத் தொழிற்பெயர். இதனைப் பூட்டு வில்லாக, மேலே கூட்டி உரைக்க.

'யாதோர் அறிவையும் அதனைப் பெற்றுடையோரால் பெறுதலே உயிரினது இயல்பு என்பது கண்கூடாயிருக்க, பேரறிவாகிய மெய்யுணர்வு, ஆசானை இன்றியே பெறப்படும் என்றல் அறியாமை' என்பது இக்குறளின் தெளி பொருள். எனவே, ஆசானையின்றிப் பெறப்படும் உணர்வு திரிபுணர்வாய்க் கேடு பயப்பதாதல் பெறப்பட்டது.

இதனால் திருவருட்பேறு அருளாசிரியனை யின்றி அமையாமை கூறப்பட்டது.

ஏழாவது குறள்,

47. "விடம்நகுலம் மேவினும்மெய்ப் பாவகனின் மீளுங்
கடனில்இருள் போவதிவன் கண்"

என வரும்.

**இதன் பொருள்**

விடம் — பாம்பு தீண்டியதனால் தலைக்கு ஏறிய நஞ்சு; நகுலம் மேவினும் மெய்ப் பாவகனின் மீளும் கடனில் —

பாம்பிற்குப் பகையாய் அதனை அழிக்கவல்ல கீரிதானே வந்து பாம்பு தீண்டப்பட்டவனது உடலின்மேல் – விழுந்து புரண்டாலும் மீளாது. மந்திரத்தால் தன்னைக் கீரியாகப் பாவிக்கவல்ல உண்மை மாந்திரிகனால் மீளும் முறைமை போல; இருள் போவது இவன் கண் – மல இருள் நீங்குவது உள் நிற்கும் சிவனாலன்றிச் சிவமேயாய் நிற்கும் குருவின் திருநோக்கத்தாலாம்.

### விளக்கவுரை

"மேவினும்" என்பதன்பின், 'மீளாது' என்பது எஞ்சி நின்றது. 'இவன்' என அண்மைச்சுட்டாற் கூறியது அதிகார வரவு பற்றி. 'கண்ணால்' என்னும் உருபு தொகுத்தலாயிற்று. 'கண்' என்பதனை உருபாக்கி, 'உருபுமயங்கிற்று' என்றலும் ஆம்.

"எவனுக்கு எவை தெரியும், அவ்வ தமக்கு அவனை வேண்ட" என மேற்கூறியது, உணர்த்துவாரும் உணர்வாரும் தம்முள் வேறு வேறு நிற்பார்க்குப் பொருந்துவது: ஈண்டு உணர்த்துவோன் சிவனே யாதலானும், அவன் உணர்வதாகிய ஆன்ம அறிவினுள் வேற்றுமை யின்றிக் கலந்து நிற்றலானும் வேறு குரு இன்றியே ஞானத்தை உயிர் உணர்தல் கூடுமன்றோ என்னும் ஐயம், இதனால் உவமையில் வைத்து நீக்கப்பட்டது. கருட பாவனைபோல இங்கு இப்பாவனை யைக் கூறினார்.

எட்டாவது குறள்,

48."அகலர்த் தரும் அருளை; ஆர்க்கும்வினை நீக்கும்;
சகலர்க்கு வந்தருளுந் தான்"

என வரும்.

### இதன் பொருள்

தான் — முதல்வன்; அகலர் — மாயா பந்தம் இல்லாதவர் கட்கு; அருளைத்தரும் ஆர்க்கும் வினை நீக்கும் — (குருவாகி வாராமலே) முன்பு உணராதிருந்த — ஞானத்தை, உணராமை மாத்திரையே நீக்கி உணர்வித்தலும், உணராதவாறு பிணித்துள்ள வினைக் கட்டினை நேர்நின்று அறுத்து ஞானத்தை உணர்த்துதலும் செய்வன். சகலர்க்கு வந்து அருளும் — மாயாபந்தம் உடையவர்கட்குக் குருவாகி வந்து, முக்குண வடிவான கருவிகளின் வழியாகப் பிணித்துள்ள வினையை அக்கருவிகளைத் தூய்மை செய்யும் முகத்தான் நீக்கி ஞானத்தை உணர்த்துவன்.

### விளக்கவுரை

'கலை' என்பது குணவடிவாகிய மாயையின் கூறுகளையே குறிப்பாக வைத்து, ஆணவம் ஒன்றையே உடையவர்களையும், ஆணவம், கன்மம் இரண்டை உடையவர்களையும், 'அகலர்' என்றும், 'அவ்விரண்டோடு மாயையும் உடையவர்களை 'சகலர்' என்றும், ஆகமங்கள் கூறும் என்பதும், அவருள், ஆணவம் ஒன்றையே உடையவர்களை 'விஞ்ஞானகலர்' என்றும் ஆணவம் கன்மம் இரண்டை உடையவர்களை, 'பிரளயாகலர்' என்றும் கூறுதலும் ஆகம வழக்கு என்பதும், 'விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என உயிர்கள் மூவகைப்படும் என்பதும், உயிரவை நிலையுள்ளே கூறப்பட்டன. 'அகலர்க்கு' என்பதில் குவ்வுருபு தொகுத்தலாயிற்று. "தரும், நீக்கும்" என்பன முற்றுக்கள். 'ஆக்கும்' என்பது பாடமாகாது. பின்னர் "வந்து" என்றமையால் முன்னர், 'வாராது நின்றே' என்பது

பெறப்பட்டது.

இறைவன் ஆணவம் ஒன்றையே உடைய விஞ்ஞானா கலர்க்கு அவர் தம் பக்குவத்தில் உள்நின்றே அஞ்ஞானத்தைப் போக்கி, மெய்ஞ்ஞானத்தை விளக்கியருள்வன்; ஆணவம், கன்மம் இரண்டை உடைய பிரளயாகலர்க்கு ஒருமுறை தனது இயற்கை வடிவத்துடன் (நாற்றோளும், முக்கண்ணும், கறை மிடறும் ஆகிய வடிவத்துடன்) முன்னின்று அருள் வழங்கி ஞானத்தை உணர்த்துவன்; இறைவன் அஞ்ஞானத்தைப் போக்கி மெய்ஞ்ஞானத்தை அருளுவதே 'தீக்கை' (தீட்சை) எனப்படுகின்றது. அதனால், உள்நின்றும், முன்னின்றும் அருள்புரிதல் 'நிராதார தீக்கை' (ஆதாரத்தைப் பற்றாது செய்யும் தீட்சை) என்றும், குருமூர்த்தி வழியாக ஞானத்தை உணர்த்துதல் 'சாதார தீக்கை' (ஆதாரத்தில் நின்று செய்யும் தீட்சை) என்றும், சொல்லப்படுகின்றன. 'சகலருள்ளும் பக்குவ மிகுதியால் விஞ்ஞான கலர் பிரளயாகலரோடு ஒப்ப நிராதார தீக்கையால் ஞானம் பெறுவோரும் உளர்' என்பது, அறுபான் மும்மை நாயன்மாரது வரலாற்றால் அறியப்படும். விஞ்ஞானாகலர் முதலிய மூவர்க்கும் முறையே தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் வகையில் அருள்புரிவன் என்க.

இக் குறட்பாவிற்கு இங்கு உரைத்தவாறன்றிப் பிறவாறும் உரைப்பர்.

இதனால், 'முதல்வன் குருவாகிவந்து அருள்புரிதல் இவ்விடத்து' என்பது தெரித்துணர்த்தப்பட்டது.

ஒன்பதாவது குறள்,

49. "ஆரறிவார் எல்லாம் அகன்ற நெறிஅருளும்
பேரறிவான் வாராத பின்"

என வரும்.

**இதன் பொருள்**

அருளும் பேரறிவான் வாராத பின் — பாசத் தொடக்கை அறுத்து, ஞானத்தை அருளும் பேராற்றலை உடைய இறைவனே குருவாய் வாரானாயின்; எல்லாம் அகன்ற நெறி ஆர் அறிவார் — பாசம் எல்லாம் நீங்கின பின்பே விளங்குவதாகிய ஞானத்தை யாவர் உணர வல்லார்!

**விளக்கவுரை**

"ஆர் அறிவார்" என்ற வினா, 'அறிவார் ஒருவரும் இல்லை' என்பதை விளக்கி நின்றது. ஞானம், இயல்பாகவே பாசத்துட்பட்ட பிறரால் அறியவாராது என்றற்கு "எல்லாம் அகன்ற நெறி" என உடம்பொடு புணர்த்துக் கூறினார். நெறி, இங்கு வீட்டிற்கு நேரே வாயிலாகின்ற ஞானம். பாசங்களின் ஆற்றல் அறிவில்லன ஆகலின், அவற்றை அறிவே வடிவானவன் இருளை நீக்குகின்ற கதிரவன் போல நீக்குவான் என்றற்கு, "பேரறிவான்" என்றார். "வாராதபின்" என்பது, வினையெச்சமாகிய ஒரு சொல். இறைவன் குருவாகி வந்து ஆறு அத்துவாக்களையும் சோதிக்கின்ற அத்துவ சோதனையால் பாசத்தை நீக்கிப் பின் ஞானத்தை உணர்த்துவன் என்க.

இதனால், நல்லாசிரியனாலன்றிப் பிறரால் ஞானம் உண்டாகாமை கூறப்பட்டது.

பத்தாவது குறள்,

50. "ஞானம் இவனொழிய நண்ணியிடும், நற்கல் – அனல்
பானு ஒழியப் படின்"

என வரும்.

### இதன் பொருள்

நல் கல் பானு ஒழிய அனல் படின் – நல்ல சூரிய காந்தக் கல்லினிடத்துச் சூரியன் இன்றியும் நெருப்புத் தோன்றுதல் உளதாயின்; இவன் ஒழிய ஞானம் நண்ணியிடும் – நல்லாசிரியன் இன்றியும் ஞானம் சிலர்க்குக் கிடைத்துவிடும்.

### விளக்கவுரை

'சூரிய காந்தக் கல்லிடத்துச் சூரியன் இன்றி நெருப்புத் தோன்றுதல் கூடாமை போல, ஞானகுரு இன்றி ஒருவர்க்கும் ஞானம் கிடைக்கமாட்டாது' என்றவாறு. "படின்" என்பது, படாமையைக் குறிக்கும் குறிப்பு மொழியாய் நின்றது. உவமைக்கண் "நற்கல்" என்ற அடையினால், பொருளினும் "நன்மாணாக்கர்" என்பது கொள்ளப்படும். இரண்டிடத்தும் எச்ச உம்மைகள் தொகுத்தலாயின.

இதனால், 'ஒரோவழி, மாணாக்கர் தாமேயாயினும் கல்வியாசிரியர், வேள்வி யாசிரியர் முதலிய பிற ஆசிரியராலாயினும் ஞானத்தை எய்துதல் கூடும்போலும்' என்னும் ஐயம், உவமை முகத்தால் நீக்கப்பட்டது.

ஆறாம் அதிகாரம்

# அறியும் நெறி

அஃதாவது, ஞானகுரு அறிவுறுத்தருளிய அருள் மொழியின் பொருளைச் சிந்தித்து உணரும் முறை. இதனானே முன்னை அதிகாரத்தோடு இவ்வதிகாரத்திற்கு உள்ள இயைபு இனிது விளங்கும்.

முதற் குறள்,

51. “நீடும் இருவினைகள் நேராக நேராதல்
கூடும் இறைசத்தி கொளல்”

என வரும்.

### இதன் பொருள்

நீடும் இருவினைகள் நேராக நேராதல் — ஒன்றின் ஒன்றாய் முடிவின்றித் தோன்றிவருகின்ற இரு வினைகளது பயன்களையும் நுகர்வோன், அவற்றை ஒரு பெற்றியவாக உணர்ந்து திரிவின்றி நிற்குங் காலத்தில்; இறை சத்தி கொளல் கூடும் — இறைவனது திருவருளை அவன் பெறுதல் கூடும்.

### விளக்கவுரை

எனவே, ‘நல்வினைப் பயனாகிய இன்பத்தை, அடையத் தக்கதாகவும், தீவினைப் பயனாகிய துன்பத்தை, விலக்கத் தக்கதாகவும், வேறுபட உணர்ந்து, முறையே அவற்றில் விருப்பும், வெறுப்பும் கொண்டு நிற்கும் வரையில் இறைவன் திருவருளைப் பெறுதல் கூடாது’ என்பது விளங்கிற்று. ‘நேராதல்’ இரண்டில், முன்னது சமமதாதல்; பின்னது உடன்படல். ‘நேராதற் கண்’ என உருபு விரிக்க.

'இரு வினைகளையும் செய்துகொண்டவன் தானே யாகலின், அவற்றுள் ஒன்றன் பயனை விரும்பி ஏற்றலும், மற்றொன்றின் பயனை வெறுத்து நீக்கலும் பேதைமைச் செயல்' என்பது கருத்து.

*"நன்றாங்கால் நல்லவாக் காண்பவர், அன்றாங்கால்*
*அல்லற் படுவ தெவன்"*

(குறள் - 379)

என்றார் திருவள்ளுவ நாயனாரும்.

பழ வினைகள் தம் பயனை வினைக்குங்கால் அவ்விளைவினை முற்குறிகளால் உணருமிடத்து, மேற்கூறியவாறு விருப்பத்தால் இன்பத்தை விரையப் பெறவும், பெற்றபின் அது நீங்காமற் காக்கவும் - அவ்வாறே துன்பத்தைச் சேய்மைக்கண்ணே துரக்கவும், வந்தபின்னும் விரையப் போக்கவும் மனமொழி மெய்களால் செய்யும் முயற்சிகளே பின்னர்ப் புதுவினைகளாய், அடுத்த பிறப்பிற்கு வித்தாய் நிலைபெறுகின்றன. ஆகவே, இவ்வாற்றால் வினைகள் முடிவின்றி வருதலையே, "நீடும் இருவினைகள்' என்றார் என்க.

இரு வினைகளின் பயனை ஒரு பெற்றியவாக நோக்கி, விருப்பு வெறுப்பின்றி நடுவு நிலையாய் நிற்கும் தன்மையே,"இருவினையொப்பு" எனச் சித்தாந்தத்திற் சொல்லப்படுகின்றது.

*"ஆனாச் செல்வத்து வானோர் இன்ப*
*மதுவே எய்தினும் எய்துக ... ...*
*... ... மாணாக் கடுந்துயர்*
*நிரயஞ் சேரினும் சேர்க; உரையிடை*

*ஏனோர் என்னை ஆனாது விரும்பி*
*நல்லன் எனினும் என்க; அவரே*
*அல்லன் எனினும் என்க; நில்லாத்*
*திருவொடு திளைத்துப் பெருவளம் சிதையா(து)*
*இன்பத் தழுந்தினும் அழுந்துக; அல்லாத்*
*துன்பந் துதையினும் துதைக... ...*
*... ... ... ஒன்றினும்*
*வேண்டலும் இவனே; வெறுத்தலும் இவனே"*
(திருமுறை 11. கோயில்நான்மணிமாலை —36)

என்றாற்போல வரும் அருட்டிருமொழிகளை இங்கு நினைவு கூர்க.

உயிர்களின் அறிவை அறியாமையுட் பட்டு மயங்கச் செய்வது ஆணவ மலம். அது நீங்கும் நிலைமையை அடைவது 'மலபரி பாகம்' எனப்படும். அந்த மலபரி பாகத்தின் அறிகுறியே இருவினை யொப்பு. எனவே, இருவினை ஒப்பின் வழி அறியப்படுகின்ற மலபரிபாகம் வந்தபொழுதே, உயிர் உலகத்தை விடுத்து இறைவனது திருவருளை நோக்கத் தலைப்படும். அந்நிலையே "சத்தி நிபாதம்" எனப்படும் என்பது தோன்ற, 'இறை அருள் கொளல்' என்னாமல், "இறை சத்தி கொளல்" என்றார். சத்தியே அருளாதல் அறிக. நிபாதம் - வீழ்தல். தோன்றல், புலனாதல், பதிதல் முதலிய பிற சொற்களாற் கூறாமல், 'வீழ்தல்' எனக் கூறுதல், இந்நிலை வந்தவர்கட்குத் திடீரென ஓரிடத்தில் ஒரு கல் வந்து விழுந்தது போன்றதோர் அதிர்ச்சி உண்டாதல் பற்றியாம்.

இறைவனது அருள் குருவடிவாயும், குருமொழியாயும், குருவினது நோக்கு முதலிய

செய்கையாயும் நிற்கும். அவற்றுள் மொழியாய் நிற்கும் அருளே இக் குறளில் குறிக்கப்பட்டது. எனவே, இருவினை ஒப்பு மலபரிபாகம் இல்லாதார்க்குக் குருமொழி மெய்ம்மொழியாய் நின்று பயன் தருதல் இல்லையாயிற்று.

இதனால், 'அறியும் நெறிக்கு வாயில் இது' என்பது கூறப்பட்டது.

இரண்டாவது குறள்,

52. "ஏகன் அனேகன் இருள்கரும மாயை யிரண்[டு]
ஆகஇவை ஆ[று]ஆதி இல்"

என வரும்.

### இதன் பொருள்

ஏகன் – ஒருவனாகிய இறைவனும்; அனேகன் – பொருளால் பலவாம் தன்மையுடைய உயிர்க்கிழவனும்; இருள் – ஆணவமும்; கருமம் – வினையும்; மாயை இரண்டு – சுத்த மாயை, அசுத்த மாயை என்னும் இரு மாயையும்; ஆக இவை ஆறு ஆதி இல் – ஆக இந்த ஆறு பொருள்கள் தோற்றத்தை உடையன அல்ல.

### விளக்கவுரை

'தோற்றத்தை இல்லன' எனவே, 'அழிவையும் இல்லன' என்பது போந்தது; என்னை? யாது தோற்றம் இல்லது, அஃது அழிவும் இல்லதாகலின். இவ்வாறு, தோற்ற அழிவுகள் இல்லன, 'என்றும் உள்ள பொருள்கள்' (நித்தப் பொருள்கள்) எனப்படும். ஆதி - முதல்; தோற்றம் - ஆதி இன்மை, 'அனாதி' எனப்படும். பொருட் பெற்றிகள் பலவற்றுள், 'ஒன்றாயிருக்கும் தன்மை, பலவாயிருக்குந்

தன்மை' என்பனவும் சிலவாகலின், அத்தன்மைகள் பற்றி, "ஏகன்" என்றும், 'அனேகன்' என்றும் ஓதினார். இறையை, 'இறைவன்' என ஆண்பாலாக வழங்குதல் போல, உயிரை, 'புருடன், உயிர்க் கிழவன்' என வழங்குதலும் வழக்கென்க.

"ஆறு" என்பது முன்னர் அறியப்பட்ட தன்றாகலின், "ஆறும்" என உம்மை பெறாதாயிற்று. உயர்திணை, அஃறிணை இரண்டனையும் தொகுத்துக் கூறுங்கால். "ஆறு" என அஃறிணையாற் கூறியது,

*"பலவயி னானும் எண்ணுத்திணை விரவுப்பெயர்*
*அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே"*

(தொல், சொல் - 51)

என்னும் இலக்கணம் பற்றியது. "ஆதி இல்" எனக் குறிப்பு முற்றாக ஓதினாரேனும், 'ஆதி இல்லன' எனக் குறிப்பு முற்றுப் பெயராக ஓதுதல் கருத்தென்க.

"இவை ஆறு ஆதி இல்" என்றதனால், 'நித்தப் பொருள் ஆறு உள்ளன என உணர்தல் வேண்டும்' என்றதாயிற்று. இது சித்தாந்தத்துட் கொள்ளப்படும் பொருள் உண்மை என்க. பிற சமயத்தவர் இவற்றுள் சிலவற்றையோ, பலவற்றையோ உணரார்.

ஏகன் முதலிய ஆறனுள், இறுதி மூன்றும் 'பாசம்' என ஒன்றாகக் கூறப்படும். முதலதும் இரண்டாவதும் முறையே 'பதி' எனவும், 'பசு' எனவும் படும். பதி - காப்பவன். பசு - கட்டப்பட்டது. பாசம் - கட்டுவது. 'பதி, பசு, பாசம்' எனச் சித்தாந்தத்துட் கொள்ளப்படும் பொருள் மூன்று என்பதனை இங்கு உணர்ந்துகொள்க. இம்மூன்றனது இயல்புகளும் முதல் மூன்று அதிகாரங்களுட் கூறப்பட்டமை காண்க.

இதனால், பொருளுண்மையை உணருமாறு கூறப்பட்டது.

மூன்றாவது குறள்,

53. "செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும்
உய்வா னுளனென் றுணர்"

என வரும்.

### இதன் பொருள்

உய்வான் – (மாணவனே), நீ உய்தி பெறுதற்கு; 'செய்வானும் – வினையைச் செய்பவனாகிய நீயும்; செய்வினையும் – உன்னால் செய்யப்படும் வினையும்; சேர் பயனும் – அவ்வினையின் வழி உன்னை வந்து அடைகின்ற இன்பத்துன்ப விளைவுகளும்; சேர்ப்பவனும் – அவ்விளைவுகளை உன்பால் சேர்ப்பிப்பவனாகிய இறைவனும் (ஆக நான்கு பொருள்களை) உளன் என்று உணர் – 'யான் உடையேன்' என்று உன்னை உள்ளவாறு உணர்வாயாக.

### விளக்கவுரை

"செய்வான்" என்றது முற்குறளில், "அனேகன்" எனப்பட்ட உயிரையும், "செய்வினை" என்றது, "கருமம்" என்றதையும், "சேர் பயன்" என்றது மாயையையும், 'சேர்ப்பவன்' என்றது, "ஏகன்" எனப்பட்ட இறைவனையும் ஆதல் அறிந்துகொள்க. "இருள்" எனப்பட்ட ஆணவம், வினைக்கு ஏதுவாய் அடங்கிற்று. திருவள்ளுவரும் வினையை, "இருள்சேர் இருவினை" (குறள் - 5) என்றார். ஏகன் முதலிய ஆறனையும் இத்தன்மைப் படுத்துக் கூறியது,

'முன்னர் வேறு வேறாகக் கூறப்பட்ட அவை, தம்முள் இம்முறையான் இயைந்து நிற்கும்' என்பது உணர்த்துதற்கு. எனவே, அவை, இவ்வாறு இயைந்து நிற்றலானே பந்தமும், வீடும் ஆகிய நிலை வேறுபாடுகள் நிகழ்கின்றன' என்பதும், 'அவற்றுள் ஒன்று இல்வழியும் அவை நிகழா' என்பதும் போந்தன. 'பசு, பாசம்' என்னும் பெயர்களால் பந்தம் உண்மையும், 'பதி' என்னும் பெயரால் வீடு உண்மையும், அறியப்படும். பந்தம் - கட்டு. வீடு - விடுதலை.

இதனால், மேற்கூறிய ஆறு பொருள்கட்கும் தம்முள் இயைபுணரும் முகத்தால், அவற்றது உண்மையைத் தெளிய உணருமாறு கூறப்பட்டது.

நான்காவது குறள்,

54. "ஊன்உயிரால் வாழும் ஒருமைத்தே ஊனொடுயிர்
தான்உணர்வோ டொன்றாந் தரம்"

என வரும்.

## இதன் பொருள்

ஊனொடு உயிர் – உடம்போடு கூடிநிற்கின்ற உயிர்; தான் உணர்வோடு ஒன்றாம் தரம் – தான் அறிவுவடிவான திருவருளோடு கூடி வாழும் நிலை; ஊன் உயிரால் வாழும் ஒருமைத்து – உடம்பு உயிரோடு கூடி வாழும் ஒற்றுமையோடு ஒப்பதாகும்.

## விளக்கவுரை

"ஊன்" இரண்டும் உடம்பைக் குறித்த ஆகுபெயர்கள். "உயிரால்" என்பதில் ஆல் உருப

உடனிகழ்ச்சிக்கண் வந்தது. உடம்பு உயிரோடு கூடிவாழ்தலாகிய உவமை, 'வாழ்தல்' என்னும் தொழிலும், 'ஒருமை' என்னும் பண்பும் பற்றி வந்தது. எனவே, உடம்புநிலைபெறுதற்கு உயிர் இன்றியமையாததுபோல, உயிரினது அறிவு விளக்கத்திற்குத் திருவருள் இன்றியமையாதது' என்பதும், உயிர் உடம்பில் வேற்றுமையின்றித் தான் அதுவேயாய்க் கலந்து நிற்றல் போலத் திருவருள் உயிரின்கண் வேற்றுமையின்றித் தான் அதுவேயாய்க் கலந்து நிற்கும்' என்பதும் பெறப்பட்டன. இருபொருள், இவ்வாறு பிரிப்பின்றிக் கலந்து நிற்றலே வடமொழியில் 'அத்துவிதம்' எனப்படுகின்றது என்பது மேலே கூறப் பட்டது. 'அத்துவிதம்' என்பதன் பொருளை, 'அந்நியம் இன்மை, அநந்நியம், வேறின்மை' முதலிய சொற்களால் விளக்குவர் அறிந்தோர். 'உடம்பின் உள்ளாக உயிர் தன்னை அறிதல் போலத் தன்னின் உள்ளாகத் திருவருளை அறிதல் வேண்டும்' என்றற்கு 'ஊனொடுயிர்' என்றார்.

இதனால், உயிர்க்குத் திருவருளது துணை எப்பொழுதும் இன்றியமையாதது' எனவும், 'அத்துணை தான் உயிரினிடத்து எப்பொழுதும் பிரிப்பின்றி உடனாய் உள்ளது' எனவும் உணர்தல் வேண்டும் என்பது கூறப்பட்டது.

ஐந்தாவது குறள்.

55. "தன்னிறமும் பன்னிறமும் தானாங்கல் தன்மைதரும்
பொன்னிறம்போல் மன்னிறம்இப் பூ"

என வரும்.

### இதன் பொருள்

மன் நிறம் இப் பூ — இறைவனது திருவருள் இவ்வுலகில் நிற்கும் முறைமை; தன் நிறமும் தாம் ஆம் கல் தன்மை தரும் பொன் நிறம்போல் — தனது நிறத்தையும் பிற பொருள்களின் நிறத்தையும் தன்னிடத்தே காட்டி நிற்கின்ற பளிங்குக் கல்லிற்கு அவை இருதன்மையையும் கொடுக்கின்ற பகலவனது ஒளியின் முறைமைபோல்வதாம்.

### விளக்கவுரை

அஃதாவது, சார்ந்ததன் வண்ணமாகின்ற உயிர்கள் பாசத்தைச் சார்ந்து அவற்றின் தன்மையே தன் தன்மையாகக் காட்டி நிற்கின்ற பெத்த நிலையும், உயிர் பாசங்களின் நீங்கித் தன்னை வேறாகக்கண்டு தன் இயல்பை உணர்கின்ற முத்தி நிலையும் ஆகிய இரண்டினையும் உயிர்கட்குத் தருவது இறைவனது திருவருளே' என்றவாறு. 'இது, சார்ந்ததன் வண்ணமாகின்ற பளிங்குக் கல் பிற பொருளின் நிறத்தைத் தன்னிறமாகக் காட்டி நிற்றல், பிறபொருளோடு சேராது தனது நிறத்தைக் காட்டி நிற்றல் என்னும் இரண்டும் பகலவனது ஒளி இல்லாதபொழுது இயலாமை கொண்டு அறியப்படும்' என்பது உவமையால் உணர்த்தப்பட்டது.

"கல்" என்றது 'பளிங்குக்கல்' என்பது. அதற்குக் கூறப்பட்ட அடைமொழிகளால் விளங்கும். பொன் - பகலவன். மன் - தலைவன்; இறைவன். நிறம் - ஒளி; திருவருள். பூ - பூமி; உலகம். 'பூவின்கண்' என்னும் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. 'பூவின்கண் மன்நிறம்' என்பதை 'பறம்பின்கண் பாரி' என்பது போலக் கொள்க. இதனால், உயிர்கட்குப் 'பெத்தம், முத்தி இரண்டனையும்

தருவது திருவருளே என அறிதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.

ஆறாவது குறள்,

56. "கண்தொல்லை காணும்நெறி கண்ணுயிர் நாப்பண் நிலை
உண்டில்லை அல்ல தொளி"

என வரும்.

### இதன் பொருள்

கண் தொல்லை காணும் நெறி கண் உயிர் நாப்பண் ஒளி நிலை உண்(டு) — கண் தொன்றுதொட்டுப் பொருளைக் கண்டு வரும் முறைமை, கண்ணிற்கும், உயிருக்கும் இடையே ஒளி நிற்றலால் உளதாவது. அல்லது இல்லை — ஒளி அவ்வாறு நில்லாவிடின், கண் காணுதல் இல்லையாம்.

### விளக்கவுரை

"ஒளி" என்பதனை, "நிலை" என்றதற்கு முன்னே கூட்டி, மூன்றாவது விரித்து, 'ஒளி நிலையால் உண்டு' என உரைக்க. 'உயிர் தொன்றுதொட்டு உலகியலை அறிந்து வருகின்ற முறைமை, கருவி கரணங்கட்கும், உயிருக்கும் இடையே திருவருள் நிற்றலால் உளதாவது; திருவருள் அவ்வாறு நில்லாவிடின், உயிர் அறிதல் இல்லையாம்' என்னும் பொருளைத் தோற்றுவித்து நிற்றலால், இக்குறள் ஒட்டணியாய் நின்றது. பெத்த நிலையை இவ்வாறு விளக்கியதனானே, முத்தி நிலையிலும் உயிர்க்குத் திருவருளின் துணை இன்றியமையாததாதல் அறிந்து கொள்ளப்படும்.

இதனால், முன்னைக் குறளில் கூறிய பொருள், மேலும் ஓர் உவமை முகத்தால் வலியுறுத்தப்பட்டது.

ஏழாவது குறள்,

57. "புன்செயலின் ஓடும் புலன்செயல்போல் நின்செயலை
மன்செயல தாக மதி"

என வரும்.

### இதன் பொருள்

புன் செயலின் ஓடும் புலன் செயல்போல் — சிற்றின்பப் பொருள்களின்மேல் செல்கின்ற ஐம்பொறிகளது செயல் அப்பொறிகட்கு முதலாகிய உயிர்களின் செயலேயாய் இருத்தல் போல; நின் செயலை மன் செயலதாக மதி — உனது செயல்களை எல்லாம் உனக்கு முதலாகிய திருவருளின் செயல் என்றே அறிவாயாக.

### விளக்கவுரை

"புன் செயல்" என்பதில், பயனது புன்மை, அதற்கு ஏதுவாகிய செயல்மேல் ஏற்றப்பட்டது. "புலன், மன்" என்பன ஆகுபெயர்கள். முன்னைக் குறளிற் கூறிய உவமை திருவருள் அறிவிக்கும் துணையாதற்கும், இக்குறளில் கூறிய உவமை திருவருள் அறிவித்தலேயன்றி அறிதல் துணையுமாதற்கும் கூறப்பட்டன என்க. திருவருள் உயிருக்கு அறிவித்தும், உயிரின் பொருட்டுத் தான் அறிந்தும் நிற்கும் என்பதை மெய்கண்ட தேவர்,

*"விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்(கு)*
*அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்*
*தாம்தம் உணர்வின் தமி"*

(சிவஞானபோதம் - சூ. 5)

எனவும்.

*"காணும், கண்ணுக்குக் காட்டும் உளம்போல்*
*காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்"*

(சிவஞானபோதம் - சூ. 11)

எனவும் விளக்கியருளினார். "செயலது" என்பதில் அது, பகுதிப் பொருள் விகுதி.

இதனால், திருவருள் காட்டுதலோடு, கண்டும் நிற்றல் ஓர் சிறப்பு உவமையால் வலியுறுத்தப்பட்டது.

எட்டாவது குறள்,

58. "ஓராதே ஒன்றையும்உற் றுன்னாதே நீமுந்திப்
பாராதே பார்த்ததனைப் பார்"

என வரும்.

**இதன் பொருள்**

பார்த்ததனை — மேல், 'ஆறு ஆதி யில்' என்றும், 'செய்வான் முதலிய நான்கும் உளன்' என்றும் உண்மை மாத்திரையானும், உடம்பிற்கு உயிரும், பளிங்கிற்குப் பகலவனும், கண்ணிற்கும் உயிருக்கும் வேறான ஒளியும், ஐம்பொறிகட்கு ஆன்மாவும் என்னும் உவமைகளின் வைத்துச் சிந்திக்கும் சிந்தனையால் பொது வியல்பானும் உணர்ந்த முதற்பொருளை; ஒன்றையும் உற்று ஓராதே — அங்ஙனம் உணர்ந்த பின்பு மேலும் யாதொன்றனையும் பற்றி ஐயுற்று ஆராயாமலும்; உன்னாதே — யாதொன்றையும் பொருளாகப் பற்றி அதன்கண் அழுந்தாமலும்; நீ முந்திப் பாராதே — 'சிந்தனையில் உணர்ந்த முதல்வனை இனி நான் விடாது தொடர்வேன்' என்று உனது போதத்தின் வழிச் சென்று பற்றாமலும்; பார் — அதன் அருளின் வழியே அடைந்து நிற்பாயாக.

### விளக்கவுரை

"ஒன்றையும் உற்று" என்பது தாப்பிசையாய் முன்னும் சென்று இயைந்தது. அங்ஙனம் இயையுங்கால் "உற்று" என்பது முன்னர், 'ஏதுவாக உற்று' எனவும், பின்னர், 'பொருளர்க உற்று' எனவும் பொருள் பயந்தது. ஓர்தல், உன்னுதல், முந்திப் பார்த்தல் என்பவற்றை விலக்கினமையால், "பார்" என்ற விதி அருள்வழிப் பார்த்தலாயிற்று. "ஓராதே" என்றதனால், ஐய உணர்வையும், "உன்னாதே" என்றதனால் விபரீத உணர்வையும் விலக்கி, "பார்" என்றதனால் உண்மை யுணர்வே விதித்தார் என்க. ஏகாரங்கள் தேற்றப்பொருள. 'பார்ப்பதனை' என எதிர்காலமாக ஓதாது, "பார்த்ததனை" என இறந்தகாலமாக ஓதினமையின், அதற்கு, 'எப்பொழுதும் உன்னைப்பார்ப்பதாகிய திருவருளை' என உரைத்தல் கூடாமை யறிக.

இதனால், முதற் பொருளை அறிந்து அடையுமாறு கூறப்பட்டது.

ஒன்பதாவது குறள்,

59. "களியே மிகுபுலனு மாக்கருதி ஞான
ஒளியே ஒளியா ஒளி"

என வரும்.

### இதன் பொருள்

களியே மிக புலனுமாக் கருதி – முதற் பொருளை அருள் வழியாகக் காணுமிடத்து அரும்புகின்ற இன்பத்தையே, மேலாக அடையத்தக்க எல்லையற்ற பேரின்பமாகவும் உணர்ந்து; ஞான ஒளியே ஒளியா ஒளி –

பின்னும் பாசஞான பசு ஞானங்கள் வந்து தலைப்படா வண்ணம் அத் திருவருள் ஞானத்தையே பற்றாகப் பற்றி நின்று, அந்நிலையால் அம் முதற் பொருளில் அழுந்திவிடு.

விளக்கவுரை

"களியே மிகு புலனுமா" என்றதனால் 'முதற் பொருளை அதன் ஞானமே கண்ணாகக் காணுமிடத்து, முன்பு என்றும் கண்டறியாததோர் இன்பம் தோன்றும்' என்பது பெறப்பட்டது. இவ்வாறு பெறவைப்பதனை, 'அனுவாத முறை' என்பர். தோற்ற மாத்திரையான் உளதாகின்ற இன்பமே பின்பு எல்லையற்ற பேரின்பமாய்ப் பெருகித் தன்னைத் தலைப்பட்டவரைத் தன்னுள் அழுந்தக் கொண்டு நிற்குமாகலின், அதனை, 'சிறிது' என்று இகழாது பற்றுக என்பார், "களியே மிகு புலனுமாக் கருதி" என்றும், 'இகழாது பற்றுமிடத்து முன்பு உலக இன்பத்தைப் பற்றியதுபோலப் பாச ஞான பசு ஞானங்களால் பற்றாது, பதிஞானத்தினாலே மேலும் பற்றி 'நிற்க' என்பார், "ஞான ஒளியே ஒளியா" என்றும், 'அந்த ஞானத்தால் அவ்வாறு பற்றி நிற்கவே, தோன்றிய இன்பம் பெருகி உன்னை விழுங்கிவிடும்' என்பார். "ஒளி" என்றும் கூறினார். இன்பம் தோற்ற மாத்திரையால் வெளிப்படுதலை, 'சுகப் பிரபை' (இன்ப ஒளி) என்றும் அது பின் பேரின்பமாய்ப் பெருகி நிற்றலை, 'பரம சுகம்' (முடிந்த இன்பம்) என்றும் கூறுவர். 'இன்பம் தோற்ற மாத்திரையாய் நிற்றல் துரிய நிலையில்' எனவும், 'பேரின்பமாய்ப் பெருகி நிற்றல் அதீத நிலையில்' எனவும் உணர்க.

இதனால், 'முதற் பொருளைத் தலைப்பட்ட உயிர் இன்புறுமாறு அறிதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.

பத்தாவது குறள்,

60. "கண்டபடி யேகண்டு காணாமை காணாமைக்
கொண்டபடி யேகொண் டிரு"

என வரும்.

**இதன் பொருள்**

கண்டபடியே காணாமை காணாமை கண்டு — மாணாக்கனே நீ முதற் பொருளைப் பிறவாற்றாற் கான மாட்டாது வருந்திப் பின் அருள்ஞானங் கண்ணாக அன்றோ கண்டாய்! (அதனால்) பின்னும் அவ்வாறு கண்டு நிற்றலே தக்கது. அங்ஙனங் காணும்பொழுது அறியாமை வந்து தலைப்படாதவாறு காண்; (அங்ஙனம் காணவே, அம்முதற்பொருள் உன்னைத் தன்னிடத்து அடக்கிக் கொள்ளுமாகலின்,) கொண்டபடியே கொண்டு இரு — அது உன்னைக் கொள்ளுகைக்கு இயைந்த நிலையையே நீயும் ஏற்று ஒருப்பட்டிரு.

**விளக்கவுரை**

"ஞான ஒளியே ஒளியா" என மேற்கூறிய தனையே "கண்டபடியே கண்டு" என அனுவதித்தார். அவ்விடத்துக் கருவிகள் நீங்கினமை காரணமாகக் 'கேவலம், வந்து தலைப்படுதல் கூடுமாகலின், அது தலைப்படாதவாறு குறிக்கொண்டு நிற்றல் வேண்டும் என்பது கூறுதற் பயன் நோக்கி. எனவே 'கண்டு' என்பதனை இவ்வாறு கூட்டியுரைத்தலே கருத்தாயிற்று. சிவஞான சித்தியுள்,

*"அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே*
*அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து*
*குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும்*
*கூடாதே வாடாதே குழைந்திருப்பையாயின்"*

(சூ. - 8. 30)

என்றதும் இந்நிலையையேயாம். சித்தியிலே ஓர் விருத்தப்பாதி போதும்" (சிவபோக சாரம் - 23) எனக் கூறியதும் இப்பகுதியை நோக்கியே என்பர். பின் வந்த 'காணாமை' வினையெச்சமாகலின், அதன்பின் ககரம் மிகாது ஓதுதல் பாடமாகாமை யறிக.

இதனால், 'எல்லாவற்றையும் அறியப் பெற்ற உயிர் பிறவற்றை யெல்லாம் விடுத்துப் பேரின்ப நிலை ஒன்றிலே அழுந்தி விடுதல் வேண்டும்' என்பது கூறப்பட்டது.

ஏழாம் அதிகாரம்

# உயிர் விளக்கம்

அஃதாவது அக இருளாகிய மாசினால் மூடப்பட்டுள்ள உயிர் அம் மாசின் நீங்கி விளக்கம் பெறும் முறைமை. இதனை, 'ஆன்ம சுத்தி' என்பர்.

முதற் குறள்,

61. "தூநிழலார் தற்காருஞ் சொல்லார் தொகுமிது போல்
தானதுவாய் நிற்குந் தரம்"

என வரும்.

### இதன் பொருள்

தான் (தூய) அதுவாய் நிற்கும் தரம் — அறியும் நெறியால், மெய்ப்பொருளை உணர்ந்த உயிர், பின், தான் என வேறு நில்லாது அத் தூய மெய்ப்பொருளேயாய் நிற்கும் — நிலை; தூ. நிழல் ஆர்தற்கு ஆரும் சொல்லால் தொகும் இதுபோல் — நிழலை உடைய தூய இடத்தைக் கண்டவன் அவ்விடத்தை அடைதற்கு அவனைப் பிறர் வற்புறுத்தாதிருப்பவும், தான் அகன்று நில்லாது இயல்பிலே சென்று அதனை அடைதல் போல்வதாம்.

### விளக்கவுரை

நிழலை உடைய இடம் தண்ணிதாதல் கூற வேண்டாமையின் அதனை விடுத்தும், தண்ணிதாயினும் அடைதற்கேற்ற தூய்மை யுடைத்தாதல் வேண்டும் என்பது கூற வேண்டுதலின் அதனை எடுத்தும், "தூநிழல்" எனக் கூறினார். உவமை அடை (தூய்மை) பொருளினும் சென்று இயைந்தது. இடத்திற்குத் தூய்மை புதர் முதலாயின

இன்மையும், மெய்ப்பொருட்குத் தூய்மை பாசத்திற் படாமையுமாம். இவற்றால் அவை துன்பம் இலதாதல் குறிக்கப்பட்டது.

நிழல், விடாத ஆகுபெயர்; என்னை? அடையப்படுவது நிழலை உடைய இடமேயாகலின். "தூண், நிழல்" எனப் பாடம் ஓதி, 'நிழல் ஒளி' எனக்கொண்டு 'தனக்கு நிழல்' என இனிவரும் குறளின் பொருளே இதற்கும் பொருளாக உரைப்பாரும் உளர்; அவ்வா றுரைப்பின், 'கூறியது கூறல்' என்றும் குற்றம் வருதல் அறிக.

"சொல்லார்" என்பது, 'சொல்லாராக' எனச் செயவெனச்சமாய் நின்ற முற்றெச்சம். அதனால் அவ்விடத்துச் சிறப்பும்மை தொகுத்தலாயிற்று. "தொகும்" என்பது எச்சம். தொகுதல் - சேர்தல். "போல்" என்னும் முதனிலை, 'போலும்' என முற்றுப் பொருள் தந்தது. "பெறுவது - கொள்வாரும் கள்வரும் நேர்" (குறள் 813) என்பதில் "நேர்" என்பது போல.

"தான்" என்பது மேலை அதிகார இயையினால் அறியும் நெறியைப் பெற்ற உயிரையும், 'அது' என்பது அதனால் அறியப்பட்ட மெய்ப்பொருளையும் குறித்தன. அதனானே, உயிர் பாசப் பற்றினது துன்ப நிலையையும், மெய்ப்பொருளினது இன்ப நிலையையும் உணர்ந்தமை பெறப்பட்டது. படவே, உவமைக் கண்ணும், தொகுவோர், வெயிலது வெப்பத்தையும்; நிழலது தட்பத்தையும் உணர்ந்தவராதல் பெறப்படும். என்னை?

*"சுட்டிக் கூறா வுவமை மாயின்,*
*பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே"*
(தொல் - பொருள், உவம வியல்)

என்பது இலக்கணமாகலின், உவமை, தான் அதுவாய் நிற்றல் இயல்பாதலை உணர்த்திற்று. இஃது இயல்பாயினும், அனாதிக் குற்றமாகிய பாசத்தால் செயற்கைபோலத் தோன்றும் என்க.

இதனால், 'உயிர் சிவத்தை அடைதல் இயற்கை' என்பது கூறப்பட்டது. இதனானே, உயிர் பாசத்தோடு கூடி நிற்றல் செயற்கை என்பதும் அறிந்து கொள்ளப்படும்.

வழிப்போக்கன் நிழலைவிட்டு நீங்கியவழி வெயிலே அவனுக்கு உளதாதல்போல, உயிர் சிவத்தைவிட்டு நீங்கிய வழி அதற்கு உளதாவது பாசமே என்பதும் இதனால் உணர்ந்து கொள்க.

இரண்டாவது குறள்.

62. "தித்திக்கும் பால்தானுங் கைக்கும் திருந்திடும்நாப்
பித்தத்திற் றான்றவிர்ந்த பின்"

என வரும்.

**இதன் பொருள்**

நா பித்தத்தின், தித்திக்கும் பால்தானும் கைக்கும் — நாக்குப் பித்தத்தில் மூழ்கியுள்ளபொழுது, தித்திப்பதாகிய பாலும் அதற்குக் கசப்பதாகவே தோன்றும்; (ஆயினும்) தான் தவிர்ந்தபின் திருந்திடும் — அந்நாக்குதானே பித்தத் தினின்றும் நீங்கிய பின்னர் அப்பால் அதற்கு முன்புபோலத் திரிவுபட்டுத் தோன்றாமல், உள்ளவாறே தோன்றும்; அஃதாவது தித்திப்பதாகவே தோன்றும் என்றபடி.

## விளக்கவுரை

'உயிர் பாசத்தில் மூழ்கியுள்ளபொழுது இன்பத்தைத் தருவதாகிய மெய்ப்பொருள் அதற்குத் துன்பத்தைத் தருவதாகவே தோன்றும்; ஆயினும், அவ்வுயிர் பாசத்தினின்றும் நீங்கிய பின்னர் அதற்கு அம்மெய்ப்பொருள் முன்புபோலத் திரிவுபட்டுத் தோன்றாமல் உள்ளவாறே (இன்பந் தருவதாகவே) தோன்றும்' என்னும் பொருளைத் தோற்றுவித்து நிற்றலால், இக்குறள் ஒட்டணி.

'பால்தானும்' என்பதில் தான், அசைநிலை, உம்மை தித்திப்பை இயல்பாகவே உடைமையைக் குறித்து நிற்றலின் உயர்வு சிறப்பு. "பித்தத்தின்" என்புழி, 'உள்ளபொழுது' என்பது சொல்லெச்சம். கைத்தல் செயற்கையும், தித்தித்தல் இயற்கையுமாயினும், பித்தமாகிய குற்றமும், அதன் நீக்கமும் காரணமாக அவை முறையே இயற்கையும், செயற்கையும் போலத் தோன்றும் என்பது அறிவித்தற்கு, அறிவதன் தன்மையை அறியப்படும் பொருள்மேல் ஏற்றி, "கைக்கும் திருந்திடும்" என ஓதினார். இதனானே பொருளினும் அவ்வாறாதல் கொள்க. இதனால்மேல், 'பெத்தமும் முத்தியும் செயற்கையும் இயற்கையும் ஆம்' எனக் குறிப்பினாலும், கூற்றினாலும் உணர்த்திய பொருள்கள், அவற்றை அங்ஙனம் தெளியமாட்டாது மயங்குவார்க்கு உவமையில் வைத்துத் தெளிவிக்கப்பட்டன. படவே, பாசத்தைச் சார்ந்து பாசமாய் நிற்கின்ற உயிர், அதனின் நீங்கிப் பதியைச்சார்ந்து அதுவாய் நிற்றலே அதற்குத் தூய்மையாவது என்பது இனிது விளங்கிற்று.

"பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினை அடைய முத்தி" (சிவஞானசித்தி, பரபக்கம் - பஞ்சராத்திர மறுதலை 23) என்றது காண்க.

*"ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்*
*தாணுவினோ டத்துவிதஞ் சாருநாள் எந்நாளோ"*
(தாயுமானவர்; எந்நாட்கண்ணி, நிற்கும் நிலை. 28)

எனப் பின்வந்தோரும் இந்நிலையையே அவாவி நின்று பாடின அறியற்பாற்று.

மூன்றாவது குறள்,

63. **"காண்பான் ஒளிஇருளிற் காட்டிடவும் தான் கண்ட**
**வீண்பாவம் என்னாய் விடும்"**

என வரும்.

**இதன் பொருள்**

இருளின் — ஒருவன் இருளில் உள்ள பொழுது; காண்பான் — எப்பொருளையும் அவன் காணுமாறு; ஒளி காட்டிடவும் — ஒளியே அவனுக்கு அவற்றைக் காட்டி நிற்கவும்; தான் கண்ட வீண் பாவம் என் ஆய்விடும் — ஒளியின்றித் தானே கண்டுவிட்டதாகக் கருதும் பொய்க்கருத்து உளதாகுமாயின், அஃது அவனுக்கு யாதாய் முடியும்?

**விளக்கவுரை**

'பேதமையாய் முடியும்' என்பது கருத்து. 'பாசத்துப் பட்டு அறிவு இச்சை' செயல்களை இழந்து நிற்கின்ற உயிர்க்கு யாதொன்றையும் திருவருளே அறிவித்தும், இச்சிப்பித்தும், செய்வித்தும் நிற்கவும், தானே

அறிந்தும், இச்சித்தும், செய்தும் வருவதாகக் கருதும் பொய்க் கருத்து உளதாகுமாயின்' அஃது அவ்வுயிர்க்குப் பேதமையாய் முடியும்' என்னும் பொருளைத் தோற்றுவித்து நிற்றலின் இக்குறளும் அவ்வணி.

'பிற பொருளை நோக்குவார்க்கு அவற்றைக் காட்டுகின்ற ஒளிதானே, தன்னை நோக்குவார்க்குத் தன்னையும் காட்டி நிற்றல்போல, உலகத்தை நோக்குகின்ற உயிர்க்கு அதனை அறிவிக்கின்ற திருவருள்தானே, தன்னைநோக்குகின்ற உயிர்க்குத் தன்னையும் காட்டி நிற்கும்; அதற்கு வேறொரு துணை வேண்டா' என்பதும், 'அங்ஙனமாகவே, திருவருளைப் பிறவற்றைத் துணைக்கொண்டாதல், திருவருளின் துணையின்றி உயிர் தானே தனித்து நின்றாதல் அறிதல் இயலாது' என்பதும் இவ்வுவமையால் உணர்த்தப்பட்டன. படவே, 'உயிர் பெத்தத்தில் உலகத்தையும் தன்னையும், முத்தியில் திருவருளையும் தானே அறிவதாக எண்ணுதல் பேதைமையாம்' என்பது போந்தவாறு அறிக.

இவற்றுள் உலகத்தைப் பொருளாகக் கருதும் நிலைபாசம் காரணமாகவும், உலகத்தை விடுத்துத் தன்னையே பொருளாகக் கருதும் நிலை பாசத்தின் வாதனை (வாசனை) காரணமாகவும் நிகழ்வனவாம். ஆகவே, உலகத்தைப் பொருளாகக் கருதும் பாச நிலை நீங்கியவழியும், பாசத்தின் வாதனை நிலை நீங்காதபொழுது உயிர், 'யானே பரம் பொருள்' என்றாதல், 'யானும் பரம்பொருளோடு ஒருநிகராவேன்' என்றாதல் தன்னையே பொருளாக மதித்து நிற்கும் என்க. இவற்றுள் 'யானே பரம்பொருள்' எனக் கூறுதல் 'ஏகான்மவாதம்'

எனவும், 'யான் பரம்பொருளோடு ஒரு நிகராவேன்' எனக் கூறுதல் 'சிவசம வாதம்' எனவும் சொல்லப்படும். இவையும் பேதைமையவாதலை ஈண்டு அறிந்து கொள்க.

திருவருள், தானே தன்னைக் காட்டினாலன்றி அதனை உயிர்தானே அறிதல் இயலாது. எனவே, மேல் "தூநிழல் ஆர்தற்கு ஆரும் சொல்லார் தொகும் இதுபோல்" என்றதே பற்றி, 'திருவருள் மர நிழல்போல நின்றாங்கு நிற்பதே; அதனால் உயிரே தனது முயற்சியால் தானே அதனைச் சென்று அடையும்' எனக் கூறும் ஈசுர அவிகார வாதமும் பேதைமைப் பாலதாதல் விளங்கும்.

*"காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே"*

(திருமுறை - 6 - 95 - 3)

என்னும் திருமொழி இக்கருத்தே பற்றி வந்தது.

காண்பான், 'பான்' ஈற்று வினையெச்சம். பாவம் - கருத்து. கண்டதாகக் கருதும் கருத்தினை, 'கண்ட கருத்து' எனக் கூறினமையால் இது, செயப்படுபொருளை வினைமுதல் போலக் கூறியதாம். பொய்யை 'வீண்' என்றார். 'பாசத்தில் நின்றாரிடத்தன்றி, 'அதனின் நீங்கினேம்' என்பாரிடத்தும் இது நிகழுமாயின், அஃது அவர்க்குப் பெரியதோர் இழுக்காம்' என்பர், 'பேதைமையாம்' என்னாது, 'என்னாய்விடும்' என அவலந் தோன்றக் கூறினார். 'ஆய்விடும்' என்பது ஒருசொல் நீர்மைத்து. 'எந்நாள் விடும்' என்பது பாடமாயின், 'இக்கருத்து இவ்வுயிர்க்கு என்று நீங்குவதோ' என இரங்கிக் கூறியவாறாக உரைக்க. 'பாவம்' என்பதற்குப் பலரும் 'தீ வினை' என்றே உரைத்தனர்; அஃது இவ்விடத்திற்குச் சிறவாமை அறிந்து கொள்க.

இதனால், 'பெத்தம் முத்தி இரண்டினும் தனக்குத் துணையாய் நின்று உதவும் திருவருளை உயிர் மறத்தலே அதற்கு மாசாவது' என்பதும், 'ஆகவே, அம்மாசு முற்ற நீங்காது சிறிது நிற்பினும், உயிர்க்குத் தூய்மை கூடாது' என்பதும் கூறப்பட்டன.

நான்காவது குறள்,

64. "ஒளியும் இருளும் ஒருமைத்துப் பன்மை
தெளிவு தெளியாச் செயல்"

என வரும்.

**இதன் பொருள்**

ஒளியும் இருளும் ஒருமைத்து — ஒளியிலும், இருளிலும் கண் ஒரு தன்மையையே உடையது; (அஃதாவது, ஒளி, இருள் என்பவற்றையல்லது பிறிதொன்றையும் காணாத நிலைமையை உடையது ஆகவே;) பன்மை தெளிவு தெளியாச் செயல் — பலவாகிய பொருளைக் கண் காணுதல், ஒளியோடும், இருளோடும் விரவிய மயக்க நிலையிலே ஆவதாம்.

**விளக்கவுரை**

"அறிவேயான சிவத்தில் உள்ளபொழுதும், இருளேயான ஆணவத்தில் உள்ளபொழுதும் உயிர் அவற்றையன்றிப் பிறி தொன்றையும் காணாத தன்மையை உடையது; ஆகவே, அது பல பொருள் உணர்வைப் பெறுவது, ஆணவமாகிய இருளோடும், மாயை யாகிய ஒளியோடும் விரவி நிற்கும் நிலையில் ஆவதே" என்னும் பொருளைத் தோற்றுவித்து நிற்றலாம்; இக்குறளும் அவ்வணி.

"ஒளி, இருள்' என்றவற்றில் ஏழாவது விரிக்க' அங்ஙனம் விரிக்கவே, "ஒருமைத்து" என்ற பயனிலைக்கு 'கண்' என்பது தோன்றா எழுவாயாகும்.

'தெளியார் செயல்' எனப் பாடம் ஓதி, இக்குறட்பாவிற்குப் பிறவாறும் உரைப்ப.

உலகில் 'பகல்' எனப்படுவது, இருளும் ஒளியும் விரவிய நிலையே, என்னை" 'பேரொளி வரின், கண் பிறிதொன்றையும் காண மாட்டாது' என்பது, ஒளியின் பெற்றிமை உணர்ந்தோர் அனைவர்க்கும் உடன் பாடாகலின், இது பற்றியே சுத்தநிலையை, 'இராப் பகல் அற்ற இடம்' என வேறாக வைத்து, கேவல சகல நிலைகளை, இரவும் பகலுமாகக் கூறுதல் மரபாயிற்று. கேவலம் - தனிமை; அஃதாவது உயிர் ஆணவம் ஒன்றனோடு மட்டும் கூடியிருக்கும் நிலை. சகலம் - கலையோடு கூடியநிலை; அஃதாவது, மாயையோடு கூடி நிற்கும் நிலை. மாயை உள்ளபொழுது, கன்மமும் உளதாகும். இவை இரண்டுமே அசுத்தமாகலின், மும்மலங்களும் நீங்கிய நிலையே உயிர்க்குச் சுத்தமாம். அதுபொழுது உயிர், சிவத்தோடு கூடி நிற்கும்.

இதனால், யாதும் அறியா அஞ்ஞானமேயன்றி, கருவி கரணங்களால் உலகத்தை அறிந்து வருகின்ற பாச ஞானமும் உயிர்க்குத் தூய்மையாகாமை உவமையள வையின் வைத்துத் தெளிவிக்கப்பட்டது.

ஒரு ஞான்றும் தனித்து நில்லாத உயிர் பாசங்களின் நீங்கியவழி, கயிறு அறப்பெற்ற ஊசல் தரையிடத்தன்றி நில்லாமை போலச் சிவத்தின்கணன்றி நில்லாமையின் அதனை உணராது, தனித்து நிற்பதாக உணரும் பசு

ஞானமும், இருள் பற்றறக் கழியாத வாதனை நிலையேயாதலின், அதுவும் தூய்மையாகாமை அறிக.

ஐந்தாவது குறள்,

65.“கிடைக்கத் தகுமேநற் கேண்மையார்க் கல்லால்
எடுத்துச் சுமப்பானை யின்று”

என வரும்.

**இதன் பொருள்**

இன்று — ஒருவரும் துணையில்லாது துன்புறும் நிலையில், எடுத்துச் சுமப்பானைக் கிடைக்க — தானே வலிய வந்து தம்மை எடுத்துத் தன்மேல் வைத்துச் சுமந்து செல்கின்ற துணைவனைப் பெறுதல்; நல் கேண்மையார்க்கு அல்லால் தகுமே — நல்ல நட்பினை உடையார்க்கல்லது கூடுமோ!

**விளக்கவுரை**

‘ஆணவமேயன்றி மாயை கன்மங்களும் பகையாய் விடத் தனித்து நிற்கின்ற முத்தி காலத்தில் தானே வலிய வந்து, தாம் செய்வனவும், தமக்குப் பிறர் செய்வனவுமாய செயல்களுள் ஒன்றும் தம்மைத் தாக்காதவாறு அவற்றைத் தன்னுடையனவாக ஏன்றுகொண்டு காக்கும். துணைவனைப் பெறுதல், ‘கைம்மாறு கருதாத கருணையாளனாகிய இறைவனை அவ்வாறு உணர்ந்தார்க்கல்லது கூடுமோ’ என்னும் பொருளைத் தோற்றுவித்தலின், இக்குறளும் அவ்வணி.

‘கிடைத்தல்’ வினை, இரண்டாவதற்கு முடிபாதல் இக்காலத்து அரிது. ஆயினும், இங்கு அஃது அவ்வாறு நின்றது. செயவெனெச்சம் தொழிற்பெயர்ப்பொருள் தருதல், பிற்கால வழக்கு. ‘தகுமே’ என்ற ஏகார வினா.

எதிர்மறுத்து நின்றது. தகுதி, இங்கு இயல்வதைக் குறித்தது. 'கேளிர்' எனப் பண்புடைப் பொருளாக ஓதற்பாலதனை, "கேண்மை" எனப் பண்பாக ஓதினார், அப்பண்பு தம்மிடத்தும் உளதாக வேண்டுதலைக் குறித்தற்கு. இன்மை அடியாகவந்த, 'இன்று' என்னும் எதிர்மறைக் குறிப்பு வினைப்பெயர், இன்றாய காலத்தை உணர்த்திற்று. 'இன்றாயது துணை' என்பது, எடுத்துச் சுமப்பானை" என்ற குறிப்பினால் விளங்கும்.

'பெத்தான் மாக்களுக்கு மாயை கன்மங்கள் உறவாய் நின்று நலம் செய்யும்; முத்தான்மாக்களுக்கு அவை இறைவனை அடைதற்குத் தடையாய்ப் பகையாவன ஆகலின், 'அவை அவ்வாறான காலத்தில் உயிர்க்குத் துணையாவார் பிறர் யாவர்' என்பது உணர்த்துற்கு, 'இன்று' என எடுத்தோதினார். முத்தி காலத்தில் தன்னையே எல்லாவற்றிற்கும் முதல்வனாக உணர்ந்து, தம் செயல் அற்று நிற்கும் அன்பரை முதல்வன் மேற்கூறியவாறு தாங்கி நிற்றலை,

*"சிவனும் இவன் செய்தியெலாம் என்செய்தி யென்றும்,*
*செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்,*
*பலமகல உடனாகி நின்று கொள்வன்*
*பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே"*

(சூ. 10 - 1)

என்னும் சிவஞான சித்தியால் உணர்க. இவ்வாறு உயிர் தன் செயலற்று நிற்கவே, மும்மலமும் பற்றற நீங்குமாகலின், அந்நிலையே அதற்குத் தூய்மையாவது என்க.

இதனால், 'உயிர் விளக்கமாவது இது' என்பது உணர்த்தப்பட்டது.

ஆறாவது குறள்,

66. "வஞ்ச முடனொருவன் வைத்த நிதிகவரத்
துஞ்சினனோ போயினனோ சொல்"

என வரும்.

### இதன் பொருள்

ஒருவன் வைத்த நிதி — ஒருவன் சேமித்து வைத்துள்ள பொருட் குவையை; வஞ்சமுடன் கவர — வேறொருவன் கள்ளத்தால் கவர்ந்து கொள்வதற்கு; துஞ்சினனோ போயினனோ — வைத்தவன் உறங்கிவிட்டானோ, அல்லது அவ்விடத்தைவிட்டுப் போய்விட்டானோ? சொல் — இரண்டில் இது நிகழ்ந்தது என்பதைச் சொல்.

### விளக்கவுரை

"சொல்" என்ற விதப்பு, 'சொல்லுமாறு, எதுவும் நிகழவில்லை' என்பதைக் குறித்து நின்றது. எனவே, 'இரண்டும் நிகழாமையால், அந்நிதியை அவனது இசைவின்றி வேறொருவன் கவரக்கருதுதல் பயனில் கருத்தேயாம்' என்றதாயிற்று. முதல்வனது திருவருளை உயிர்கள் தாமே பெறுதற்கு அவன் சோர்வுடையவனும் அல்லன்; அத்திருவருட்கு வேறாய் நிற்பவனும் அல்லன்' என்னும் பொருளைத் தோற்றுவித்தலால், இக்குறளும் அவ்வணி.

இதனால், 'உயிர்கள் முதல்வனது திருவருளை அவன் வழங்கவே பெறுமல்லது, தாமே பெறுந் தன்மையவல்ல' என்பது கூறப்பட்டது.

ஏழாவது குறள்,

67. "தனக்குநிழல் இன்றா ஒளிகவருந் தம்பம்
எனக்கவர நில்லா திருள்"

என வரும்.

### இதன் பொருள்

தனக்கு நிழல் இன்றா ஒளி கவரும் தம்பம் எனக் கவர — உச்சிப்போதில் தன்னிடம் பிற பொருள்களின் நிழல்கள் இல்லையாம்படி ஞாயிற்றின் ஒளி ஒன்றையே கவர்ந்து நிற்கின்ற பளிங்குத் தூண்போல, உயிர் ஞானத்தைக் கேட்டுச் சிந்தித்தபின் தெளிதற் காலத்தில், தன்னிடத்துப் பிற உணர்வுகள் இல்லையாம்படி முதல்வனது திருவருள் உணர்வு ஒன்றையே பற்றி நிற்குமாயின்; இருள் நில்லாது — அஞ்ஞானம், வாதனையும் இல்லாதவாறு நீங்கும்.

### விளக்கவுரை

'ஆதலின் அவ்வாறு கவர்ந்து நிற்க' என்பது குறிப்பெச்சம். "தனக்கு" என்றது, உருபு மயக்கம். 'தனக்கு ணிழல்' எனப் பாடம் ஓதுதல் சிறக்கும். "நிழல்" என்றதனாலும், "ஒளி கவரும்" என்றதனாலும் "தம்பம்" பளிங்குத் தம்பமும், "ஒளி" உச்சிப்போதை ஞாயிற்றின் ஒளியும் ஆயின. காலை மாலைப் போதுகளின் ஞாயிற்றின் ஒளியைப் பளிங்குத் தூண், கிழக்கும் மேற்குமாகிய ஒவ்வொரு புடையே கவர்ந்து, மற்றொரு புடைப் பிற பொருள்களின் நிழலைத் தன்கண் கொண்டு நிற்கும்; உச்சிப்

போதை ஞாயிற்றின் ஒளியை அத்தூண் தன்கண் முழுதும் நிரம்பக் கவர்ந்து, பிற பொருள்களின் நிழலைக் கவரா தொழியும். ஆகவே, பளிங்குத்தூண் ஞாயிற்றின் ஒளியைத் தனக்கு நிழல் இன்றாகத் கவர்தல் உச்சிப்போதிலேயாதல் அறிக. இஃதே பற்றி, அம்மைதன் அருள் பெற்றார் ஒருவரும், அம்மையே,

*"உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகும்*
*உணர்வுடையோர் மதிக்கின்ற மாணிக்கம்"*

(அபிராமியந்தாதி - 1)

என்றார். அஃது உணராமையால், சிலர், "உச்சித் திலகும்" என்பதை, 'உச்சித் திலகம்' எனப் பாடம் ஓதினர். அதனால், அதற்கேற்பவே பலரும், அத்தொடரை இரண்டாக அறுத்து, வேண்டியவாறே உரை கூறுவாராயினர். அதனுள், "உச்சித்து இலகும் உணர்வு" என்பது, 'உச்சிக் கண்ணதாய் விளங்குவது போன்ற உணர்வு' என்றவாறு. இது, பக்குவ காலத்தில் சத்திநிபாதத்தால் திருவருள் ஞானம் முற்ற விளங்குதற்குக் கூறப்படும் உவமை என்க.

இதனால், 'முதல்வனது திருவருளை முற்றப் பெறுதலே உயிர் விளக்கம்' என்பது கூறப்பட்டது.

எட்டாவது குறள்,

68. "உற்கைதரும் பொற்கை யுடையவர்போல் உண்மைப்பின்
நிற்கை அருளார் நிலை"

என வரும்.

**இதன் பொருள்**

உற்கை தரும் பொன் கை உடையவர்போல் உண்மைப்பின் நிற்கை – இருளில் இயங்குவோர், தமக்கு உதவியாக எரிக்கொள்ளியைக் காட்டி வருகின்ற அழகிய கையை உடையவர்க்கு எஞ்ஞான்றும் பின்னே நிற்றல் போல, பாசப் பற்றில் நின்று மெய்ப்பொருளை நாடும் உயிர்கள், தமக்கு உதவியாகத் தனது திருவருளை வழங்கி வருகின்ற அருளாளனாகிய முதல்வனுக்கு எஞ்ஞான்றும் பின்னே நிற்றலே; அருள் ஆர் நிலை – அவனது திருவருளை நிரம்பப்பெறும் முறையாகும்.

**விளக்கவுரை**

"உண்மைப் பின்" எனப் பொருட்கண் வந்த, "பின்" என்பதனை, 'உடையவர் பின்போல்' என, உவமைக் கண்ணுங் கூட்டுக. 'கொளும்' என்னாது "தரும்" என்றமையானும், 'உடையவர்போல்' என்றே ஒழியின், 'அவர் இன்னதன் பின் நிற்பர்' என்பதனை உய்த்துணர்ந்து இடர்ப்பட வேண்டுதலானும், உய்த்துணர்ந்து அவ்வாறு உரைப்பினும், ஒளியை உடையதும், அதன் பின்நிற்பதும் வேறு வேறாய் வரும் பொருட்கு அஃது உவமையாதல் கூடாமையானும் இவ்வாறுரைப்பதே உரை என்க. 'உதவி செய்யும் கை' என்றற்கு "பொற்கை" என்றார்.

உண்மை, மெய்ம்மை; இங்கு அஃது ஆகுபெயராய், மெய்ம்மையுடைய பொருளை உணர்த்திற்று. உயிர் முதல்வனுக்குப் பின் நிற்றலாவது, அவன் உணர்த்தியவா றன்றித் தானே யாதொன்றனையும் உணர முற்படாமை. இதனை,

*"வேண்டத் தக்க தறிவோய் நீ*
*வேண்ட முழுதுந் தருவோய் நீ*
... ... ... ... ...
*வேண்டி நீயா தருள் செய்தாய்*
*யானும் அதுவே வேண்டி னல்லால்,*
*வேண்டும் பரிசொன் றுண்டென்னில்*
*அதுவும் உன்றன் விருப்பன்றே"*

(திருவாசகம் - குழைத்த பத்து - 6)

என, அவ்வாறு நின்று அருளிய திருமொழியால் அறிக.

இதனால், 'திருவருளை முற்றுப்பெறுதல் எவ்வாறு' என அவாவுவார்க்கு, 'அஃது இவ்வாறு' என்பது உணர்த்தப்பட்டது.

ஒன்பதாவது குறள்,

69. "ஐம்புலனால் தாம்கண்ட தென்றால் அதுவொழிய
ஐம்புலனார் தாமார் அதற்கு"

என வரும்.

**இதன் பொருள்**

தாம் ஐம்புலனால் கண்டது அது ஒழிய என்றால் — உயிர், கருவி கரணங்களைத் துணைக்கொண்டு அறிந்து வந்த தெல்லாம் மெய்ப்பொருள் ஒழிய ஏனையவற்றையே

யென்றால்; அதற்கு ஐம்புலன் ஆர் — அம் மெய்ப்பொருளை அறிதற்கு அக்கருவி கரணங்கள் துணையாதற்கு என்ன உரிமையுடையன! தாம் ஆர் — இனி, அக்கருவி கரணங்கள் இன்றி ஒன்றையும் அறியமாட்டாத உயிர்கள்தாம். தனித்து நின்று அம்மெய்ப் பொருளை அறிதற்கு என்ன உரிமை யுடையன!.

**விளக்கவுரை**

எனவே, பாரிசேடத்தால், 'உயிர் மெய்ப் பொருளை அறிதல் அம்மெய்ப்பொருளைத் துணைக்கொண்டே' என்பது போதரும் என்பது கருத்து. புலன், ஆகுபெயர். இஃது ஏனைய கருவி கரணங்கட்கு உபலக்கணம். 'இன்று காறும் முதல்வனைக் கண்டு காட்டமாட்டாத கரணங்கள், பின்னர்க் கண்டு காட்டும் என்றற்குச் சான்றில்லையாகையால், அவை காட்டும் என்றல் அறியாமையாம்' என்றவாறு.

'பெத்த காலத்தில் கருவி கரணங்கள் சீவ கரணமான இருளாய் நிற்றலின், அப்பொழுது அவை மெய்ப்பொருளைக் காணுதற்குத் துணையாகமாட்டா வாயினும், முத்தி காலத்தில் அந்நிலை நீங்கிச் சிவகரணமான ஒளியாய் நிற்றலின், அப்பொழுது அவை அதற்குத் துணையாக வல்லனவாம்; அவ்வாறன்றி அவை அகன்றொழியுமாயின், ஆன்மாவுக்கு அறிவு நிகழுமாறில்லை' எனச் சிவ சங்கிராந்த வாத சைவரும், பெத்த காலத்தில் ஆன்ம அறிவு பாசத்திற் பொருந்திச்

சிற்றறிவாய் நிற்றலின் அப்பொழுது அது மெய்ப்பொருளைத் தனித்து நின்று அறியமாட்டாதாயினும் முத்தி காலத்தில் பாசத்தின் நீங்கிப் பேரறிவாய்ப் பதிஞானத்தோடு ஒப்ப நிற்குமாகலின், அப்பொழுது அது மெய்ப்பொருளைத் தனித்து நின்று அறிய வல்லதாம்' எனச் சிவ சமவாத சைவரும் தாம் தாம் வேண்டுமாறே கூறுவராகலின், அவர் கூற்றுப்பற்றி நிகழும் ஐயங்கள் இதனால் நீக்கப்பட்டன.

*"உணர்வி னேர்பெற வருஞ்சிவ போகத்தை*
*ஒழிவின்றி உருவின்கண்*
*அணையும் ஐம்பொறி யளவினும் எளிவர*
*அருளினை"*

(பெரிய புராணம் - திருஞான - 161)

*"ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள*
*அளப்பருங் கரணங்கள் நான்கும்*
*சிந்தையே யாகக் குணம்ஒரு மூன்றும்*
*திருந்துசாத் துவிகமே யாக*
*இந்துவாழ் சடையா னாடுமா னந்த*
*எல்லையில் தனிப்பெருங் கூத்தின்*
*வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து*
*மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்".*

(பெரிய புராணம் - தடுத்தாட் - 106)

உடம்பு உள்ளபொழுதே கருவி கரணங்கள் தம் குறும் பொழிந்து நிற்க, முதல்வனது அருள்வழி அவற்றைக் கடந்து அவனைத் தலைப்படும் அதீதநிலை வாய்க்கப்பெற்ற அருமையை வியந்து போற்றினவல்லது,

பாசஞான பசு ஞானங்களாலும் அவனைத் தலைப்படுதல் கூடுமெனக் கூறினவல்ல' என்றற்கு, 'சிவபோகம், உணர்வின் நேர் பெற - சிவஞானம் ஒன்றானே துய்க்க - வருவது' எனவும், 'கண்களே கொள்ள, சிந்தையேயாக, சாத்துவிகமேயாக, ஐந்து பேரறிவு, அளப்பருங் கரணம் திருந்து சாத்துவிகம் எனவும் கிளந்து கூறிய சிறப்பு மொழிகளே சான்றாகலின், அவ்விடத்து, 'சிவபோகம், சங்கிராந்தவாத சைவர், சமவாத சைவர் கூற்றுப்படியே தலைப்பட வந்ததோ' என மலைவுண்டாதற்கு இடம் இன்மை அறிக.

பத்தாவது குறள்,

70. "தாமே தரும்அவரைத் தம்வலியி னாற்கருத
லாமே இவனா ரதற்கு"

என வரும்.

**இதன் பொருள்**

தாமே தரும் அவரை - தமது பொருளைத் தாமாகவே வறியார்க்கு அளிக்கும் வள்ளன்மை உடையவரை; தம் வலியினால் கருதல் ஆமே - கொள்வாரது வன்செயலால் கொடுப்பவராக நினைத்துப் பிறரும் அவ்வாற்றால் கொள்ள முயலுதல் பொருந்துமோ! பொருந்தாது. அதுபோல; அதற்கு இவன் ஆர் - அத்தன்மையுடைய மெய்ப்பொருளினது அருளை இவ்வுயிர் தனது வலிமையால் பெற முயலுதற்கு என்ன உரிமையுடையது!

**விளக்கவுரை**

'கொடுப்பவராக' என்பது சொல்லெச்சம். "அது"

அவ்வியல்பினது; என்றது, 'தானாகவே தரும் தன்மையுடையது' என்றவாறு. எனவே, பாசத்தால் புறத்துச் செலுத்தப்பட்டு, அகநோக்கினை இழந்து நிற்கும் உயிருக்குத் தனது ஞானத்தால் அகத்து நோக்கும் முறைமையைத் தந்து தன்னை உணர்த்தி நிற்கின்ற முதல்வனை, அவ்வுயிர் தனது முயற்சியால் உணர்ந்ததாகக் கருதுமாயின், அது மயக்க உணர்வாம்' என்றதாயிற்று.

'கருவிகளைத் துணைக்கொண்டாதல், தான் தனித்து நின்றாதல் உயிர் முதல்வனை அறியமாட்டா தாயின், பின் அஃது முதல்வனை அறிதல்தான் எவ்வாறு' என்று எழும் ஐயத்தினை உளத்துட்கொண்டு, 'முதல்வன்' கைம்மாறு கருதாக் கருணையாளனாகலின், அக்கருணை காரணமாக உயிர்களைத் தன்னை நோக்கி ஈர்த்து நிற்றலில் அவன் ஒரு ஞான்றும் பிறழாது நிற்ப, அச்செயல் பக்குவ காலத்தில் அவ்வுயிர்க்குப் பயன் தருவதாகும்; அவ்வழி அஃது அவனது ஞானத்தின் வழி நின்று, அவனை அறியும், எனக் கூறி இதனால் விளக்கம் தரப்பட்டது.

எட்டாம் அதிகாரம்

## இன்புறு நிலை

அஃதாவது, மாசு நீங்கித் தூய்மை பெற்ற உயிர், இறையின்பத்தில் திளைக்கும் நிலைமை. இதனானே, முன்னையதிகாரத்தோடு இதற்குள்ள இயைபு இனிது விளங்கும்.

முதற் குறள்,

71. "இன்புறுவார் துன்பார் இருளி னெழுஞ்சுடரி
புகுவார் முன்புகுவார் "

என வரும்.

### இதன் பொருள்

துன்பு ஆர் இருளின் எழும் சுடரின் முன்புகுவார் — (பக்குவம் வாராத இக்காலத்து) துன்பம் நிறைந்த இருளிடத்துத் தோன்றுகின்ற ஒளிக்கு முன்னால் செல்பவர்; பின் பின்புகுவார் — பக்குவம் வந்த காலத்து அதற்குப் பின்னால் செல்வர்; இன்புறுவார் — அச்செயலின் பயனாக அவர் பேரின்பத்தை எய்துவர்.

### விளக்கவுரை

முன்னை யதிகாரத்தில் "உற்கை தரும் பொற்கை" என்னும் குறளால் உணர்த்தப்பட்ட அருள் நிலையால் விளையும் பயனே ஆனந்தநிலை என்பது உணர்த்தியவாறு. இவ்விடத்திற்கு இயைபில்லாத மருள் நிலையின் விளைவு, "துன்பார் இருள்" என உடம்பொடு புணர்த்தமையால் அடங்கிற்று. இவ்வாறன்றி, "துன்பார்" என்றதனை ஒரு சொல்லாகக் கொண்டு அதற்கும், 'துன்புறுவார்' எனப்

பயனிலையாகப் பொருள் உரைத்து, "முன் புகுவார்" என்பதனை அதற்கு எழுவாயாக்கி நிரனிரையாக வைத்து உரைப்பார்க்கும், அத்தொடர் அனுவாத மாத்திரையே நிற்றல் அறிக. "பின்" என்றதனால், 'இன்று' என்பது பெறப்பட்டது.

இதனால், இன்புறு நிலை உளதாமாறு கூறப்பட்டது.

இரண்டாவது குறள்,

72. "இருவர் மடந்தையருக் கென்பயன்இன் புண்டாம்
ஒருவன் ஒருத்தி யுறின்"

என வரும்.

**இதன் பொருள்**

இருவர் மடந்தையருக்கு என் பயன் — இன்பம் வேண்டித் தம்மிற் கூடலுறுவார் இருவரும் பெண்டிரேயாயின், அக்கூட்டத்தால் எவர்க்கேனும் இன்பம் உண்டாகுமோ! ஒருவன் ஒருத்தி உறின் இன்பு உண்டாம் — (அவ்வாறன்றி) ஆடவன் ஒருவனும், பெண்டு ஒருத்தியும் தம்மிற் கூடின், இன்பம் உளதாகும்.

**விளக்கவுரை**

'உயிரும், அருளும் கூடிய அளவில் இன்பநிலை உண்டாகாது; உயிரும் அருளுக்கு முதலாகிய சிவமும் கூடியவழியே இன்ப நிலை உளதாகும்' என்னும் பொருளைத் தோற்றுவித்து நிற்றலால், இக்குறள் ஒட்டணி.

யாண்டும், ஒரு துணையின்றித் தனித்து நிற்கும் இயல்பில்லாமையால் உயிரும், பண்பியாகிய சிவத்தையன்றித் தனித்து நிற்றல் கூடாமையால் பண்பாகிய

அருளும் பெண்டிரோடு உவமிக்கப்பட்டன. பெத்த நிலையில் கருவிக் கூட்டங்களே உயிருக்குத் துணையாக, அவற்றைப் பற்றி நின்று உயிர் உலகத்தை அறிந்து அனுபவிக்கும். அவ்வனுபவத்தில் விளைவது சிற்றின்பம். அவ்வாறே முத்தி நிலையில் இறைவனது திருவருளே உயிருக்குத் துணையாக, அதனைப் பற்றி நின்று உயிர் இறைவனை அறிந்து அனுபவிக்கும். அவ்வனுபவத்தில் விளைவது பேரின்பம். ஆகவே, கருவிக் கூட்டத்தைப் பற்றி நின்ற அளவிலே உயிருக்குச் சிற்றின்பம் விளையாது, உலகத்தை அறிந்து அதில் அழுந்திய வழியே அவ்வின்பம் உண்டாவது போல, திருவருளைப் பற்றிய அளவிலே உயிருக்குப் பேரின்பம் விளையாது, சிவத்தை அறிந்து அதில் அழுந்தியவழியே அவ்வின்பம் உண்டாகும் என்க. அருள் நிலை, கண் பகலவனது ஒளியைப் பெறுவதனோடும், ஆனந்த நிலை, அவ்வொளியைப் பெற்ற கண் அதனானே பகலவனை நோக்கி அவனது பெருமையில் அழுந்தி நிற்பதேனாடும் ஒப்பனவாம். ஆகவே, அருள் நிலையே ஆனந்த நிலையன்று; அஃது அருள் நிலைக்கு அப்பால் உள்ளது என்க.

'கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல்' என்னும் நான்கனுள் தெளிதல் அருள் நிலை; நிட்டை கூடல் ஆனந்த நிலை; அவ்வாறே சுத்த சாக்கிரம் முதலிய ஐந்தனுள் துரியம் அருள்நிலை. துரியா தீதம் ஆனந்த நிலை. இங்ஙனமாய அவ்விரண்டனது இயல்புகள் இனிது விளங்குதற் பொருட்டே இக்குறட்பாவை ஆசிரியர் அருளிச் செய்தார் என்க.

இதனால், 'துன்பறு நிலைதானே இன்புறு நிலை யாகாது; அஃது அதனின் வேறு' என்பது கூறப்பட்டது. துன்பறு நிலை, பாச நீக்கம்; இன்புறு நிலை, சிவப்பேறு.

மூன்றாவது குறள்,

73. "இன்பதனை எய்துவார்க் கீயும் அவற்குருவம்
இன்பகன மாதலினால் இல்"

என வரும்.

### இதன் பொருள்

இன்பதனை எய்துவார்க்கு ஈயும் அவற்கு — இன்பத்தைத் தன்னைப் பெறுவார்க்குத் தருகின்ற முதல்வனுக்கு; உருவம் இன்ப கனம் ஆதலினால் — வடிவம் இன்பப் பெருக்கே ஆதலால்; இல் — அவ்வின்பத்தைத் தான் நுகர்தல் என்பது அவனுக்கு இல்லை.

### விளக்கவுரை

'இன்பமாயினும், துன்பமாயினும் நுகர்ச்சியாதல், முன் இல்லதாய்ப்பின் உளதாம் வழியே; ஆதலின், இன்பத்தைத் தன்னியல்பாகக் கொண்டிராத உயிரே இறைவனைச் சார்ந்து, அவனது இன்பத்தைப் புதுவதாக நுகரும்; இன்பம் இறைவனுக்குத் தன்னியல்பாக என்றும், உண்மையால், அதனை அவன் புதுவதாக நுகர்தல் இல்லை' என்றபடி. இது, புதுவதாகச் செல்வம் பெற்றார் அதனால் தருக்குற்று நிற்றலும், தொன்று தொட்டு வந்த செல்வம் உடையார் அவ்வாறு தருக்கி நில்லாமையும் பற்றியும் அறிந்து கொள்ளப்படும்.

இங்ஙனங் கூறவே, "இன்புண்டாம் ஒருவன் ஒருத்தி உறின்" என மேற்கூறிய உவமையே பற்றி, 'முத்தி நிலையில் முதல்வனுக்கும் இன்ப நுகர்ச்சி உளதாம் போலும்' என ஐயுறுவார்க்கு, அவ்வையத்தினைப்

பொருந்து மாற்றின் வைத்து நீக்கியவா றாயிற்று. "முத்தி நிலையில் உயிருக்கன்றி முதல்வனுக்கு இன்ப நுகர்ச்சி இல்லை என்பது" "அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெற்றேன்; யாது நீ பெற்றதொன்றென்பால்" (திருவாசகம் - கோயில் திருப்பதிகம் - 10) என்பன போன்ற அருட்டிரு மொழிகளால் இனிது விளங்கும்.

இதனால், இன்புறு நிலைபற்றி நிகழ்வதோர் ஐயம் அறுக்கப்பட்டது.

நான்காவது குறள்,

*74. "தாடலைபோற் கூடியவை தாநிகழா வேற்றின்பக்
கூடலைநீ ஏகமெனக் கொள்"*

என வரும்.

### இதன் பொருள்

தாடலைபோல் - 'தாடலை' என்னும் புணர்மொழி. 'தாள், தலை" என்னும் இருசொற்களது கூட்டமே யாயினும், புணர்ச்சிச் செய்கையால் அவை அங்ஙனம் இரண்டாகக் காண வாராது. ஒரு சொல்லாயே நிற்றல்போல; கூடியவை தாம் நிகழா வேற்று இன்பக் கூடலை - தம்முட் கூடிய உயிரும் சிவமும் வேறு நில்லாத பேரின்பப் புணர்ச்சியையே; நீ ஏகம் எனக் கொள் - மாணவகனே, நீ, உயிரும் சிவமும் ஒன்றாதலாகிய முத்தி முறைமை என்று உணர்வாயாக.

### விளக்கவுரை

எனவே, 'உயிரும் சிவமும் ஒன்றாதல்' என்பதனை, குடாகாயமும் மகாகாயமும் குடம் உடைந்தவழி ஒன்றாதல்

போல்வது' எனவும் 'பதின்மர் சென்றவிடத்து, அவர் ஓர்யாற்றைக் கடந்தபின் தம்மை எண்ணுகின்றவழி, எண்ணுவோன் தன்னை நீக்கி எண்ணிப் பத்தாமவன் எங்கே எனத்தேடி அலமருமிடத்து, அறிவான் ஒருவன் போந்து, நீயே பத்தாமவன் என்றுணர்த்த, தேடியவனே தேடப்பட்டவனாயது போல்வது' எனவும், வேட்டுவனால் எடுக்கப்பட்ட புழு பின் அவ்வேட்டுவனேயாய்த் தன்மையால் ஒன்றாதல் போல்வது' எனவும், ஒழுகக் காய்ச்சிய இரும்பில் ஊற்றப்பட்ட நீர், அவ்விரும்பில் ஒடுங்கி ஒன்றாதல் போல்வது' எனவும் இன்ன பிறவாக அவரவர் தத்தமக்குத் தோன்றியவாறே பலபட உரைக்கும் மயக்க உரைகளையெல்லாம் பற்றி மயங்கற்க என்றதாயிற்று. 'தாடலை' என்பதுபோல, 'காறலை' என்ற புணர்மொழியையும் எடுத்துக்காட்டுதல் உண்டு. இத்தகைய புணர்மொழிகள் வேறும் பல உள எனினும் இவற்றையே எடுத்துக்காட்டுதல், 'தாள் அல்லது கால்' என்பது இறைவனது திருவருளையும், 'தலை' என்பது உயிர்களையும் குறித்தற்குப் பொருந்தி நிற்றல்பற்றியாம்.

*"கோளில் பொறியிற் குணமிலவே, எண்குணத்தான்*
*தாளை வணங்காத் தலை"*

எனத் திருவள்ளுவ நாயனார் அருளிய திருக்குறளிலும் இக்குறிப்பு அமைந்திருத்தல் அறியத்தக்கது.

'தாடலை என்பது, 'தாளும், தலையும்' என்றே பொருள் தருதலால், 'உண்மையில் இரு சொல்லே' என்பதும், அவை 'தாள் தலை' எனப் பிரிந்து தமக்குரிய எழுத்துக்களுடன் தோன்றி வேறு நில்லாது ஒரு

சொல்லேபோல நிற்றலால், புணர்ச்சி வகையால் ஒன்றாய் நிற்கின்றன என்பதும் இவ்வெடுத்துக்காட்டால் விளங்கும். அதனால், முத்தியிலும், "சுத்த அனு போகத்தைத் தூய்க்கின்ற உயிரும், அதற்கு அவ்வின்பத்தைக் கொடுக்கின்ற சிவமும்" (உண்மை விளக்கம் - 51) ஆகிய இரு பொருளும் கேடின்றி யிருப்பினும், உயிருக்குத் தன்னைப் பற்றிய உணர்வு தோன்றாது அவ்வின்பம் ஒன்றே தோன்ற அதில் மூழ்கிவிடுதலால், 'சிவம்' என்கின்ற ஒருபொருளே உள்ளது போலத்தோன்றும் என்பது அறிந்துகொள்ளப்படும்.

இதனால், முத்தியில் ஆன்மாவும், சிவமும் நிற்கும் முறைமை தெரிந்துணர்த்தப்பட்டது.

ஐந்தாவது குறள்,

75. "ஒன்றானும் ஒன்றா திரண்டானும் ஓசையெழா
தென்றால்ஒன் றன்றிரண்டு மில்"

என வரும்.

**இதன் பொருள்**

ஒன்றானும் ஒன்றாது — உயிரும் சிவமும் (குடாகாயமும், மகாகாயமும் போலப்) பொருளால் ஒன்றாயிருப்பினும், அவை பின்னர், 'ஒன்றும்' என்றல் கூடாது; (ஒன்றுதல் என்பது இருபொருளின் செயலாகையால் என்பது கருத்து.) இரண்டானும் ஓசை எழாது – இனி, உயிரும், சிவமும் இருளும், ஒளியும்போல இருவேறு தன்மைப்பட்ட பொருளாயிருப்பினும், 'ஒன்றின' என்னும் சொல் எழுதற்கே வழியில்லை; (வேற்றியல் புடைய இருபொருள்கள் ஒருஞான்றும் ஒன்றுதல் இயலாததாகலின்

என்பது கருத்து.) என்றால் — இரண்டும் இவ்வாறாதலின்; ஒன்றன்று இரண்டும் இல் — உயிரும், சிவமும் பொருளால் ஒன்றும் அன்று; தம்முள் இயையாத வேற்றியல் புடைய இருபொருள் ஆதலும் இல்லை.

### விளக்கவுரை

உப்பும், அப்பும் போல, இயைந்து ஒன்றாதற்குரிய இருபொருளாய், ஒன்றி, வேறுகாணப்படாது நிற்கும் என்பதாம். "எனைத்தானும் நல்லவை கேட்க; அனைத்தானும் - ஆன்ற பெருமை தரும்" என்பதிற்போல, 'ஆயினும்' என்பது இரண்டிடத்தும் 'ஆனும்' என மருவிற்று என்பதனை நிரம்ப அழகிய தேசிகர் உரைபற்றியும் உணர்க. உம்மைகள் எச்சப் பொருள். "ஒன்றாது' என்றது, 'ஒன்றுதல் என்பது பொருள்படாது' என்றவாறு "ஒன்றன்று" என்பதில் அன்மைச்சொல், மறுக்கப்படும் பொருள்மேல் வந்தது. "இரண்டும்" என்பதில் 'ஆதல்' என்பது எஞ்சி நின்றது.

இதனால், 'உயிரும், சிவமும் இருமுதல்கள் அல்ல' என்னும் ஒருமைக் கொள்கையும், (ஏகான்ம வாதம் அல்லது அபேத வாதம்) 'அவை இரண்டும் வேறுபட்ட இருதன்மையுடைய பொருள்களே' என்னும் இருமைக் கொள்கையும் (துவிதம் அல்லது பேத வாதம்) பொருந்தாமை காட்டி, மேலைக் குறளில் கூறப்பட்ட ஒன்றும் முறைமை வலியுறுத்தப்பட்டது.

ஆறாவது குறள்,

76."உற்றாரும் பெற்றாரும் ஓவார்; உரையொழியப்
பற்றாரும் அற்றார் பவம்"

என வரும்.

### இதன் பொருள்

உற்றாரும் — தாம் வேறு நில்லாது சிவத்திலே பொருந்தி ஒன்றாயினவரும்; பெற்றாரும் — அதன்மேல் அச்சிவத்தினது இன்பத்தைத் தமதாகப் பெற்று அதனுள் அழுந்தினவரும்; ஓவார் — சிவத்தினின்றும் நீங்கி, மீளப் பிறவார். உரை ஒழியப் பற்றாரும் பவம் அற்றார் — இனி அவ்வுற்றாரும் பெற்றாரும் போல, 'யான், எனது' என்பன அற்றாராயினும் மெய்ப்பொருள் ஒன்றையே பற்றும் நிலைமையைப் பெறாத வரும் பிறவி அற்றவரே ஆவார்.

### விளக்கவுரை

'கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல்' என ஞானம் நான்காகி நிகழும்; அவை சிவத்தை அடைவித்தலில் ஒன்றின் ஒன்று முதிர்ந்தனவாம். ஆகவே, 'கேட்டல் சிந்தித்தல்' என்னும் இரண்டிலும் யான், எனது என்பன அறுதல் இல்லை. தெளிதலில் அவை அறுமாயினும், சிவானந்தம் நிரம்பத் தோன்றாது. நிட்டை கூடியவழியே அது நிரம்பத் தோன்றும். ஆகவே, தெளியவும், நிட்டை கூடவும் பெறாதார் ஏனையோர் போலப் பிறப்பிற்கு ஆளாவர் போலும் என்னும் ஐயம் நிகழாமைப் பொருட்டு, 'உரை ஒழியப் பற்றாரும் அற்றார் பவம்" என்று அறிவுறுத்தினார். "ஓவார்" என்பதே பாடம் ஆதலை, நிரம்ப அழகிய தேசிகர் உரையால் அறிக.

இதனால், ஞானத்தின்வழிச் சிவத்தில் ஒன்றுதலில் நிலை வேறுபாடுகள் உண்மை கூறப்பட்டது.

கேட்டல் சுத்த சாக்கிரமாயும், சிந்தித்தல் சுத்த சொப்பன சுத்த சுழுத்திகளாயும், தெளிதல் சுத்த துரியமாயும், நிட்டை சுத்த துரியா தீதமாயும் நிகழ்வனவாம். அதனால் துரியம் அருள் விளக்கமேயன்றி, ஆனந்த விளக்கம் அன்று. துரியாதீதமே ஆனந்த விளக்கமாம்.

"பெற்றார்" எனப்பட்ட அதீத நிலையில் நின்றோர்க்குப் பிறப்பில்லை என்பது தெளிவு. துரியத்தில் சென்றபின் அதீதம் கூடுதல் எளிது என்பது பற்றி "உற்றார்" ஆகிய அவரையும் பெற்றாரோடு ஒருங்கு வைத்து எண்ணினார். அவ்விரு நிலையினும் செல்லாதார்க்கும் பிறப்புச் சிறுபான்மையே யாதலின், 'பற்றாரும் அற்றார் பவம்" என்றார். இவரை முன்னை யிருவரோடு வைத்து ஒருங்கு கூறாது வேறாக வைத்தும், "பற்றாரும்" என எதிர்மறை வினைப் பெயராற் குறித்தும், உம்மை கொடுத்தும் ஓதினமையால், இவர்க்குச் சிறுபான்மை பிறப்புக் கூடினும் கூடும் என்பது குறிப்பால் உணர்க.

ஏழாவது குறள்,

77. "பேயொன்றுந் தன்மை பிறக்கு மளவுமினி
நீயொன்றும் செய்யாது நில்"

என வரும்.

**இதன் பொருள்**

நீ – (கேட்டுச் சிந்தித்த மாணவகனே,) நீ; பேய் ஒன்றும் தன்மை பிறக்கும் அளவும் – உனக்குப் பேய்

பிடிக்கப்பட்டது போன்ற தன்மை உண்டாகு மளவும்; இனி ஒன்றும் செய்யாது — இனிமேல் யாதொரு சிந்தனையையும் செய்யாமல்; நில் — சிந்தித்துக் கண்ட அந்தப் பொருளையே நோக்கி நில்.

### விளக்கவுரை

ஞானச் செய்தியில் தற்போதம் செயற்படுவது சிந்திக்குமிடத்து ஆதலின்; "இனி ஒன்றும் செய்யாது" என்பதில் "ஒன்று" என்றது, சிந்தித்தலாதலும், 'இனி அது வேண்டா' என்றதனால், அது முற்றுப் பெற்றமையும் பெறப்பட்டன. இப்பொருளை, "நீ" என்றதனை எடுத்தல் ஓசையாற் கூறி உணர்க. இங்ஙனம் கூறவே, 'பெறுதல்' உறுதலின் வழித்தாய் வரும் என மேலைக் குறளிற் கூறிய அவ்வுறுதல் 'எவ்வாறு வரும்', என உணர அவாவியமாணாக்கனுக்கு, 'தற்போதம் தோன்றாதவாறு நிற்கவே அது வரும், என அறிவுறுத்ததாயிற்று. பேய் பிடிக்கப்பட்டார் தம் உணர்விழந்து நிற்றல் உலகில் காணப்படுவதாகலின், தற்போதம் இழந்து நிற்றற்கு அதனை எடுத்துக் காட்டினார்.

*"பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போலக்*
*கண்டாரே கண்டார்என் றுந்தீபற;*
*காணாதார் காணாரென் றுந்தீபற"*

என்ற திருவுந்தியைக் காண்க. இதனால் தன் செயலறுதலே துரிய நிலை வருதற்கு வழியாதல் பெறப்பட்டது.

*"செய்தற் கரிய செயல்பலவும் செய்துசிலர்*
*எய்தற் கரியதனை எய்தினர்கள் — ஐயோ நாம்*
*செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்*
*செய்யாமை செய்யாத வாறு"*

எனத் திருக்களிற்றுப்படியில் இரங்கி யருளிச் செய்தமை அறியற் பாற்று.

இதனால், அதீதத்திற்கு நேர் வாயிலாகிய துரிய நிலையை எய்துமாறு கூறப்பட்டது.

எட்டாவது குறள்,

78."ஒண்பொருட்க ணுற்றார்க் குறுபயனே யல்லாத
கண்படுப்போர் கைப்பொருள்போற் காண்"

என வரும்.

**இதன் பொருள்**

ஒண்பொருட்கண் உற்றார்க்கு உறுபயனே அல்லாத — ஞானமே வடிவான மெய்ப்பொருளில் அழுந்தினவர்கட்கு அதனால் வரும் பயன் ஒன்று தவிர ஏனைய யாவும்; கண் படுப்போர் கைப்பொருள்போல் — உறங்கினவர் கையில் இருந்த பொருள் போல்வனவாம்.

**விளக்கவுரை**

அஃதாவது அவரறியாதவாறு அவரை விட்டு நீங்குவனவாம். 'உறுபயன் இது' என்பது, வருகின்ற குறளிற் கூறப்படும். 'உறுபயன் ஏய்' எனப் பிரித்து, 'ஏய் என்பது முதனிலைத் தொழிலாகு பெயர்' எனக் கொண்டு, அதற்கு, 'பொருந்துகின்ற இன்பம்' என்பது பொருளாக வேறு தொடராக்கி உரைத்தார் நிரம்ப அழகிய தேசிகர். 'அல்லாத' என்பதே பாடம் என்பதை அவர் உரையால் உணர்க.

'ஏனைய யாவும்' என்றதனால், உலகியல் ஒழுக்கங்களேயன்றித் தவ ஒழுக்கமும் அவ்வாறு

நீங்குவனவாதல் அறியப்படும். மேல், 'பேய் ஒன்றுந் தன்மை' என்ற உவமை இவை நீங்குமாற்றிற்கு நிரம்பாது என்னும் கருத்தால், கண்படுப்போர் கைப்பொருளாய வேறு உவமை கூறினார். ஆகவே சிறிதானும் தன்முனைப்பால் அவை எஞ்ஞான்றும் தாமாக விடப்படுவன அல்ல' என்பதும், 'விடிற் குற்றமாம்' என்பதும் பெறப்பட்டன. இவ்வாறே இவர் சங்கற்ப நிராகரணத்திலும்,(233) "பாலர் உன்மத்தர் பசாசரில்'(234) என்றதனோடு அமையாது.

*"உறங்கி னோர்கை வெறும்பாக் கெனவும்"*
எனக் கூறி,

> *"தானே தவிரா தானால், புரியா*
> *தொழிந்திடில் நிரயத் தழுந்துதல் திடமே"*
> (235 - 236)

என்றார்.

"கண் படுப்போர்" என்றது, 'கண்ணை மூடுவிப்போர் எனப் பொருள் தந்து, 'உறங்குவோர்' என்பதைக் குறித்து நின்றது. 'போல்' என்னும் முதனிலை, 'போல்வன' என முற்றுப் பொருள் தந்தது. காண், முன்னிலை யசை, அன்றி, 'கண்படுப் போர் கைப்பொருள் போல்வனவாக அறி' என்று உரைத்தலும் ஆம்.

இதனால், உயிர் இன்புறு நிலைக்கண் அவ்வின்ப நுகர்ச்சியன்றிப் பிறிதொன்றும் இல்லாமை கூறப்பட்டது.

ஒன்பதாவது குறள்,

79. "மூன்றாய தன்மைஅவர் தம்மி மிகமுயங்கித்
தோன்றாத இன்பம்அதென் சொல்"

என வரும்.

**இதன் பொருள்**

அது – மேல், "உறு பயன்" எனப்பட்ட அப் பயனாவது; அவர் – மேல், "ஒண்பொருள்" எனப்பட்ட சிவனும், "அதன் கண் உற்றார்" எனப்பட்ட சீவரும் ஆகிய அவ் இரு திறத்தவரும்; தம்மின் மிக முயங்கி – தம்முள் மிகவும் கலத்தலால்; மூன்றாய தன்மை தோன்றாத இன்பம் – நுகர்வானும் – நுகர்ச்சி அறிவும், நுகரப்படு பொருளும் ஆகிய மூன்றும் வேறு வேறாய் உள்ள தன்மை தோன்றாத (நுகரப்படும் பொருளாகிய சிவம் ஒன்றுமே தோன்றுகின்ற) பேரின்பமாம். சொல் என் – அவ்விடத்துச் சொல் எழுதற்கு வழி யாதுளது? (ஒன்றுமில்லை).

**விளக்கவுரை**

மிக்க கலத்தலாவது, வேற்றுமை சிறிதும் தோன்றாதவாறு ஒன்றாதல்; இந்நிலை, மேல் "தாடலைபோல்" (குறள் - 74) என்றவிடத்து விளக்கப் பட்டது. 'முயங்குதலால்' என்பது. "முயங்கி" எனத் திரிந்து நின்றது. எனவே, 'மூன்றாய தன்மை தோன்றுமளவும், கீழ், மேல், புடை என்பன இன்றி, யாண்டும் வெளியறக்கோத்து ஆன்மாவை விழுங்கிப் பெருகும் வெள்ளமாய பேரின்பம் விளையாது; சிறிதின்பமே விளையும்' என்றற்கு, 'மூன்றாய தன்மை தோன்றாத இன்பம்' என உடம்பொடு புணர்த்து ஓதுகின்றவர், 'உளவாய அவை தோன்றாதொழிதல்

எவ்வாறு' என ஐயுறுவார்க்கு, 'முன்னர்க் கூறிய ஒன்றுதலால் அவை தோன்றா' என அஃது ஏதுவாதலை உணர்த்தி, ஐயமறுத்தவாறாயிற்று. "அதென்" என்பதில் முற்றியலுகரம் உயிர் வரச் சிறுபான்மை கெட்டது. "புலாஅல் பிறிதொன்றன் புண்ண துணர்வார்ப்பெறின்" (திருக்குறள் - 257) என்பதிற்போல. "சொல் என்" என்றது, இந்நிலை எய்தினார், இயல்பாகவே வாய் வாளாமை (பேசாமை - மௌனம்) உடையராவர் என்பதுணர்த்தி, அவரை அறியுமாறு கூறியதாம்.

*"பேசாமை பெற்றதனிற் பேசாமை கண்டனரைப்*
*பேசாமை செய்யும் பெரும்பெருமான் — பேசாதே*
*எண்ணொன்றும் வண்ணம் இருக்கின்ற யோகிகள்பால்*
*உண்ணின்றும் போகான் உளன்"*

(திருக்களிற்றுப்படியார் - 28)

என்றதும் இந்நிலையே என்க. இவ்வாறாகவே, பேச்சு எழுவதாகவும், அஃது எழாதவாறு அடக்கி வாய் வாளாதிருப்பவர் இந்நிலையை அடைதற்கு முயல்பவர் (சாதகர்) என்பது அறியப்படும். பேச்சற்ற நிலையே அதீதம். ஆகவே, பேசும் நிலை துரியமாம் என்க.

இதனால், மேல் "உறு பயன்" எனச் சுட்டிய பயன் இது என்பதும், அதன் பெருமை இன்னது என்பதும் கூறப்பட்டன.

பத்தாவது குறள்,

*80. "இன்பில் இனிதென்றல் இன்றுண்டேல் இன்றுண்டாம்*
*அன்பு நிலையே அது"*

என வரும்.

இதன் பொருள்

அது அன்பு நிலையே — மேற்கூறிய மூன்றாய தன்மை தோன்றாத அப்பேரின்பந்தான். அதனை விரும்புகின்ற விருப்ப நிலையில் உண்டாவதே யாதலின்; இன்பில் இனிது என்றல் இன்று உண்டேல் இன்று உண்டாம் — 'இவ்வின்பம், இதுகாறும் நாம் நுகர்ந்து வந்த இன்பங்கள் எல்லாவற்றினும் மேலாய் இணையற்ற இன்பமாய் உள்ளது' என உணரும் தன்மை ஆன்மாவிற்கு இப்பிறப்பிலே உண்டாகுமாயின், முன்னர்த் தோற்றமாத்திரையான் வெளிப்பட்ட அவ்வின்பம், பின் முறுகி எழுந்து, மேற்கூறியவாறு மூன்றாய தன்மை தோன்றாத பேரின்பமாய் விளைகின்ற நிலையும் இப்பிறப்பிலே அதற்கு உண்டாவதாம்.

விளக்கவுரை

ஆகவே, 'அவ்வுணர்வு இப்பிறப்பில் தோன்றாதாயின், இப்பிறப்பு நீங்கிய பின்னர்ச் சுத்த தத்துவ புவனத்தை அடைந்து வாழும் நிலையில் அவ்வுணர்வு தோன்ற, அவ்வின்ப நிலையும் தோன்றும்' என்றவாறு. 'சிறுபான்மை மீள நிலத்திற் பிறந்து அந்நிலையை எய்துதலும் உண்டு' என்பது. மேல், "உற்றாரும் பெற்றாரும்" என்னும் குறள் உரையில் (76) காட்டினோம்.

"இன்பில் என்றதில் இல், உறழ் பொருவின்கண் வந்த ஐந்த னுருபு. என்றல் - என்று உணர்தல். "இன்று உண்டேல்" என்றது. 'அவ்வுணர்வு தோன்றுதற்குத் தடையாயுள்ள மலத்தின் வலிமை பெரிதாகலின், சகலராயுள்ளார்க்கு அவ்வாறாதல் அருமை' என்பது

தோற்றி நின்றது. இன்பில் இனிது என்னும் உணர்வே அன்பாதல் வெளிப்படை. "இன்று" என மறித்துங் கூறினார், வலியுறுத்தற் பொருட்டு. பின்னதில், "இன்றே' என்னும் தேற்றேகாரம் தொகுத்தலாயிற்று. 'அன்பு நிலையே' என்னும் ஏகாரமும் தேற்றமே, 'பிறிதொன்றன்று' என வலியுறுத்தலின். அன்பு நிலையில் விளைவதனை "அன்பு நிலையே" என இவ்வாறு வலியுறுத்து ஓதினார். அஃது அதனை இடையீடின்றி உடன் பயக்கும் ஒற்றுமைபற்றி,

*"ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த*
*இன்பமே என்னுடை அன்பே"*
(திருவாசகம் - கோயில் திருப்பதிகம் 1)

*"அன்பு சிவம்இரண் டென்பர் அறிவிலார்;*
*அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்;*
*அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்*
*அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே"*
(திருமந்திரம்)

என்பனவும் இக்கருத்தே பற்றி வந்தன.

*"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது*
*தானமர்ந்து வரூஉ மேவற் றாகும்"*
(பொருள் - 220)

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும்.

இதனால், உயிர் இன்புறு நிலையைப் பெறுமாறு கூறப்பட்டது.

ஒன்பதாம் அதிகாரம்

# ஐந்தெழுத் தருள் நிலை

அஃதாவது, சிவ முதனிலை மறை (சிவ மூல மந்திரம்) ஆகிய ஐந்தெழுத்து மந்திரத்தின் திருவருள் முறைமை. அருள் நிலையாகிய உயிர் விளக்கத்தைப் பெற்றோர், பின் ஆனந்த விளக்கமாகிய இன்புறு நிலையை எய்தமாட்டாத வழி அதனை எய்துதற்குத் துணையாய் நிற்பது ஐந்தெழுத்து மந்திரமாகலின் அதனை இன்புறு நிலையை அடுத்து வைத்துக் கூறுகின்றார்.

முதற் குறள்,

81. "அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்
பொருள்நூல் தெரியப் புகின்"

என வரும்.

## இதன் பொருள்

அருள் நூலும் — அருள்நூலாகிய ஆகமங்களும்; ஆரணமும் — அறநூலாகிய வேதமும் ( என்னும் இரு முதல் நூல்களும்) அல்லாதும் — இம் முதல்நூ லல்லாத மிருதி, புராணம், இதிகாசம் ஆகிய வழி நூல் சார்பு நூல்களும்; தெரியப்புகின் — நுணுகி ஆராயப் புகுந்தால்; ஐந்தின் பொருள் நூல் — ஐந்தெழுத்து மந்திரத்தின் பொருளை ஏற்ற பெற்றியால் விளக்குவனவேயாம்.

## விளக்கவுரை

சிறப்பு நூலாதல் பற்றி ஆகமத்தை முன்னர்க் கூறினார். "அருள்நூல், ஆரணம்" என்றவற்றில் முறையே,

'ஆகமம்; அறநூல்' என்பவற்றை ஒன்றன் குறிப்பால் மற்றொன்றில் பெற வைத்தார். "அல்லாது" என்ற ஒருமை தொகுத்துச் சுட்டியது. 'ஐந்தெழுத்தின் பொருள் இவை' என்பது வருகின்ற குறளில் கூறப்படும்.

இதனால், 'ஐந்தெழுத்து மந்திரம், அனைத்து நூல்களின் முடிவாயுள்ள பெரு மொழி (மகாவாக்கியம்) என அதன் சிறப்புக் கூறப்பட்டது.

*"அஞ்செழுத்தே ஆகமமும், அண்ணல் அருமறையும்,*
*அஞ்செழுத்தே ஆதிபுரா ணம்அனைத்தும் — அஞ்செழுத்தே*
*ஆனந்தத் தாண்டவமும், ஆறாறுக் கப்பாலாம்*
*மோனந்த மாமுத்தி யும்"*

என்ற உண்மை விளக்கச் செய்யுள்(45) இங்கு அறியத்தக்கது.

இரண்டாவது குறள்,

82. "இறைசத்தி பாசம் எழில்மாயை ஆவி
உறநிற்கும் ஓங்காரத் துள்"

என வரும்.

**இதன் பொருள்**

('சி, வா, ய, ந, ம' என்னும் ஐந்தெழுத்தில்) இறை — கடவுள்; சத்தி — கடவுளது ஆற்றல்; பாசம் — தளை; எழில் மாயை — எழுச்சியையுடைய மாயை; ஆவி — உயிர் என்பவை; உற நிற்கும் — பொருளாகக் கொள்ள நிற்கும். ஓங்காரத் துள்ளும் — 'ஓம்' என்னும் ஊமை மறையிலும் அன்னதாம்.

**விளக்கவுரை**

'ஐந்தில்' என்பது முன்னைக் குறளினின்றும் வந்து

இயைந்தது. 'ஐந்தெழுத்தாவன இவை' என எடுத்தோதாது, குருமுகமாகக் கேட்டுணர வைத்தார், 'அது மரபு' என்றற்கு. 'ஓங்காரத்துள்ளும்' என்னும் இறந்தது தழுவிய எச்ச உம்மை தொகுத்தலாயிற்று. 'அன்னதானம்' என்பது சொல்லெச்சம். ஓங்காரத்தைச் சிகாரம் முதலியவற்றிற்கு ஏற்ப, 'நாதம், விந்து, அகாரம், உகாரம், மகாரம்' என ஐந்தாகப் பகுத்து, இறை முதலிய பொருள்களைக் கொள்க. ஓங்காரமும், திருவைந்தெழுத்தும் பொதுவும், சிறப்பு மாகின்ற அவ்வளவேயன்றிப் பிறிது வேறுபாடுடையன அல்ல என்பது உணர்த்துதற்கு ஓங்காரத்துள் அவ்வாறா தலையும் உடன் கூறினார். இவ்வாறு உம்மை விதித்தலும், சொல்லெச்சம் வருவித்தலும் இன்றிக் கிடந்த அளவே கொண்டு உரைப்பனவெல்லாம் இயையில்லனவும், மிகைபடக் கூறுவனவுமாதல் அறிக. 'பாசம்' என்பது தலைமை பற்றி முதல் தடையாகிய ஆணவ மலத்தையே குறிக்கும். "மாயை" எனவே அதனைப் பற்றி நிற்கும் கன்மமும், அவற்றைத் தொழிற்படுத்தும் திரோதாயியும் தாமே கொள்ள நிற்கும்.

இதனால், 'ஐந்தெழுத்தின் பொருளாவன இவை' என்பது கூறப்பட்டது.

மூன்றாவது குறள்,

83. "ஊன நடனம் ஒருபால், ஒருபாலா
ஞான நடம் தான்நடுவே நாடு"

என வரும்.

**இதன் பொருள்**

ஊன நடனம் ஒருபால் (ஆ) - மேற்கூறிய

பொருள்களுள் அறியாமையுட் படுத்தும் பொருள் ஒருபக்கம் சேர்ந்திருப்பனவாகவும்; ஞான நடம் ஒருபால் (ஆ) — அறிவைத் தரும் பொருள்கள் மற்றொரு பக்கம் சேர்ந்திருப்பனவாகவும்; தான் நடுவே (ஆ) — அந்நடனங்களால் பயன் அடைகின்ற உயிர், அவ் இருதிறத்திற்கும் நடுவே இருப்பதாகவும்; நாடு — (மாணவகனே) ஆராய்ந்துணர்வாயாக.

### விளக்கவுரை

பின்னர் "ஞானம்" என வருதலால், முன்னர், "ஊனம்" என்றது அஃது இல்லாமையைக் குறித்தது. நடனம் புரிவனவற்றை 'நடனம்' என்றே ஒற்றுமைப்படுத்துக் கூறினார். "நடனம்" என்றது 'விளையாட்டு' என்றவாறு இறைவனது செயல்களை அவனது விளையாட்டாகக் கூறுதல் மரபாதல் வெளிப்படை. ஈறு குறைந்து நின்ற 'ஆக' என்பதனை ஏனையிடங்களிலும் கூட்டுக. அறியாமையுட்படுத்துவன பாசமும், மாயை முதலியனவும் ஆதலும், அறிவைத் தருவன இறையும், சத்தியும் ஆதலும் இனிது விளங்கிக் கிடந்தன.

இதனால், மேல், "இறை சத்தி பாசம் எழில்மாயை ஆவி" எனக் கூறப்பட்டவை அம்முறையே சேர்ந்து ஐந்தெழுத்தின் பொருளாய் நில்லாது, இரண் டிரண்டு சேர்ந்து இருபாலும் பொருளாய் நிற்க, உயிர் இடையே பொருளாய் நிற்கும் என்பது கூறப்பட்டது. 'பாசம் மாயை' என்பவற்றை எதிராக எண்ணிக் கொள்க. என்னை? எண்ணுமுறை நடுவில் முடிதல் வேண்டும் ஆதலின்.

நான்காவது குறள்,

84. "விரியமந மேவியவ்வை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரிற் பெறும்"

என வரும்.

## இதன் பொருள்

மந — முன்னர் ஆணவ மலமும், பின்னர் அது காரணமாக, 'திரோதாயி, மாயை, கன்மம்' என்பனவும்; விரிய மேவி — அழுத்தம் மிகப் பற்றி நின்று; யவ்வை மீள விடா உயிர்களைத் தம்மினின்றும் மீண்டு போக விடமாட்டா; தம் பெரிய வினை தீரின்— உயிர்களின் மிக்க வினை கெடுமாயின்; சி பெறும்—அவை ஏனையவற்றினின்றும் மீண்டு சிவத்தை அடையும்.

## விளக்கவுரை

மேல், "ஊன நடனம்" எனக் குறிக்கப்பட்ட பாசம் மாயைகளைத் திருவைந்தெழுத்தில் ஈற்றினின்றும் எதிர் நிரல் நிறையாகக் கொள்க என்றல் இனிது விளங்குதற்கு, "மந" என மாற்றிக் கூறினார். எனவே "ஞான நடம்" எனப்பட்ட இறையையும், சத்தியையும் திருவைந் தெழுத்தில் முதற்கண் நின்று, முறை நிரல் நிறையாகவே கொள்ளுதல் அமைந்து கிடந்தது. இங்ஙனமாகவே, 'சி, வா, ய, ந, ம' என்பவற்றின் பொருள் முறையே இறை, சத்தி, ஆவி, மாயை, பாசம் ஆதல் முடிந்தது. இதனை,

*"ஈசன் அருள் ஆவி எழிலார் திரோதம்மலம்*
*ஆசிலெழுத் தஞ்சின் அடைவாம்"*

எனவும்,

*"சிவன்அருள் ஆவி திரோதம்மலம் ஐந்தும்
அவனெழுத் தஞ்சின் அடைவாம்"*

எனவும் போந்த 'உண்மை விளக்கத்தால்' (41,42) தெளிய உணர்க. இங்ஙனம் உணர்த்தப்பட்ட பொருளைப் பல்காலும் பயின்றறிதற் பொருட்டு அப்பொருள்களை அவ்வெழுத்தாகவே கூறினார். பின்னரும் அவ்வாறு கூறுதல் அறிக.

மூல மலமாகிய ஆணவ மலமே எல்லாத் தீங்கிற்கும் அடிநிலைக் காரணம் ஆதலின், அது பரிபாகம் எய்திய வழியே ஏனையவும், நீங்குமாயினும், அப்பரிபாகத்தின் பயன், வினை நீக்கமாய் முடிதல்பற்றி, "வினை தீரின்" என்றும், ஈண்டு, 'வினை' எனப்படுவது சஞ்சித கன்மம் என்பார், "பெரிய வினை" என்றும் கூறினார். ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என்னும் மூவகை வினைகளுள் சஞ்சிதமே பல பிறப்புக்களிலும் ஈட்டப்பட்டு ஈண்டிக் கிடப்பதால் அறிக. இச்சஞ்சித கன்மம், ஆசான் மூர்த்தி, வழியாக, 'தீக்கை' எனப் பெயர் பெற்று நிகழும் சிவனது கிரியா சத்தியின் தொழிற்பாட்டினால் நீங்கும் என அறிக.

இதனால், ஊன நடனத்தினால் விளைவது கூறி, ஞான நடனத்தின் இயல் புணர்த்தற்குத் தோற்றுவாய் செய்யப்பட்டது.

ஐந்தாவது குறள்,

85. **"மாலார் திரோதம் மலம்முதலா மாறுமோ
மேலாசி மீளா விடின்"**

என வரும்.

### இதன் பொருள்

மால் ஆர் திரோதம் மலம் முதல் ஆ — மயக்கம் நிறைந்த திரோதாயியைக் குறிக்கின்ற நகாரமும், ஆணவ மலத்தைக் குறிக்கின்ற மகாரமுமே முதலாய் நிற்ப; சிமேலா மீளா விடின் — சிவத்தைக் குறிக்கின்ற சிகாரம் முதலாமாறு திருவைந்தெழுத்து முறைமை மாறாமலே நிற்குமாயின்; மாறுமோ — மலம் முதலிய பாசங்கள் நீங்குமோ! நீங்கா.

### விளக்கவுரை

"ஆதலின், அவை நீங்க வேண்டுவோர், திருவைந்தெழுத்தைச் சிகாரம் முதலாகவைத்தே ஓதுக' என்பது குறிப்பெச்சம். முன் நிற்ப, உயிர் அவற்றின் பின் நிற்குமாயின், அவற்றின் வழிப்பட்டுப் பாசம் நீங்கப்பெறும் என்பது இதனுள் விளங்குதல் காண்க.

*"நம்முதலா ஓதில்அருள் நாடாது; நாடும், அருள்*
*சிம்முதலா ஓதுநீ சென்று"*

என்றும்,

*"ஆதி மலம்இரண்டும் ஆதியா ஓதினார்*
*சேதியா மும்மலமும் தீர்வாகா!"*

என்றும், 'உண்மை (42,44) விளக்கத்துள்ளும்' கூறப்பட்டது.

நகாரம், முதலாக உள்ளதை, 'தூல பஞ்சாக்கரம்' என்றும், சிகரம் முதலாக உள்ளதை, 'சூக்கும பஞ்சாக்கரம்' என்றும் கூறுவர். தூலமாகக் கூறியவழிப் பஞ்சாக்கர மந்திரம் தன்னையே சுட்டலும், தன் பொருளைச் சுட்டலும் என இரு நிலைமையும் உடைத்தாய் நிற்கும் எனவும், சூக்குமமாகக் கூறியவழி அம் மந்திரம் தன் பொருளையே

சுட்டும் ஒரு நிலைமையே உடையதாம் எனவும் உணர்க. பாசங்களை அறுத்துச் சிவத்தை அடைவிப்பனவாகிய நால்வர் திருமுறைகளுள் தூல பஞ்சாக்கரம் தன்னைச் சுட்டும் வகையிலே ஓதப்பட்டும், அதன் பொருளைச் சுட்டுமிடத்துச் சூக்குமமாகவே ஓதப்பட்டும் வழங்கும். சொல்லைச் சுட்டுமிடம் பலவும், பொருளைச் சுட்டுமிடம் சிலவும் ஆதலின், அம்முறையும் அவ்வாறே அமைந்தன. "முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்"(தி6.25.7) என்றவாறு, பஞ்சாக்கரத்தை ஓதப்பெறும் முதற்பேறே, சமய தீக்கைப் பேறாதலின், அதன்கண் கேட்பிக்கப்படுவது தூல பஞ்சாக்கரமே யாயிற்று. இதனுள், 'மேலாசி' என்பதில் ஒற்றுமிகாமை, சிகாரம் வடவெழுத்தாதல் பற்றியாம்.

இதனால், "ஊன நடனத்தின் வழிநில்லாது ஞான நடனத்தின் வழி நிற்க" என்பது கூறப்பட்டது.

ஆறாவது குறள்,

*86.* "ஆராதி ஆதாரம் அந்தோ அதுமீண்டு
பாராது மேலோதும் பற்று"

என வரும்.

**இதன் பொருள்**

ஆதாரம் ஆராதி – (விசேட தீக்கையால்) திருவைந்தெழுத்தின் பொருளை உணர்ந்த மாணவகனே, ) நீ எப்பொருட்கும் ஆதாரமாகிய சிவத்தை வழிபடு; (சிகாரம் முதலாகவே திருவைந்தெழுத்தை ஓது.) அது மீண்டும் பாராது மேல் ஓதும் பற்று அந்தோ – அவ்வாறு சிவம் (சிகாரம்) முதலாக ஓதுமாற்றை நோக்காமல், பின்னும்

பின்னும் முன் போலவே நகாரம் முதலாக ஓதுதற்குக் காரணமான உலகப் பற்று, ஐயோ! இரங்கத் தக்கது.

**விளக்கவுரை**

பின் நிற்றலே வழிபாடாதலின், அதனை வழிபடுதலாகவே கூறினார். "மீண்டு" என்றதனை "மீள" எனத் திரிக்க 'இரங்கத் தககது' என்பது சொல்லெச்சம். இதனால், நகாரம் முதலாக ஓதுவார்க்கு உலகப் பயன் கிடைத்தலும், அப்பயனில் பற்று நீங்காதவர் சிகாரம் முதலாக ஓத முயலாமையும் பெறப்பட்டன. "மேல் ஓதும் பற்று" என்றமையால், விசேட தீக்கை பெற்றுக் கிரியையிலும், யோகத்திலும் நிற்போர் நிட்காமிய பூசையும், சிவயோகமும் செய்யாவழிப் பயனில்லையாதல் பெறப்படும்.

இதனால், ஊன நடனத்தின்வழி நிற்றல் பிறவி நீங்குதற்கு வாயிலாகாமை கூறப்பட்டது. இவ்விரு குறளிலும் எழுத்துக்கள் அவற்றின் பொருளாகவே கூறப்பட்டன.

ஏழாவது குறள்,

87. "சிவமுதலே ஆமாறு சேருமேல் தீரும்
பவம்நுதுநீ ஓதும் படி."

என வரும்.

**இதன் பொருள்**

சிவ (ஏ) முதல் ஆமாறு சேருமேல் — திருவைந்தெழுத்தில் 'சி, வ' என்னும் இரண்டெழுத்துக்க்களே முன் நிற்கும் முறை கூடுமாயின்; பவம் தீரும் — பிறவி

நீங்கும்; (ஆதலால்) நீ ஓதும்படி இது — (பிறவிக்கு அஞ்சுகின்ற) நீ ஓதத்தக்க முறை இதுவே.

### விளக்கவுரை

இங்கு எழுத்துக்களை எழுத்தாகவே கூறினார். பிரிநிலை ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. 'இதுவே' என்னும் பிரிநிலை ஏகாரம் தொகுத்தலாயிற்று. 'பிறவிக்கு அஞ்சுகின்ற' என்பது இசையெச்சம்.

இதனால், 'ஞான நடனத்தின்வழி நிற்பின் பிறவி அறும்' என மேலைக் குறளால் உய்த்துணர நின்றது. பின்னும் வலியுறுத்தற் பொருட்டு எடுத்தோதி யாப்புறுக்கப்பட்டது.

எட்டாவது குறள்,

88. "வாசி யருளி யவ்வை வாழ்விக்கும் மற்றதுவே
ஆசில் உருவமுமாம் அங்கு"

என வரும்.

### இதன் பொருள்

வா சி அருளி யவ்வை வாழ்விக்கும் — (திருவைந் தெழுத்தைச் சிவ முதலாக ஓதினால்) வகாரத்தால் குறிக்கப்படும் திருவருள் சிகாரத்தால் குறிக்கப்படும் சிவத்தை அடைவித்து, யகாரத்தால் குறிக்கப்படும் ஆன்மாவைச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வில் வாழச் செய்யும்; மற்று அதுவே அங்கு ஆசு இல் உருவமும் ஆம் — இன்னும் அந்த அருளே அம் முத்தி நிலைக்கண் ஆன்மாவிற்குக் குற்றம் அற்ற உடம்பாயும் நிற்கும்.

### விளக்கவுரை

இங்கு எழுத்துக்களையும், பொருளையும் உடன் நிகழக் கூறினார். மற்று, வினைமாற்று, 'மற்றும்' என்னும் இறந்தது தழுவிய எச்ச உம்மை தொகுத்தலாயிற்று. "உடம்பு" என்றது, அவ்வாழ்வின் பயனை நுகர்தற்குத் துணையாதற் சிறப்பைக் கூறியவாறு. பெத்த நிலையில் உலகப் பயனை நுகர்தற்கு உலகப் பகுதியாகிய பூதம் முதலியவை கருவியாய் நின்று உடம்பெனப்படுதலால், முத்தி நிலையில் இறையின்பத்தை நுகர்தற்குத் துணையாய் நிற்கின்ற அருளையும் உயிருக்கு 'உடம்பு' என்பர். இவ்வாறன்றி இறைவனுக்குயாண்டும் அருளே திருமேனியாய் நிற்றலை இங்குக் கூறுதற்கு யாதோர் இயைபும் இன்றென்க.

இதனால், 'சிவமுதலே யாமாறு சேரின் பவம் தீர்தல் இவ்வாறு' என்பது கூறப்பட்டது.

ஒன்பதாவது குறள்,

89. "ஆசின்நவா நாப்பண் அடையா தருளினால்
வாசியிடை நிற்கை வழக்கு"

என வரும்.

### இதன் பொருள்

ஆசின் ந. வா நாப்பண் அடையாது – குற்றம் உடைய திரோதானத்தைக் குறிப்பதாகிய நகாரத்திற்கும், பின் வகாரத்திற்கும் நடுவிடத்தை ஆன்ம எழுத்தாகிய யகாரம் அடையாமல்; வா சி இடை நிற்கை வழக்கு – திருவருளைக் குறிப்பதாகிய வகாரத்திற்கும், சிவத்தைக்

குறிப்பதாகிய சிகாரத்திற்கும் நடு நிற்றலே முத்தி முறைமையாம்.

### விளக்கவுரை

இது திருவைந்தெழுத்தை ஓதும் முறையையும், அம் முறைப்படியே அனுபவத்தில் நிற்கும் முறையையும் ஒருங்கு உணர்த்திற்று என்க. "ஆசின்" என்பது நகாரத்திற்கு அடை. திருவைந்தெழுத்தைச் சிகார முதலாக ஓதியவழி யகாரம் நகர வகரங்கட்கு இடை நிற்கும் ஆதலின் 'அம்முறையும் முத்தி முறைமை அன்' றென இக்குறளால் விலக்கி, 'வாசி இடை நிற்க ஓதுதலே முத்தி பஞ்சாக்கரம்' என்பது உணர்த்தப் பட்டது. இதனை அதிசூக்கும பஞ்சாக்கரம் என்க. 'இம் முத்தி பஞ்சாக்கரம் உபதேச முறையால் உணரத்தக்கது' என்னும் கருத்தால், சிவஞான போத எட்டாஞ் சூத்திரத்து மூலத்தினும், உரையினும் 'விதிப்படி' எனக் குறிப்பாகவே கூறப்பட்டது. உண்மை விளக்கத்தினும் "விதிப்படியோது அஞ்செழுத்துமே" என்றே கூறப்பட்டது. அதனால், இது நிருவாண தீக்கைக்கண் குரு முகமாக அறியத்தக்கது என்க.

*"உடையாள் உன்றன் நடுவிருக்கும்;*
*உடையாள் நடுவுள் நீ இருத்தி;*
*அடியேன் நடுவுள் இருவீரும்*
*இருப்பதானால்"*

என்னும் திருவாசகப் பகுதியில் திருவைந் தெழுத்தை வைத்துக் காட்டும் முறையையும் அவரவர் தாம் தாம் அறிந்தவாறு வேறு வேறாகக் கூறுவர். உண்மை, உபதேசத்தால் உணரத்தக்கது.

இதனால், 'திருவைந்தெழுத்து' பவம் தீர்தற்கு நேரே வாயிலாம் முறைமை இது' என்பது கூறப்பட்டது. எனவே, மேல், "சிவமுதலே யாமாறு சேருமேல் தீரும் பவம்" என்றது, வழிமுறையால் வாயிலாதல் கூறியவாறாதல் அறிக.

பத்தாவது குறள்,

90. "எல்லா வகையும் இயம்பும் இவன்அகன்று
நில்லா வகையை நினைந்து"

என வரும்.

### இதன் பொருள்

எல்லா வகையும் இயம்பும் – திருவைந்தெழுத்தின் முறைமையை ஒரு வகையாகக் கூறாமல், இவ்வாறு பல வகையாக ஆகமங்கள் கூறுதல்; இவன் அகன்று நில்லாவகையை நினைந்து – புருடன் பாசத்தினின்றும் உடனே நீங்கமாட்டாது படிமுறையானே நீங்கும் இயல்புடையனாதல் கருதியாம்.

### விளக்கவுரை

எனவே, 'அப் படிமுறையானே அதனைப் பெற்று ஓதிப் பயன் பெறல் வேண்டும்' என்பதாம். "அகன்று நில்லா வகையை நினைந்து" என்பதற்கு, 'திருவருளை விடாது பற்றி நிற்றல் வேண்டி' என உரைப்பர் நிரம்ப அழகிய தேசிகர்.

இதனால், திருவைந்தெழுத்தின் வகைபற்றி நிகழ்வதோர் ஐயம் அறுக்கப்பட்டது.

பத்தாம் அதிகாரம்

## அணைந்தோர் தன்மை

அஃதாவது, பாசத்தின் நீங்கிச் சிவத்தைத் தலைப்பட்டவரது இயல்பு. 'அணைந்தோர்' என உயர்திணையாற் கூறுதலின், இவர், மக்களுடம்பில் நின்றே சிவத்தைத் தலைப்பட்டு நிற்பவராதல் பெறப்படும். இவரை வடநூலார், 'சீவன் முத்தர்' என்ப. மேலை யதிகாரத்திற் கூறப்பட்டவாறு ஐந்தெழுத்துச் சாதனையில் நின்று பயன் அடைந்தவரது இயல்பைக் கூறுதலின், இவ்வதிகாரம் அதனோடு இயைபுடையதாயிற்று.

முதற் குறள்,

91. "ஓங்குணர்வி னுள்ளடங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல்"

என வரும்.

### இதன் பொருள்

ஓங்கு உணர்வின் உள் அடங்கி — தமது உணர்வைக் கீழ்ப்படுத்துத் தான் மேற்பட்டு விளங்குகின்ற சிவனது ஞானத்திற்கு உள்ளாய் அடங்கி; இன்பு உள்ளத்துள் அடங்க — அங்ஙனம் அடங்கி நிற்றலால் விளைகின்ற பேரின்பம் தமது அறிவின்கண்ணே அடங்கி நிற்க; தூங்குவர் — அவ்வின்பத்தில் திளைத்திருத்தலைத் தவிர வேறொன்றை அறியாதவர்க்கு; சொல் ஏது உண்டு — சொல் ஒன்றேனும் உண்டாகுமோ!

### விளக்கவுரை

'ஏது உண்டு' என்னும் வினா, யாதும் இன்மைக் குறித்தது. சொல், நினைவின் வழியதாதலின், சொல் எழாமையால், நினைவெழாமை கூறியவாறு. இன்பத்துள் ஆழ்ந்தமையால் நினைவு மேல் எழாதாயிற்று. ஆகவே, நினைவும், அதன்வழிச் சொல்லும் எழுந்தவழி இன்ப நுகர்ச்சி நீங்குதல் பெறப்படும். இஃது இயல்பாக, இதனை எடுத்தோதி வலியுறுத்தது, இவ்வின்பத்தைத் தலைப் பட்டோர், பயிற்சி வயத்தால் நினைவு தலையெடுக்கு மாயின், அங்ஙனம் எடாதவாறு அறிவினால் அடக்கி அவ்வின்பத்துள் ஆழ்த்துவர் என்பது உணர்த்துதற் பொருட்டாம். அதனால், அஃது அணைந்தோரது தன்மையாதல் அறியப்படும். "ஓங்குணர்வி னுள்ளடங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத் - தூங்குவர்" என்றது, அணைந்தோராவார் இவர்' என்பதனை அனுவாத முகத்தாற் கூறியவாறு. 'தூங்குவர்க்கு" என்பதில் நான்கனுருபு தொகுத்தலாயிற்று. இவ்வாறன்றி, 'அணைந்தோர்' என்னும் எழுவாயை அதிகாரத்தால் வருதுவித்ா 'தூங்குவர்' என வேறு தொடராக முடித்து, 'அணைந்தோராவார் இவர்' என்பதனை எடுத்தோதிய தாகவே உரைப்பாரும் உளர்.

இதனால், அணைந்தோராவர் இவர் என்பதும், அவர், தாம் பெற்ற இன்பத்தினின்றும் நீங்காமையும் கூறப்பட்டன

இரண்டாவது குறள்,

92. "ஐந்தொழிலும் காரணர்க ளாந்தொழிலும் போகநுகர்
வெந்தொழிலும் மேவார் மிக"

என வரும்.

### இதன் பொருள்

ஐந்தொழிலும் — சிவனைப் போலவே நின்று படைத்தல் முதலிய ஐந்து தொழிலையும் செய்தலையும்; காரணர்கள் ஆம் தொழிலும் — அவ்வாறன்றிச் சிவனது ஆணையைப் பெற்றுப் படைத்தல் முதலியவற்றில் ஒவ்வொரு தொழிற்கு முதல்வராய் நின்று செய்தலையும்; போகம் நுகர் வெந் தொழிலும் — முன்னை வினையின் பயன்களை விருப்பு வெறுப்புக்களுடன் கூடி அனுபவிக்கின்ற கொடிய செயலைச் செய்தலையும்; மிக மேவார் — சிவனை அணைந்தோர் சிறிதும் விரும்பார்.

### விளக்கவுரை

அவை யாவும் உயிர்கட்குத் துன்பமாவனவே யல்லது இன்பம் ஆகாமையை உணர்ந்தோராதலின் விரும்பார்' என்றபடி. இதனால், 'உயிர் சிவானுபவம் ஒன்றையே அனுபவிக்கற்பாலது' என்பது விளங்கும்.

*"உம்பர்பிரான் உற்பத்தி யாதிகளுக்கு சூரியன்;*
*உயிர்தானும் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தே"*
(சூ. 11 - 10)

என்றது சிவஞான சித்தி. இங்ஙனமாகவே, உலகத்தார் வியப்பப் பல விம்மிதங்களைச் செய்ய விரும்புதலும் அஞ்ஞானத்தின் விளைவாகிய பந்தமா

வதல்லது, மெய்ஞ்ஞானத்தின் விளைவாகிய வீடாகாமை, தானே பெறப்படும். வினைப்பயன்கள் விளைவுழி விருப்பும், வெறுப்புங் கொண்டு அவற்றில் அழுந்துதல் பிறவிக்குக் காரணமாதலின் அதனை, "வெந்தொழில்" என்றார். "மிக" என்பது மேவுதலைச் சிறப்பியாது, "மேவார்" என்ற எதிர் மறையைச் சிறப்பித்தது.

இதனால், உயிர்க்கு முடிநிலை இன்பமான சிவானுபவத்தைப் பெற்றோர், வேறொன்றை விரும்பாமை கூறப்பட்டது. இதனை, "கொள்ளேன் புரந்தரன் மால் அயன் வாழ்வு" (திருவாசகம் - திருச்சதகம் - 2) கொன்றைத் - தொங்கலான் அடியவர்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே" (திருமுறை - 2 - 41, 7) என்பனபோன்ற திருமொழிகள்பற்றி அறிக. இதனானே, 'முத்தியடைந்த ஆன்மாக்கள் சிவனோடு ஒப்பநின்று ஐந்தொழில் செய்யும்' எனக் கூறும் சிவசமவாத சைவர்கள் கொள்கை மறுக்கப்பட்டது.

மூன்றாவது குறள்,

93. "எல்லாம் அறியும் அறிவுறினும் ஈங்கிவர்ஒன்
றல்லா தறியார் அற"

என வரும்.

**இதன் பொருள்**

எல்லாம் அறியும் அறிவு உறினும் — எல்லாவற்றையும் அறியும் இயல்பினதாகிய சிவனது அறிவைத் தம் அறிவிற்கு முதலாகத் தாம் பெற்றாராயினும்; இவர் — இவ்வணைந்தோர்; ஈங்கு — இம் முத்தி நிலையில்; ஒன்று அல்லது அற அறியார் — அவ்வறிவைக் கொண்டு ஒரு

பொருளாகிய சிவனையன்றி வேறொன்றை அறிதலைச் சிறிதும் செய்யார்.

### விளக்கவுரை

சிவஞானம் கண்ணாகச் சிவனை யறியாது பிறிதொன்றை அறிதல் பந்தமாய் முடியும் ஆதலின், அறிவராகிய அவர், பொற்கொழுக் கொண்டு வரகுக்கு உழுவதுபோல அவ்வாறு செய்யார் என்பதாம்.

*"பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவதென்*
*அக்கொழு நீயறிந் துந்தீபற*
*அறிந்தறி யாவண்ணம் உந்தீபற"*

(திருவுந்தியார் - 38)

என்றது காண்க.

இதனால், 'உயிர் முத்தி நிலையிலும் சிவானுபவம் ஒன்றையே நுகருமாயின், பிறவற்றை அறியமாட்டாமை அதற்கு இழுக்காம்' எனத்தடை நிகழ்த்துவாரது கூற்றுப் பற்றி நிகழும் ஐயம், 'பிறவற்றை அறியாமை அறிய மாட்டாமையின் அன்று; விரும்பாமை யானே யாம்' என விடை கூறி நீக்கப்பட்டது.

நான்காவது குறள்,

94. *"புலன் அடக்கித் தம்முதற்கண் புக்குறுவர் போதார்*
*தலன்நடக்கும் ஆமை தக"*

என வரும்.

### இதன் பொருள்

தலன் நடக்கும் ஆமை தக — நீரில் இல்லாது நிலத்தின் கண் உலாவும் — ஆமையோடு ஒப்ப; புலன் அடக்கி

— ஐம்புலன்களில் செல்கின்ற மனத்தை அவ்வாறு செல்லாமல் அடக்கி, தம் முதற்கண் புக்கு உறுவார் — தம்அறிவிற்கு முதலாய் உள்ள சிவனது வியாபகத்தினுள்ளே அடங்கி நிற்பார் சிவனை அணைந்தோர்; போதார் — அந்நிலையினின்றும் நீங்கிப் புறத்து வாரார்.

**விளக்கவுரை**

ஆமை நீரின்கண் இன்றி நிலத்தின்கண் இயங்கும் பொழுது தனக்குத் தீங்கு வருவதாக உணரின், நான்கு கால் தலை என்னும் ஐந்து உறுப்புக்களையும்விரையச் சுருக்கி ஓட்டினுள்ளே அடங்கிப் புறப்படாது கிடக்குமாகலின் அஃது உலகில் வாழுங்கால் ஐம்புல உணர்வால் உலக வாசனை தாக்குவதாக உணரின், அவ்வுணர்வைஅடக்கிச் சிவஞானத்துள்ளே ஒடுங்கி உலகை நினையாதிருக்கும் அணைந்தோர்க்கு உவமையாயிற்று. "உறுவர்" என்றே ஒழியாது, "போதார்" என எதிர்மறுத்தும் கூறியதும், ஓட்டினுட் கிடந்த ஆமை பின்னர்ப் புறப்படுதல் உண்டாதலின், அவ்வாறு இவர் புறப்படுதல் இல்லை என்பது உணர்த்துதற்கு

இதனால், அணைந்தோர் உலக வாதனை நீங்கி நிற்குமாறு கூறப்பட்டது.

ஐந்தாவது குறள்,

95. "அவனைஅகன் றெங்கின்றாம் ஆங்கவனா எங்கும்
இவனையொழிந் துண்டாத லில்"

என வரும்.

**இதன் பொருள்**

எங்கு அவனை அகன்று இன்றாம் — யாதோரிடமும்

சிவனையின்றி யில்லையாம். ஆங்கு — அவ்வாறே; அவன் ஆ இவனை, ஒழிந்து எங்கும் உண்டாதல் இல் — சிவனை அணைந்த இந்தச் சீவன் முத்தனையின்றி யாதோர் இடமும் உளதாதல் இல்லை.

### விளக்கவுரை

என்றது, 'சிவனை அணைந்தோரும் சிவனைப் போலவே எங்கும் வியாபகராய் நிற்பர்' என்றவாறு. எனவே, மலப் பிணிப்பால் பெத்தத்தில் தனது வியாபகத்தை யிழந்து அணுவாய் நின்ற ஆன்மா, மலம் நீங்கிய முத்தி நிலையில் இயல்பாய தனது வியாபாகத்தைப் பெற்றுக் காலமும், இடமும் ஆயவரையறையின்றி, எங்குமாய், எஞ்ஞான்றும் சிவனது இன்பத்தை நுகர்ந்து நிற்கும் என்க.

*"கண்ணுதல்தன் நிறைவதனிற் கலந்து, காயங்*
*கழிந்தக்கால் எங்குமாய்க் கருதரன்போல் நிற்பன்"*

(சிவஞானசித்தி சூ 8. 31)

எனக் கூறுதலால், இந்நிலை, உடம்பு உள்ள பொழுது பசு கரணங்கள் சிவ கரணங்களாய் ஏக தேசக் காட்சியின்றி வியாபக உணர்வையே தந்து நிற்கும் முறையாலும், உடம்பு நீங்கிய காலத்துச் சிவஞானமே பற்றாக நேர் நிலையாலும் (சாட்சாத்தாயும்) காணப்படும் என்பது அறிக.

இதனால், 'உடம்புடைய யோகிகள் உடம்பின்கண் நின்றாராயினும், அவற்றால் ஏக தேசிகளாய் நில்லாது வியாபகம் உடையராய் நிற்பர்' என்பது கூறப்பட்டது.

'அங்ஙனம் ஆதல் எவ்வாறு கூடும்' என

மலைவார்க்கு, 'சீவத் தன்மை நீங்கிச் சிவம் ஆன தன்மையாலே கூடுவதாம்' என மலைவு நீக்குவார், "அவன் ஆக" என்றார். கடைக் குறையாய் நின்ற "ஆக" என்னும் செயவென் எச்சம், 'மழை பெய்யக் குளம் நிறைந்தது என்பதிற்போலக் காரணப் பொருட்டாய் நின்றது. 'அவனாம்' என்பது பாடமாயின், 'அவனாம் இவனை ஒழிந்து எங்கும் உண்டாதல் இல்' என மாறிக் கூட்டி, உடம்பொடு புணர்த்தலால் மலைவு நீக்கியதாக உரைக்க, சீவத் தன்மை நீங்கிச் சிவமாம் தன்மையைப் பெற்றார் எங்குமாய் நிற்றல் இயல்பாதலை இனிது விளக்குவார், "அவனையகன் றெங்கின்றாம் ஆங்கு" எனச் சிவனது தன்மையாய வியாபக நிலையை எடுத்தோதி, உவமை கூறினார். முதற்கண் வந்த 'எங்கு' என்பதில் உம்மை தொகுத்தலாயிற்று. இரண்டிடத்தும், 'எங்கு' என்னும் இடைச் சொல், பெயர்ச்சொல் தன்மை எய்தி நின்றது.

ஆறாவது குறள்,

96. "உள்ளும் புறம்பும் ஒருதன்மைக் காட்சியருக்
கெள்ளும் திறம்ஏது மில்"

என வரும்.

**இதன் பொருள்**

உள்ளும் புறம்பும் ஒருதன்மைக் காட்சியருக்கு — அகத்தும் புறத்தும் ஒரு தன்மையேயாய உணர்வை உடைய அணைந்தோர்க்கு; எள்ளும் திறம் ஏதும்இல் — குற்றம்' என்று இகழப்படும் கூற்றினை உடைய செயல் ஒன்றேனும் உண்டாதல் இல்லை.

**விளக்கவுரை**

அக நோக்கினை முன்னர்க் கூறினமையால், புற நோக்கும் அக நோக்கின் தன்மைத்தாதல் பெறப்பட்டது. அக நோக்கிற்குப் புலம் மெய்ப்பொருளே என்பது வெளி. அகநோக்கு அடையப்பெற்றார் ஓரோவழிப்புற நோக்குடைய ராயபொழுதும் தன்மை திரியார். அதற்குக் காரணம், அகநோக்கிற்குப் புலனாய் நிற்கும் மெய்ப்பொருள் அகம், புறம் என்னும் வேறுபாடின்றி யாண்டும் நீக்கமற நிறைந்து நிற்றலாம். ஆகவே, கனியிருப்பக் காய் கவர்வாரின்மை போல, மெய்ப்பொருளை அணைந்தோர், புறத்துப் புலனாம் பொருளினும் மெய்ப்பொருள் உளதாக அதனை விடுத்துப் பொய்ப் பொருளைப் பற்றார் என்பது நன்குணர்ந்து கொள்க. இதனையே,

*"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்ப தறிவு"*

(குறள் - 355)

என்றார் திருவள்ளுவ நாயனார். "ஒரு தன்மைக்காட்சியர்க்கு" என்றதனால், அத்தன்மை யராதலையும் அனுவாத முகத்தால் இதனானே கொள்க.

'குற்றம்' என்று இகழப்படும் கூற்றினை உடையவை, பொய்ப் பொருள் பற்றி வரும் காம வெகுளி மயக்கங்கள், பொய்ப் பொருள் தோன்றாதொழியவே அவைபற்றி வரும் குற்றங்களும் இலவாயின. ஆகவே, அக்குற்றங்களால் வரும் வினையும், அவ்வினையால் வரும் பிறப்பும் இல்லையாதல், தானே பெறப்பட்டது.

*"காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்*
*நாமம் கெடக்கெடும் நோய்"*

(குறள் - 360)

என்பதும் இக்கருத்தே பற்றி வந்தது.

சிவனை அணைந்தோர்க்கு உணர்வு புறத்துச் செல்லுதல் ஊழ் காரணமாகவாம். அவ்வாறு செல்லினும் அவர் தம் இயல்பில் திரியார் என்க.

இதனால், அணைந்தோர்க்கு ஊழ் உடலளவாய் நிகழ்வதல்லது, உணர்வினை திர்க்கமாட்டாமை, ஏதுவுடன் கூறப்பட்டது.

ஏழாவது குறள்,

97. "உறுந்தொழிற்குக் தக்க பயன்உலகம் தத்தம்
வருந்தொழிற்கு வாய்மை பயன்"

என வரும்.

**இதன் பொருள்**

உறும் தொழிற்குத் தக்க பயன் உலகம் – உலகர் தாம் முனைந்து பொருந்திப் பற்றோடு செய்யும் தொழில்களுக்கு ஏற்ற பயன் உலகமாகும். தம் தம் வறுந்தொழிற்கு வாய்மை பயன் – அணைந்தோர் தாம் முனைந்து செய்யாது அவரவரும் தம்மைத் திருவருள் செலுத்திய வழியே சென்று பற்றின்றிச் செய்யும் தொழில்களுக்குப் பயன் மெய்ப்பொருளாகிய சிவனேயாவான்.

**விளக்கவுரை**

"உறுந்தொழில், வறுந்தொழில்" என்ற உடம்பொடு

புணர்த்தலால், உலகரும், அணைந்தோரும் தாம்தாம் தொழில் செய்யுமாறு இவை என்பது குறிக்கப்பட்டது. "தக்க பயன்" என்றது, காரண காரிய இயைபினால் அவை மாறி நிகழாமையை வலியுறுத்தியவாறு. உலகம் பயனாதல், இன்பமும், துன்பமும் மாறி மாறி வரச் செய்யுமாற்றானும், வாய்மை பயனாதல், என்றும் உள்ளதாய வரம்பிலின்பத்தை வழங்குமாற்றானுமாம். அணைந்தோரது தொழிற்கு வாய்மையே பயனாதல் இனிது விளங்குதற்பொருட்டு, உலகரது தொழிலின் பயனையும் உடன் வைத்துக் கூறினார்.

இதனால், அணைந்தோர், புறத்தே உலகர்போலவே உண்டும், பூசியும், உடுத்தும், பிறவற்றைச் செய்தும் ஒழுகினாராயினும், அவர்க்கு உலகம் நுகர்ச்சிப் பொருளாகாது, சிவமே நுகர்ச்சிப் பொருளாதல் கூறப்பட்டது. இதனானே வறுந்தொழில் செய்யமாட்டாது உறுந்தொழிலே செய்யும் உலகரது செயல் தவநெறியாகவே நிகழினும் அவை பிறப்பினை நீக்க மாட்டா என்பதும் போதரும், இதனை,

*"நாடுகளிற் புக்குழன்றும், காடுகளிற் சரித்தும்*
*நாகமுழை புக்கிருந்தும், தாகமுதல் தவிர்ந்தும்,*
*நீடுபல காலங்கள் நித்தரா யிருந்தும்*
*நின்மலஞா னத்தையில்லார் நிகழ்ந்திடுவர் பிறப்பில்*
*ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே யிடைக்கே*
*எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும் இறைஞானம்*
*கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்*
*குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே யிருப்பர்"*

என்னும் சிவஞான சித்திச் செய்யுளால்(சுபக்308) இனிதுணர்க.

எட்டாவது குறள்,

98."ஏன்ற வினைஉடலோ டேகும்; இடையேறும் வினை
தோன்றில் அருளே சுடும்"

என வரும்.

### இதன் பொருள்

ஏன்ற வினை உடலோடு ஏகும் – எடுத்த இப்பிறப்பில் நுகரத் தக்கனவாகப் பழவினையினின்றும் முகந்து கொண்ட வினைகள், இவ்வுடம்பு நீங்குங் காலத்து நுகரப்பட்டு முடிந்தொழியும்; இடை ஏறும் வினை தோன்றில் – அவ்வினையை நுகருமிடத்து இடையே தோன்றி வளர்வதாய புதுவினை தோன்றுமாயின் அதனை; அருளே சுடும் – எஞ்சிக் கிடந்த பழவினையை முன்பு சுட்டழித்த அந்த அருள்தானே சுட்டழிக்கும்.

### விளக்கவுரை

பிறவிதோறும் செய்யப்படும் வினைகளுள் உடனே பயன் தருவன போக, எஞ்சிய வினைகள் தத்தமக்குரிய காலத்தே பயனாய் வரும். அதுகாறும் ஈண்டிக் கிடக்கும் அவைகட்கு, 'சஞ்சிதம்' என்பது பெயர். அவற்றுள் பக்குவப்பட்டவற்றை எடுத்துக்கொண்டு ஒரு பிறப்புத் தோன்றும். அப்பிறப்பில் அவ்வினைகள் வந்து பயனை ஊட்டுவிக்கும். அக்காலத்து அவை 'பிராரத்தம்' எனப் பெயர்பெறும். அந்தப் பிராரத்தத்தை நுகரும் பொழுது, யான், எனது என்னும் முனைப்புடன் இன்பத்தில் விருப்பும், துன்பத்தில் வெறுப்பும் கொண்டன்றி நுகர்தல் இயலாது. அதனால் அந்த முனைப்போடு கூடிய விருப்பு வெறுப்புக்களால் நல்லனவும், தீயனவும் ஆகிய

புதுவினைகள் தோன்றும். அப்புதுவினைகள், ‘ஆகாமியம்’ எனப் பெயர் பெறும். பின்பு ஆகாமியமே சஞ்சிதமாயும், பிராரத்த மாயும் வரும். இவ்வாறு நிகழ்வது வினைச்சூழல், இச்சூழலில் ஆன்மா அகப்பட்டு நிற்றற்குக் காரணம், அஞ்ஞானத்தின் வழி ‘யான்’ என்றும், ‘எனது’ என்றும் செருக்கி நிற்றலே, அச்செருக்கினை ஆன்மா பக்குவம் பெறுதற்கு முன் இறைவனாலும் நீக்குதல் இயலாது. அதனால் ஆன்மாபக்குவம் எய்தும் நிலையை அவன் இடையறாது நோக்கி நிற்கின்றான். பக்குவம் எய்தியவுடன் வெளிப்பட்டு அஞ்ஞானத்தைப் போக்கி, மெய்ஞ்ஞானத்தை அருளுகின்றான். அதுவே, ‘நிருவாண தீக்கை’ எனப்படுகின்றது. எனவே, அஞ்ஞானத்தைப் போக்கும்வழி அதன் செயல் நிகழ்ச்சிக்குச் சார்பாயுள்ள சஞ்சிதத்தை அழித்தாலல்லது அவ்வஞ்ஞானம் நீங்காது. அஞ்ஞானம் நீங்காதபொழுது, மெய்ஞ்ஞானம் விளங்காது.

ஆகவே, மெய்ஞ்ஞானத்தைத் தர வருகின்ற திருவருள் முன்னர்ச் சஞ்சிதத்தைச் சுட்டழித்தே, பின்னர் மெய்ஞ்ஞானத்தை வழங்கும். அதனால், பின்னர் ஆகாமிய வினை தோன்றுமாயின், அது வளர்ந்து சஞ்சிதமாய் முற்றாதவாறு அந்த அருளே அதனை விரைய அழிக்கும் என்றற்கும் “அருளே சுடும்” என்றார். எனவே, “அருளே சுடும்” என்பதற்கு, ‘அவ்வருளே சுடும்’ எனப் பண்டறி சுட்டு வருவித்துரைத்தல் கருத்தாயிற்று. இதனுள் “ஏன்றவினை” என்றது பிராரத்தமும், “இடை ஏறும் வினை” என்றது ஆகாமியமும் ஆதல் அறிந்து கொள்க.

‘திருவருட்கு உரியராயினாரை அவர்தம் பழவினை வந்து பற்ற மாட்டாமையானும், அவற்றிற்கு வேறு

சார்பின்மையானும் அவை தாமே கெட்டொழியும்' என்பாரும் உளர். பழ வினை உள்ள துணையும் திருவருட்கு உரியராதல் கூடாமை மேற் கூறியவாற்றான் விளங்கிக் கிடத்தலின், 'திருவருட்கு உரியராயின பின்பே அவை அழியும்' என்றல் பொருந்தாமை அறிக.

"தோன்றில்" என்றதனால், 'அணைந்தோர்க்குப் பயிற்சி வயத்தால் எப்பொழுதாயினும் ஒருகால் தன் முனைப்பும், அது வழியாக விருப்பு வெறுப்பும், அவை வழியாக ஆகாமியமும் தோன்றுதலல்லது, நம்மனோர்க்குப் போல அவை ஒழிவின்றித் தோன்றா" என்பது பெறப்பட்டது. "ஏறும்வினை" என்றதில் மகரக் குறுக்கம் அலகு பெறாது நின்றது.

இதனால், அணைந்தோர்க்குப் பிராரத்தமும், ஆகாமியமும் நீங்குமாறு கூறி, சஞ்சிதம் இன்மையும் நினைப்பிக்கப் பட்டது.

ஒன்பதாவது குறள்,

99. "மும்மை தரும்வினைகள் மூளாவாம்; மூதறிவார்க்
கம்மையும் இம்மையே யாம்"

என வரும்.

**இதன் பொருள்**

மும்மை தரும் வினைகள் மூதறிவார்க்கு மூளா — பிறர்க்கெல்லாம் இம்மை, அம்மை, மறுமை என்னும் மூவகைப் பயனையும் தருவனவாய் வளர்கின்ற வினைகள், உயர்ந்த ஞானத்தை உடையவர்க்கு வளரமாட்டா, அதனால்; அம்மையும் இம்மையே ஆம் — அவர்கட்கு உடம்பு நீங்கியபின்

உளவாகின்ற வீட்டு நிலை, உடம்பு உள்ளபொழுதே உளதாம்.

### விளக்கவுரை

இதுவே சீவன் முத்தி நிலை என்க. 'இம்மை, அம்மை, மறுமை' எனக் கூறும் மும்மையுள் அம்மை துறக்க நிரயங்களிற் செல்லும் நிலையையும், மறுமை மீள இந்நிலத்திற் பிறக்கும் நிலையையும் குறிக்கும்' ஆயினும் இப்பாட்டுள்,'அம்மை' என்றது உடம்பு நீங்கிய நிலையை; இதுவே பரமுத்திநிலை. "மும்மை தரும் வினைகள் மூளா" என்றது ஏதுக் கூறியதாதலின், அவ்விடத்து, 'அதனால்' என்னும் சொல்லெச்சம் வருவிக்கப்பட்டது.

அம்மையில் உடம்பு இன்மையால் வினைகள் வந்து சிவானந்த நுகர்ச்சியைத் தடை செய்ய மாட்டா. உடம்பு உள்ளதாயினும் அதன் கண் பற்று இன்மையால் வினைகள் மூளாமையின், இம்மையிலும் சிவஞானியர்க்குச் சிவானந்த நுகர்ச்சிக்குத் தடையில்லை. அதனால், "அம்மையும் இம்மையேயாம்" என்றார்.

இனி, மேற்கூறியவாற்றால் மூதறிவார்க்கும் பயிற்சி வயத்தால் ஒரோவொருகால் வினை மூட்சிக்கு வாயில் உண்டாகுமாயின், அது நீங்குதற் பொருட்டே திருக்கோயில் வழிபாடு, சிவனடியார் மாட்டு இணக்கம், திருவைந்தெழுத்து எண்ணம் என்பவற்றை அவர் மேற்கொள்வர். இதனை ஞானசம்பந்தர், நாவுக்கரசர் முதலிய அருளாளரது வரலாற்றான் அறிக.

இதனால், அணைந்தோர்க்கு இம்மையிலே சிவானந்த விளைவு இடையறாமை கூறப்பட்டது.

பத்தாவது குறள்,

100. "கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக"

என வரும்.

**இதன் பொருள்**

கள்ளத் தலைவர் துயர் கருதி — சிவனது தலைமையைத் தமதாக்கிக் கொள்கின்ற மடவோர், அம்மடமை காரணமாகப் படும் துன்பத்தை எண்ணி; தம் கருணை வெள்ளத்து மிக அலைவர் — மூதறிவார் தமது இரக்க மிகுதியால் மிகவும் பரிதலைச் செய்வர்.

**விளக்கவுரை**

யாதொரு செயற்கும் தம்மையே தலைவராகக் கொள்ளுதலே 'யான், எனது' என்னும் செருக்கு. 'அதனால் விளைவதே வினை' என்பது மேலே காட்டப்பட்டது. வினை விளைப்பதும் துன்பமே என்பது வெளிப்படை. எனவே துன்பம் நீங்குதற்கு வாயில் சிவனை வணங்கி ஒழுகுதலேயாம்.

*"அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்*
*தன்னோய்போற் போற்றாக் கடை"*

(குறள் - 315)

என்றவாறு, உலகர் தமது அஞ்ஞானத்தாற் படுந்துன்பத்தைக் கண்டவழி மூதறிவார்க்கு இரக்கம் மிகுதலும் அவ்விரக்க மிகுதியால், உலகர் தாம் கேட்க ஒருப்பட்டிலராயினும் உண்மையை அறிவுறுத்த முற்படுதலும் அவர்க்கு இயல்பின் உளவாம் என்க.

இதனை,

*"நம்பொருள்நம் மக்கள்என்று நச்சியிச்சை செய்துநீர்
அம்பரம் அடைந்துசால அல்லல்உய்ப்ப தன்முனம்
உம்பர்நாதன் உத்தமன் ஒளிமிகுந்த செஞ்சடை
நம்பன்மேவும் நன்னகர் நலங்கொள்காழி சேர்மினே"*

(திருமுறை - 2, 97, 1)

*"விடுத்த தூதுவர் வந்து வினைக்குழிப்
படுத்த போது பயனிலை பாவிகாள்;
அடுத்த கின்னரங் கேட்கும்வாட் போக்கியை
எடுத்தும் ஏத்தியும் இன்புறு மின்களே"*

(திருமுறை - 5, 86, 2)

என்றாற்போலும் திருமொழிகளான் அறிக.

இதனால், அணைந்தோர், தம்மால் அணையப்பட்ட அச்சிவன் போலவே பேரருள் உடையராய் நின்று, உலகிற்கு உய்தி தருதல் கூறப்பட்டது

திருவருட் பயன் விளக்க உரை முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# திருவருட்பயன்

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி

உ
சிவமயம்

## சமயாசாரியர் துதி

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல் போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

## சந்தானாசாரியர் துதி

ஈராண்டில் சிவஞானம் பெற்றுயர்ந்த
மெய்கண்டார் இணைத்தாள் போற்றி
நாராண்ட பல்லடியார்க்கு அருள்புரிந்த
அருள்நந்தி நற்றுள் போற்றி
நீராண்ட கடந்தை நகர் மறைஞான
சம்பந்தர் நிழற்றாள் போற்றி
சீராண்ட தில்லைநகர் உமாபதியார்
செம்பதுமத் திருத்தாள் போற்றி.

## சமயாசாரியர் திருநட்சத்திரங்கள்

சித்திரைச் சதயத்து அப்பர்; சிறந்த வைகாசி மூலத்து
அத்தரைப் பணி சம்பந்தர்; ஆனிமா மகத்தில் அந்த
முத்தமிழ் வாத வூரர்; முதியநல் ஆடி தன்னில்
சுத்தமாம் சுவாதி நாளில் சுந்தரர் கயிலை சேர்ந்தார்.

## சந்தானசாரியர் திருநட்சத்திரங்கள்

சித்திரை அத்தம் உமாபதி; ஆவணித் திங்கள் தனில்
உத்திரம் சீர்கொள் மறைஞான சம்பந்தர்; ஓதுகன்னி
சுத்தமெய்ப் பூரம் அருணந்தி; ஐப்பசிச் சுவாதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

பாரதி டிஜிட்டல் பிரிண்டர்ஸ், மயிலாடுதுறை